# கல்கி



சென்னையில் அத்வானி

– நேரடி ரிப்போர்ட்

KALKI
8.6.97
ரூ. 4.00

# தஞ்சாவூர்க் கதம்பம்

– சிறப்புப் பகுதி



# "அவர்களுக்கு எப்படி டிக்கெட் வாங்கலாம்?"

டாட்டா சியரா ரதத்தில் ஸ்வர்ண ஜெயந்தி யாத்திரை புறப்பட்ட அத்வானி, கர்நாடகா, கேரளா வழியாகத் தமிழ் நாட்டுக்குச் சென்ற வாரம் வந்தாரல்லவா? தென்காசியில் தொடங்கி, மதுரையோடு யாத்திரையை முடித்துக் கொண்டவர், விமானம் மூலம் திங்கள் இரவு சென்னை வந்தார்.

எதற்காக? மறுநாள் காலை அந்தமான் செல்வதற்காக. அந்தமானிலுள்ள செல்லுலர் சிறையில் அடைபட்டிருந்த சுதந்தரப் போராட்டத் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தும் நோக்கம். அதிகாலை விமானம். விருந்தினர் மாளிகையில் தங்கி, எழுந்து வந்தால் லேட்டாகி விடுமே? ஆகவே, விமான நிலையத்தின் முதல் தளத்தில் சற்று வசதிக் குறைவான அறையிலேயே தங்கினார் அத்வானி. அவர் கூடவே மகள் பிரதிபாவும் மகன் ஜெயந்த் அத்வானியும்.

## — சென்னையில் அத்வானி ஆவேசம்

பெரிய தலைவர் யாராவது வந்தால் வரவேற்பு கலாட்டாக்கள் எத்தனை அமர்க்களப்படும்? அத்வானி விஸிட்டில் அதெல்லாம் மிஸ்ஸிங்.

சென்னை பா.ஜ.க. அலுவலகத்தைச் சேர்ந்த சிலர் மட்டுமே வந்திருந்தனர், விமான நிலையத்துக்கு. பாதுகாப்புக்குக் கொஞ்சம் போலீஸ். மாலைகள்? வாழ்க கோஷம்? மூச்! படு சிம்பிள்.

பயணக் களைப்போ என்னவோ, பத்திரிகையாளர்களிடம் கூட "அப்புறம் பார்க்கலாமே?" என்று நாசூக்காகச் சொல்லிவிட்டு, வந்த சூட்டில் படுக்கப் போய் விட்டார் அத்வானி. (இந்தியன் எக்ஸ்பிரஸ் குருமூர்த்தியோடு மட்டும் கொஞ்ச நேரம்.)

"என்ன சாரே, பெட்ரோல் விற்கிற விலைவாசியில் இப்படியொரு 15000 கிலோ மீட்டர் டாடா ரத யாத்திரை ரொம்ப முக்கியமா?" என்று கேட்கலாமென்று பார்த்தால் உள்ளே போயே போய் விட்டார். பின்தொடரப் பார்த்தபோது செக்யூரிட்டி பயில்வான்கள் செல்லமாக முறைத்து அனுப்பி விட்டார்கள்.

வேறு வழி? வசமாக மாட்டிய அத்வானியின் தனிச் செயலாளர் தீபக் சோப்ராவைப் பிடித்துக் கேட்டோம்.

"**வா**ஸ்தவம்தான். முதலில் ரயிலில் தனிப்பெட்டி ஏற்பாடு செய்யலாமா என்று பார்த்தோம். ஆனால் அதில் பல சங்கடங்கள். மக்களை நேரடியாகச் சந்தித்துப் பேச இதுதான் வசதி. அவர்கள் பிரச்னைகளை அறிந்து கொள்வது தானே முக்கியம்?" என்று சூப்பராக பதில் சொன்னார்.

அது சரி. தமிழ்நாட்டில் இவர் யாத்திரை மேற்கொண்ட ரூட், பா.ஜ.க. அதிகம் செல்வாக்கு பெறாத ஏரியாக்கள் ஆச்சே? ரெஸ்பான்ஸ் எப்படி இருந்தது?

"இந்த வழித்தடத்தைத் தேர்ந்தெடுத்த காரணமே சுதந்தரப் போராட்ட வீரர்களுக்கு- அவர்கள் பிறந்த மண்ணில் அஞ்சலி செலுத்தத்தான். வ.உ.சி., கட்டபொம்மன், காமராஜர் போன்றோருக்கு அத்வானிஜி அஞ்சலி செலுத்தும் வாய்ப்புக் கிடைத்ததே! பாஞ்சாலங்குறிச்சியில் கட்டபொம்மனின் வாரிசுகள், 'உங்களைப் போன்ற தேசியத் தலைவர்கள் யாரும் இங்கு வந்து எங்களைச் சந்தித்ததே கிடையாது; நீங்கள்தான் ஃபர்ஸ்ட்!' என்று சொல்லி நெகிழ்ந்து போனார்கள்!"

**ச**ப்பாத்தி, தயிர், சாதம், உருளைக் கிழங்குக் கூட்டு. இவைதான் சென்னையில் தங்கின அத்வானிக்கு இரவு உணவு. அளித்தவர் ரகுவீர் ஆனந்த் என்கிற ஆர்.எஸ்.எஸ்.காரர்.

ஸ்டேஷனரி வியாபாரம் செய்கிற ரகுவீர் ஒரு தரம் ஹார்ட் அட்டாக் வந்து ஆஸ்பத்திரியில் கிடந்தபோது, அப்போது சென்னை வந்திருந்த அத்வானி, விஷயம் கேள்விப்பட்டு, தன் சுற்றுப் பயண அவசரங்களை ஒத்தி வைத்துவிட்டு, ரகுவீரை ஆஸ்பத்திரியில் சென்று பார்த்திருக்கிறார். அப்போதே பாதி உடம்பு தேறி விட்டவர், இப்போது அத்வானிக்கு ஆலு சப்ஜியும் தயிர் சாதமும் கொண்டு வந்து இரவு உணவாக அளித்து மகிழ்ந்தார். "அத்வானிக்கு அதிக எண்ணெய், அதிக காரம் ஆகாது. விரும்பிக் குடிப்பது இளநீர் மட்டும்!"

**அ**த்வானியுடன் வந்திருந்த அவரது மகனுக்கும் மகளுக்கும் மதுரை-சென்னை-போர்ட்பிளேயர்- சென்னை பயணத்துக்கான விமான டிக்கெட்டுகளை, சென்னை பா.ஜ.க. அலுவலகம் வாங்கியிருந்தது.

விஷயம் தெரிந்த அத்வானிக்கு, மூக்குக் கண்ணாடிக்கு மேல் கோபம்.

"அவர்கள் என்ன கட்சித் தலைவர்களா? பா.ஜ.க. செலவில் எப்படி டிக்கெட் வாங்கலாம்?" என்று நிர்வாகிகளைப் பிடித்து லெஃப்ட் அண்ட் ரைட் விட்டிருக்கிறார். உடனே டிக்கெட்டை கேன்ஸல் செய்து, பணத்தைத் திரும்பப் பெறச் சொன்ன வேகம் பார்த்து, இங்கத்திய பா.ஜ.க.காரர்கள் மூக்குமேல் விரல் வைத்திருக்கிறார்கள்.

"பார்த்தீங்களா சார்! குடும்பமே கட்சி; கட்சியே குடும்பம் என்று இருக்கிற அரசியல்வாதிகள் மத்தியில் இப்படியொரு தலைவர்!" என்று புளகாங்கிதப்பட்டுச் சொன்னார், சுபாஷ் என்கிற தீவிரத் தொண்டர் ஒருவர்.

— ப்ரியன்

வண்ணப்படங்கள்: ஸ்ரீஹரி

---

**"என் கணவர் பத்து வருஷமா சர்க்கஸில் கம்பி மேல் நடக்கிறார். இதுவரை கீழே விழுந்ததில்லை, தெரியுமா!"**

**"இதென்ன பிரமாதம்! என் கணவர் அஞ்சு வருஷமா கொடைக்கானல்ல பஸ் ஓட்டறார். இதுவரை விபத்து நடந்ததே இல்லை!"**

– கே. யுவராஜ்



# கொள்ளையடா சாமி!

இரண்டாம் வகுப்பிலிருந்து, மூன்றாம் வகுப்புக்குப் போயிருக்கும் தன் பையனுக்காக, முதல் டேர்ம் ஃபீஸாக, சுளையாய் மூவாயிரத்து முன்னூற்று முப்பத்தைந்து ரூபாய் கட்டியிருக்கிறார் கணபதி!

"என்ன, அவ்வளவு ஃபீஸா?" என்று கேட்டால், ஸ்கூலில் அத்தனை ரூபாய் கட்டச் சொன்னால், கட்டுவதைத் தவிர வேறு வழி? என்ற பதில் கேள்விதான் விடை.

காரணம்: பிரமோஷன் அறிவிப்பு கார்டு வந்தபோது, இன்ன வகுப்புக்கு, இவ்வளவு ஃபீஸ், இன்ன தேதிக்குள் கட்ட வேண்டும் என்றுதான் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. அந்தத் தொகையை பாங்க் சலானில் எழுதி, பணத்தைக் கட்டிவிட வேண்டுமென்பதால், மொத்தப் பணத்துக்கான பிரேக்-அப் என்னவென்றே தெரியாது.

பிரேக் - அப் விவரங்களைத் தெரிந்து கொள்ள கணபதிக்கு ஆர்வம்தான். அப்புறம் ஏன் கேட்டுத் தெரிந்து கொள்ளவில்லை?

"தயக்கம்தான். ஸ்கூல் ஆபீசில் கேட்டால், பிரின்ஸ்பாலைக் கேளுங்கள்; கரஸ்பாண்டெனடைக் கேளுங்கள் என்று தட்டிக் கழிக்கிறார்கள். பிரின்ஸ்பாலைப் பார்க்க வேண்டுமென்றால், 'அவர் பிஸி; எதற்காகப் பார்க்க வேண்டும்?' என்கிறார்கள். பள்ளிக்கூடத்தில் சேர்த்தாகிவிட்டது; தலைஎழுத்தே என்று கேள்வி கேட்காமல், பணம் கட்ட வேண்டியதுதான்."

மாநகராட்சி, அரசுப் பள்ளிக் கூடங்கள் தவிர, மற்ற எல்லா பள்ளிகளிலும் இன்று இதே கதைதான்!

ஒரு சில சென்னை நகரப் பள்ளிக் கூடங்கள், அங்கே பணிபுரிகிறவர்கள், பெற்றோர்கள் என்று ஒரு ரவுண்டு விசாரித்தபோது, என்னென்ன விதமான ஃபீஸ்கள் எல்லாம் வாங்கப்படுகின்றன என்கிற அதிர்ச்சி தரும் தகவல்கள் கிடைத்தன.

- ஒரு பிரபல பள்ளிக்கூடத்தில் ஒவ்வொரு மாணவரிடமிருந்து வாங்கப்படும் கட்டாய கம்ப்யூட்டர் ஃபீஸ் 600 ரூபாய்.
- எப்போதாவது, வீடியோவில் இரண்டொரு கார்ட்டூன் திரைப்படங்கள் போட்டுக் காட்டுவார்கள். இதற்காக ஆடியோ விஷுவல் எஜுகேஷன் ஃபீஸ் என்ற பெயரில் பிடுங்கப்படுவது 50 ரூபாய்.
- வருஷத்துக்கு ஒரு தரம் கிண்டி பூங்கா, கோளரங்கம் என்று ஃபீல்டு டிரிப் அழைத்துச் செல்வார்கள். அன்று, குடிதண்ணீர், மதிய உணவு உட்பட அனைத்தும் மாணவர்களே எடுத்துச் செல்ல வேண்டும். ஆனாலும், அந்த ஃபீல்டு டிரிப்புக்காக வருடத் துவக்கத்திலேயே நூறு ரூபாய் வாங்கி விடுகிறார்கள்.
- ஒரு பள்ளிக்கூடத்தில் குழந்தைகளின் பிறந்த நாளன்று, சிறு பரிசு கொடுத்து வகுப்புக் குழந்தைகளுக்கு இனிப்பு வழங்க ஐம்பது ரூபாய் வாங்கப்படுகிறது!
- ஆசிரியர் நலநிதிக்கு என்று ஒவ்வொரு மாணவரிடமிருந்தும் 500 ரூபாய் வசூல் நடக்கிறது இன்னொரு பள்ளிக்கூடத்தில்!
- Environmental up keep fee என்று ஒரு டேர்முக்கு 100 ரூபாய்! இந்தப் பணம் எதற்காக என்றால், விவரம் தெரியாது!
- குழந்தைகள் வகுப்பில் உட்காரும் நாற்காலி, மேஜை, பெஞ்ச் பராமரிப்புக்காக ரூ 50.
- ஒரு பள்ளிக்கூடத்தில் புதிதாய் சேரும் மாணவர்கள் கட்ட வேண்டிய அட்மிஷன் ஃபீஸ் ரூ. 2000.
- பள்ளி வளாக மேம்பாட்டுக்காக ஒவ்வொரு குழந்தையிடமிருந்தும் வாங்கப்படும் கட்டணம் ஆண்டுக்கு ரூ 200.
- ஒரு பள்ளியில் கட்டாய இன்சூரன்ஸ் திட்டத்தின் கீழ் ஆண்டுக்கு 5 ரூபாய் வாங்குகிறார்கள்!

குழந்தைகள் நடப்பதால் தரை தேய்கிறது. அதற்கு maintenance fees, கேட்டுக்குள் நுழைய கட்டணம், வெளியேற கட்டணம் என்று வசூலிக்காததுதான் பாக்கி!

— நமது நிருபர்



# “‘சசிகலாவை விடுதலை செய்’ என்று ஏன் கோஷம் போட வேண்டும்?”

முப்பத்து ஆறு வருடங்கள் காவல் துறையில் பல்வேறு பொறுப்புக்களையும் வகித்துவிட்டு, காவல்துறைத் தலைவராக ஓய்வு பெற்றவர் பொன். பரமகுரு. கடந்த சில ஆண்டுகளாக, தேவர் சமூகத்தைச் சேர்ந்தவர்களுக்கான 'தேவர் பேரவை' என்ற அமைப்புக்குத் தலைவராய் இருந்து வருகிறார். தென் மாவட்டக் கலவரங்கள் குறித்து முதலமைச்சர் நடத்திய கூட்டங்களில் தேவர் சமூகம் சார்பாய் கலந்து கொண்டவர்களில் இவரும் ஒருவர். அவரைச் சந்தித்தபோது :

**கல்கி :** நீங்கள் காவல் துறையில் பணியாற்றிய காலத்தில், வகுப்



புக் கலவரங்கள் நடந்திருக்கும்! அப்போது அவற்றை எப்படிக் கையாண்டீர்கள்?

**பொன். பரமகுரு :** தென்னார்க்காடு மாவட்ட எஸ்.பியாக இருந்தபோது காட்டுமன்னார்கோவில் பகுதியில் வகுப்புக் கலவரம் நடந்தது. சென்னை மாநகர கமிஷனராய்ப் பணியாற்றிய போது பெரம்பூர் பகுதியில் இரு கட்சியினருக்கிடையே மோதல். இன்னொரு தடவை, பச்சையப்பன் கல்லூரி மாணவர்களுக்கும், பஸ் தொழிலாளர்களுக்கும் இடையிலான மோதலில், பூந்தமல்லி நெடுஞ்சாலையில் போக்குவரத்து ஸ்தம்பித்தது. இப்படிப் பல அனுபவங்கள். ஆனால், இவை அனைத்திலுமே நான் கடைபிடித்த அணுகுமுறை ஒன்றுதான். சம்பந்தப்பட்ட பகுதியில் உள்ள இரு தரப்பு பிரதிநிதிகளையும், அங்கேயே பேச வைத்து, சமாதானமாய்ப் போக வைப்பது. அது நல்ல பலன் அளித்தது.

**கல்கி :** சமீபத்திய கலவரங்களுக்கு அடிப்படையான காரணம் என்னவென்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

**பரம :** சொந்த பலனடைய நினைக்கிற அரசியல்வாதிகள், சுய நலம் கொண்ட சமூக விரோதிகள், இதுபோன்ற சந்தர்ப்பங்களில், தேவையில்லாமல் மூக்கை நுழைக்கிற சில சந்தர்ப்பவாதிகள் ஆகியோர்தான் இதுபோன்ற வகுப்புக் கலவரங்களுக்கு அடிப்படைக் காரணம்.

**கல்கி :** அ.தி.மு.க மற்றும் ம.தி.மு.க வினர் மறைமுகமாய் இருந்து கொண்டு தூண்டி விடுவதாக ஒரு பேச்சு இருக்கிறதே? அது உண்மையா?

**பரம :** அதை மறுப்பதற்கில்லை. காரணம், கலவரப் பகுதிகளில், சிலர் (எம்.ஜி.ஆர். பாணியில்) இரட்டை விரல்களைக் காட்டியது ஏன்? இரண்டு சமூகத்தினருக்கிடையே மோதல் என்றால், 'சசி

கலாவை விடுதலை செய்!' என்று ஏன் கோஷம் போட வேண்டும்?

**கல்கி :** கலவரம் நடந்தபோது, அங்கே சென்று, உங்கள் சமூகத்தவர்களை மட்டுமின்றி, அனைத்துத் தரப்பினரையும் சமாதானப்படுத்தும் முயற்சியில் ஈடுபடாமல், சென்னையில் பேச்சுவார்த்தையில் நீங்கள் கலந்து கொண்டது சரிதானா?

**பரம :** நான் அறிக்கைகள் மூலம் அமைதியை வற்புறுத்திக் கொண்டுதான் இருந்தேன். எங்கள் அமைப்பைச் சேர்ந்த மற்ற முக்கியஸ்தர்களை அப்பகுதிகளுக்கு அனுப்பி வைத்தேன்.

**கல்கி :** என்ன இருந்தாலும் நீங்களே போயிருக்கலாம் அல்லவா?

**பரம :** நீங்கள் சொல்வது சரிதான். நானும் மதுரை சென்று, எனது சமூகத்து முக்கியப் பிரமுகர்களையெல்லாம் சந்தித்தேன்.

**கல்கி :** சுந்தரலிங்கம் பெயரில் போ.வ. கழகம் துவக்கப்பட்டதை இத்தனை பெரிய பிரச்னையாக்கிவிட்டு, இப்போது, பூலித்தேவன் பெயரில் போ.வ.கழகம் துவக்கக் கோருவது எப்படி நியாயம்?

**பரம :** ஜெயலலிதா ஆட்சியின்போது அறிவிக்கப்பட்டு, அண்மையில் துவக்கப்பட்டது சுந்தரலிங்கம் போ.வ.கழகம். ஆனால் கட்டபொம்மனுக்கு முன்பே, பிரிட்டிஷாரை எதிர்த்து, வென்ற பூலித் தேவனை அரசாங்கம் தக்க முறையில் கௌரவிக்கவில்லை என்பது தேவர் சமூகத்தின் நெடுநாளைய ஆதங்கம். பல முறை இதை அரசாங்கத்துக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறோம். எனவே, அதற்கும், இதற்கும் முடிச்சுப் போடாதீர்கள்.

**கல்கி :** இது போன்ற கலவரங்கள் நிகழாமல் இருக்க என்ன செய்யலாம்?

**பரம :** ஒவ்வொரு பகுதியிலும், பல்வேறு சமூகத்தைச் சேர்ந்தவர்கள் கொண்ட அமைதிக் குழுக்கள் அமைக்கலாம். காவல் துறை, பாரபட்சமாய் செயல்படாமல் இருக்க உறுதி செய்யப்பட வேண்டும். தமிழ்நாட்டில் பரவிவிட்ட வெடி குண்டுக் கலாசாரத்தை அடியோடு ஒழிக்க உடனடி தீவிர நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்.

**கல்கி :** வட தமிழ்நாட்டை கருணாநிதியும், தென் தமிழ்நாட்டை தேவர்களும் ஆளும் நிலைமை இன்று நிலவுவதாய் தேவேந்திரகுல வேளாள சமூகத்தினர் விமர்சித்துள்ளனரே!

**பரம :** விஷமத்தனமான விமர்சனம். அது உண்மையல்ல!

**கல்கி :** உங்களுக்குத் தேர்தலில் நிற்கிற, அரசியலில் ஈடுபடுகிற எண்ணம் இருக்கும் போலத் தோன்றுகிறதே!

**பரம :** (சிரிப்பு) ரிடையர்மென்ட்டுக்குப் பின், எனக்கு தி.மு.க., காங்கிரஸ் போன்ற கட்சிகளிடமிருந்து அழைப்பு வந்தது. எம்.பி. சீட் கொடுப்பதாய்க் கூடச் சொன்னார்கள். ஆனால் என்னுடைய மனதில் பட்டதை பட்டென்று சொல்லி விடுகிற போக்கு, அரசியலுக்கு ஒத்து வராது என்று சொல்லி, மறுத்து விட்டேன்.

**கல்கி :** நீங்கள் ஒரு காவல்துறை உயர் அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். இப்படியொரு சாதிச் சங்கத் தலைவராக இருப்பதும் குறிப்பிட்ட வகுப்பினர் சார்பாக அரசிடம் பேசுவதும் செயல்படுவதும் எப்படிச் சரி?

**பரம :** நான் ஓய்வு பெற்றபோது, முத்துராமலிங்கத் தேவர் டிரஸ்ட் என்ற அமைப்புக்குத் தலைவராகத்தான் கூப்பிட்டார்கள். நல்ல காரியங்கள் தானே செய்யப் போகிறோம் என்று ஒப்புக் கொண்டு, சில வருடங்கள் அப்பொறுப்பில் இருந்தேன். பிறகு இந்த தேவர் பேரவைத் தலைவராகவும் செயல்பட வேண்டும் என்று நண்பர்கள் வற்புறுத்தியதால் வேறு வழியின்றி ஒப்புக் கொண்டேன். ஆனால் என் சேவை இந்தச் சமூகத்துக்கு மட்டுமே சொந்தமானதல்ல. பொதுமக்கள் யார், எந்த உதவி கேட்டாலும் செய்து கொண்டுதான் இருக்கிறேன். சாதி, இன, மதப் பாகுபாடெல்லாம் எனக்கில்லை.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

- கேலியைக் கண்டு பயப்பட வேண்டாம்; உன் மீது ஒருவன் உப்பை அள்ளிப் போட்டால் உன் மீது புண்கள் இருந்தாலன்றி உனக்கு ஒரு தீங்கும் நேராது.

  — ஜீனியஸ்

  தகவல் : நெ. இராமன்

- உலகோடு ஒட்டி வாழ்பவன் சாமானியன், தன் எண்ணத்திற்கேற்ப உலகை மாற்ற விரும்புபவன் அசாதாரணமானவன். அசாதாரணமானவர்களால் தான் உலகம் முன்னேறுகிறது.

  — பெர்னாட்ஷா

  தகவல் : எஸ்.எஸ். பூங்கதிர்



# கல்லின் கம்பீரம்!

# கலையின் விசுவரூபம்!

- கற்பனையில் இப்படியோர் கோயில் அமையலாம்! - ஆனால்
கண்ணெதிரில் ககனம்வரை கற்கள் நிற்குமா?
எப்படித்தான் இராஜராஜ சோழன் கட்டினான்? - மண்ணில்
எதுவரைதான் அஸ்திவாரப் பள்ளம் வெட்டினான்!

- பெரியலிங்கம் பெரியநந்தி பெரிய கோயிலாய் - கலை
பேசுகின்ற ஓவியத்தின் அரிய வாயிலாய்
பெருஉடையார் மீதுவைத்த அன்பின்சாட்சியாய் - வந்த
பெட்டகமோ மறையாத ஜீவ காட்சியாம்!

- தலைநகரைக் கலைநகராய்ச் சோழன் ஆக்கினான்! - மருதத்
தஞ்சையினைக் குறிஞ்சியென மன்னன் மாற்றினான்!
கலைவளர இலைச்சுருளைக் கையில் ஏந்தினான்! - பெரிய
கடவுளரின் கருணையெனும் கடலில் நீந்தினான்!

- ஆண்டஅவன் அரண்மனையோ மறைந்து போனது! - கண்ட
ஆண்டவனின் அரன் மனையோ புகழாய் ஆனது!
வேண்டும்வரம் தரஉள்ளார் பெருஉடையாரே! - அவரை
வேண்டுபவர் இவ்வுலகில் எது அடையாரே?

- பொற்கலசம் குடமுழுக்கைக் காண உள்ளது! - அந்தப்
புண்ணியநீர் மனஅழுக்கை ஆற்றவல்லது!
அற்புதத்தை நற்பதத்தை அவர் அருளட்டும்! - தஞ்சை
ஆலயத்தால் பாரதத்தில் நலம் மலரட்டும்!

- இமயம்கூட இமைஉயர்த்திப் பார்க்கும்வண்ணமே - இங்கு
எழுந்ததுபார் இராஜராஜன் இதய எண்ணமே!
அமைந்த அந்த பக்தி, பண்பு, கலை அனைத்துமே - மீண்டும்
அவனிபெறக் கும்பிடுவோம் கைஇணைத்துமே!

- மதிவண்ணன்

தஞ்சாவூர்க் கதம்பம் — சிறப்புப் பகுதி

**ஜூன் 8 – தஞ்சை பெரியகோவில் கும்பாபிஷேகம்**

## தஞ்சாவூர்க் கதம்பம்



• கூட கோபுரம்

தஞ்சாவூர் ஜங்ஷன். புலரத் தயாராக நிற்கிற பொழுது. ஜரிகை அங்க வஸ்திரமும், மயில்கண் வேட்டியும் கையில் வெள்ளிக் கூஜாவுமாக ரயிலைப் பிடிக்க அரக்கப் பரக்க ஓடுகிறவர்கள். தலையில் தஞ்சாவூர்க் கதம்பம் மணக்க மணக்க, பட்டுப் புடைவை சரசரக்க, குனிந்த தலை நிமிராமல் நடக்கும் நாரி மணிகள். டிக்ரிக்காப்பி வாசம். ஜட்கா வண்டிகளில் பகம்புல் வாசம். அரகஜா, அத்தர், ஜவ்வாது வாசம்... தாம்பூல வாசம்... எல்லாமே வெறும் கனவு வாசம்தான்.

"என்ன யோசனை? சூடா ஒரு வாய் இன்ஸ்டெண்ட் காப்பியை ஊத்திக்கிட்டு, வேலையை கிரமமா ஆரம்பிக்கலாம்."

முதுகில் அச்வின் தட்டியதில் கலைந்த கனவு, பழைய நாவல்களையும், ஐம்பது அறுபது வருடம் முந்திய பைண்டு செய்த தொடர்கதைப் புத்தகங்களையும் படித்து மனத்தில் வளர்த்து வைத்த தஞ்சை.

"காவேரியிலே சூரிய உதயத்தைப் படம் எடுக்கணும்... கிளம்புங்க..."

ஸ்டேஷன் வாசல் ஆட்டோவில் உட்கார்ந்தபடிக்குத் தூங்கிக் கொண்டிருந்த ஆட்டோக்காரரைத் தட்டி எழுப்பிய அச்வின், வண்டியில் இல்லாத மீட்டரைத் தேட, பின்னால் ஏழெட்டு குமரிமுத்து ஏககாலத்தில் சிரிக்கும் சத்தம்.

"சூரிய உதயத்தை இப்போதைக்கு எடுத்துக்குங்க... ஒரு மாதம் கழிச்சு வந்து காவேரித் தண்ணியைப் படம் பிடிச்சுக்குங்க..."

கோரஸாகக் குரல் கொடுத்தது அச்வினின் தஞ்சை நண்பர்குழு.

கர்னாடகம் கண் திறந்து, கிருஷ்ணராஜசாகர் அணை திறந்து, காவிரியில் கொஞ்சம் போலவாவது தண்ணீர் வந்தால் குறுவை நெல் சாகுபடி ஆரம்பமாகி விடுமாம். அதுவரை தஞ்சையும், சுற்று வட்டாரமும் தூக்கக் கலக்கத்தில் தானாம்.

தகவல் கொடுத்த நண்பர்கள் தள்ளிக் கொண்டு போய்த் தண்ணீர் இல்லாத கல்லணைக் கால்வாய்ப்

# தஞ்சைக்கு ஒரு ட்ரிப்!




• இன்றைய தஞ்சை

புக்கம் நிறுத்த, 'உழவர் ஓதை, மதகோதை, உடைநீர் ஓதை' எதுவுமில்லாமல் தூரத்து ஒலி பெருக்கியிலிருந்து 'மாத்தாடு மல்லிகே'.

**'சா**ர்... எங்க மேம்பாலத்தைப் பார்க்க வர்றீங்களா?" ஆட்டோக்காரர் அன்போடு கூப்பிட்டார்.

"என்ன விசேஷம்



'பங்கோவ்...!"

அதிலே?" என்றான் அச்வின்.

"எந்தத் தலைவர் பெயரும் வைக்காம, வெறுமனே மேம்பாலமாகவே இன்னும் இருக்கே, அதான் விசேஷம்."

"சத்தம் போட்டுச் சொல்லிடா தீங்க.. தென் மாவட்டங்களிலே இப்பத்தான் வெக்கை தணிஞ்சிருக்கு" என்றேன்.

முந்தைய அரசு உலகத் தமிழ் மாநாடு நடத்தியபோது திறக்கப்பட்ட மேம்பாலம், தஞ்சையில் போக்குவரத்து நெரிசலைக் கணிசமாகக் குறைத்திருப்பதாக நண்பர்கள் வட்டம் பெருமைப்பட, ஒன்று இரண்டாகப் பாலத்தில் ஊர்கிற வாகனங்கள்.

"மேம்பாலத்துக்குக் கீழே ஒரு ஓட்டல், ஒரு தியேட்டர், கடைகள்... பாலம் திறந்த நாள்லே இருந்து பிசினஸ் படு டல்லு.."

ஆட்டோக்காரர் வாக்கியத்தை முடிப்பதற்குள் பஸ் ஸ்டாண்ட். இறங்கினோம்.

"எம்பனது ரூவா" அவர் படு கேஷுவலாகக் கேட்க, பின்னால் சைக்கிள்களில் வந்த நண்பர் வட்டம் சமாதானப் பேச்சு வார்த்தையில் இறங்கியது. ஐந்து ரூபாய் மிச்சம். அம்புட்டுத்தான்.

தரும மிகு சென்னையில் ஆட்டோ மீட்டரில் சூடு வைத்தாலோ, மீட்டரையே தீயில் போட்டு எடுத்தாலோ கூட இதில் பாதிதான் கையை விட்டுப் போகும்.

**"ஆ**சான் வந்தாச்சு."

நண்பர்குழாம் உற்சாகத்தோடு அறிவிக்க, உப்புமிளகு தாடியும், உயரமும் வழுக்கையுமாக ஸ்கூட்டரில் வந்து இறங்கினார் தஞ்சை பிரகாஷ். தி.ஜானகிராமன், கரிச்சான்குஞ்சு, எம்.வி.வெங்கட்ராம் என்று போன தலைமுறை எழுத்தாளர்களோடும், மாலன், பிரபஞ்சன் என்று இந்தத் தலைமுறைக் காரர்களோடும், முந்தாநாள் மீசை முளைத்து, நேற்று முதல் கவிதை எழுதிய இளைஞர்களோடும் சரிசமமாகப் பழகிய, பழகும் பிரகாஷ்,

'...ஙகாவிலாஸ் (ஓட்டல் அல்ல)



• 'கிந்தனார்' ராஜரத்தினம்



• மன்னர் ஓவியம் வரைகிறார்

எழுத்தாளர் மட்டுமின்றி, நடமாடும் தஞ்சை என்சைக்ளோபிடியா கூட.

"தஞ்சாவூர்லே என்ன எல்லாம் பார்க்க லாம்?" நான் பிரகாஷை விசாரிப்பதற்குள் அச்வின் பசிப்பாட்டு பாடினான். ஓட்டல்...

"தமிழ்நாட்டின் முதல் உணவு விடுதிக தஞ்சாவூரில் மராட்டியர் காலத்தில் தான் ஏற்பட்டவை..." என்று கு மாவில் தொட்டு இட்லி சாப்பிட்ட படியே இருநூறு வருடம் பின்னால் போனார் பிரகாஷ்.

"சரபோஜி மகாராஜாகிட்டே வராகசாமின்னு ஒரு பட்லர் இருந்தா ராம்... வேபர் பிஸ்கட் பண்றதில ஸ்பெஷலிஸ்ட்... அரண்மனை சாப் பாட்டுலே நாற்பத்து மூணு ஐட்டம் இருக்கும். தாட்டுனு பேரு அதுக்கு.."

• பிரகாஷ்

"**சா**ப்பிட்டு ஆனதும், ராகுகாலக் காளி கோயிலுக்குப் போகலாம் வாங்க" என்றார் பிர காஷ்.

இரண்டாயிரம் வருடம் முற்பட்ட கோயில் இது. விஜயாலய சோழன் இங்கே வழிபட்டுத்தான் உத்வேகம் அடைந்து பிற்காலச் சோழர் பரம்பரை சிறக்கப் பிள்ளையார் சுழி போட்டானாம்.

'நிசும்பசூதனி' என்ற காளி வலக்கையில் சூலத் தைப் பற்றி, இடப்பக்கம் ஊன்றத் தொடங்கி வீராவேசமாக நிற்கிறாள். கோயிலுக்கு வெளியே, குல்லாய் அணிந்த புராதன சிற்பம் வெயில், மழை யில் காய்ந்து கொண்டு வெறுந்தரையில் கிடக் கிறது. புராதனமான காவல்போல...

கல்யாணமாகாத இளம்பெண்கள், ராகு காலத்தில் எலுமிச்சம் பழ நைவேத்தியம் செய் தால் திருமதிகளாகலாம் என்ற பரவலான நம் பிக்கை. வெளியில் இன்னொரு காளி சிற்பம். 'பழங்களைக் காளியின் தலையில் பிழிந்து பாவங் களைச் சேர்க்காமல், பாதத்தில் பிழிந்து பயன் பெறுங்கள்' என்று பக்கத்திலேயே அறிவிப்புப் பலகை.

"விஜயாலயசோழன் காலத்தில் தமிழ்நாட் டுக்கு எலுமிச்சம்பழம் வந்து விட்டதா?" என்று பிரகாஷைக் கேட்டேன். இல்லையாம்.

"அரண்மனைக்குப் போகலாம் வாங்க.." நண் பர்கள் நச்சரிக்க, "நாலு ராஜவீதி சுற்றிவிட்டு மெல்லப் போகலாம்" என்று தீர்மானமானது.

வெயில் ஏறத் தொடங்கநாலு வீதிசுற்ற மூச்சு வாங்கியது. இரண்டு கடை, ஒரு வீடு, ஒரு கோயில் என்ற விகிதத்தில் நாலு வீதியிலும் கட்டடங்கள்.

"**இ**து மங்கள விலாஸ்" பிரகாஷ் சுட்டிக் காட்ட, "மதியச் சாப்பாட்டை இங்கே வச்சுக்க லாமா?" என்று விசாரித்தான் அச்வின்.

மங்களவிலாஸ் சாப்பாடு ஓட்டல் இல்லை. மராட்டிய மன்னர்கள் காலத்தில் நாட்டியக் காரிகள் குடியிருந்த தெற்குத் தெரு வீடு அது. சலங்கை ஒலித்த இடம், சத்தமில்லாமல் அழுக்குப் பூசி நிற்கிறது.

மங்கள விலாசத்துக்குப் பக்கமாக 'கிந்தனார் ஸ்டுடியோ'. கலைவாணர் என்.எஸ்.கே.யின் கிந்தனார் கதாகாலட் சேபத்துக்கும், தஞ்சாவூருக்கும் என்ன தொடர்பு?

குறுகலான மாடிப்படி ஏறிப்போய் விசாரிக்க, "உட்காருங்க சொல்றேன்..." என்று நாற்காலியைக் காட்டினார் உரிமையாளர் ராஜரத்தினம்.

"என்.எஸ்.கே. கூப்பிட்டார்னு ஸ்டில் போட்டோகிராபரா மெட்ராஸ் போனேன்... ரெண்டு படம் பண்ணினேன்.. சினிமா உலகத்துலே உண்மையான கலைஞனுக்கு மரியாதை இல்லேன்னு புரிஞ்சது... கலைவாண ருக்கு லெட்டர் எழுதி வச்சுட்டுக் கிளம்பிட் டேன்.. அவர் நினைவா ஸ்டுடியோ பெயர்."

**கி**ந்தனார் ஸ்டுடியோ எதிரே, மராட்டிய மன்னரின் பிரதானி ராயசம் வெங்கண்ணா வெட்டிய ஐயன்குளம் பாதி வறண்டு கிடக்கிறது.

"பக்கத்துலே இடிஞ்சு கிடக்கறதுதான் கதா காலட்சேபக் கல்லூரி... மராட்டியர்கள் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வந்த கலை அது... கல்லூரி இப்போ இல்லே.. அங்கே பதிப்பித்த இந்தக் கலை தொடர்பான புத்தகங்களும்தான்.." பிரகாஷ் சொன்னார்.

**த**ஞ்சை அரண்மனை. மதில் சுவரின் இடி பாடுகளில் எட்டிப் பார்க்கும் எருக்கஞ் செடிகள். மேலே சின்னதாக டி.வி. ஆண்டெனா. ஊருக்கு நடுநாயகமாக நிற்கும் அரண்மனையின் புரா தனத்துக்கு ஏற்றபடி, 'அரசாங்க பென்ஷன் வாங்கு கிறவர்கள் சங்கம்' அங்கேயே ஒரு மூலையில் இயங்குகிறது.

அரண்மனைக்குள் ஒரு விசிட் அடித்தோம்.

"இது மாடமாளிகை... இது கூட கோபுரம்!"

நண்பர் வட்டம் சொல்லிய திசையில் சரபோஜி மகாராஜா காலத்துக் கட்டடங்கள் இரண்டு புதுப் பெயிண்ட் மினுக்க நின்றன. உலகத் தமிழ் மாநாட்டுக்காகப் பூசிக் கொண்ட பளபளப்பு அது.

"இந்த மஹால் கீழே தூண், மண்டபம் எல் லாம் எட்டு அடி ஆழம் மண்ணுலே பொதைஞ்சு கிடந்தது... எம்.ஜி.ஆர்.தான் வெளியே கொண் டாந்தார்."

**ச**ரசுவதிமகால் நூல் நிலையத்தில் ஓலைச் சுவடியில் கம்பராமாயணம். 1806ல் வேப்பேரியில் பதிப்பித்த வேதாகமம். பழைய கால சமையல் குறிப்பு தரும் பதார்த்த குண சிந்தாமணி. யானை வளர்ப்பு, குதிரை வளர்ப்பு புத்தகம். மராத்திய

• ஆண்டெனாவும் எருக்கும் முளைத்த அரண்மனைச் சுவர்



மொழியில் எழுதப்பட்ட 'மோடி ஆவணங்கள்'.

நூலக மூத்த அதிகாரி அலுவலகத்தில் கம்ப்யூட்டர் புத்தகங்கள். 'வருடம் 2000ல் கம்ப்யூட்டர் பிரச்னை' பற்றி அவர் ஆர்வமாக விசாரிக்கிறார்.

பதினாறாம் நூற்றாண்டில் (நாயக்கர் காலம்) தொடங்கப்பட்ட சரசுவதி மகால் நூலகம் அப்புறம் மராத்தியர் காலம், தொடர்ந்து பிரிட்டிஷ், காங்கிரஸ், தி.மு.க, அ.தி.மு.க, தி.மு.க. என்று காலம் கடந்து நிற்கிறது.

சரபோஜி மகாராஜாவின் வாரிசான தற்கால மன்னருக்கு நிதிநிலைமை எப்படி என்று விசாரித்துத் தெரிந்து கொள்ள அவர் இருப்பிடத்துக்குப் படி ஏறினால் சாப்பிடுவதாகச் சொன்னார்கள்.

"சரபோஜியே சாப்பிடறார்... சாமானியனுக்கென்ன?" ஒரு மனதாகத் தீர்மானம் போட்டு ஓட்டலுக்குப் படையெடுப்பு.

திரும்பி வந்தபோது, சந்திக்கத் தயாராக மன்னர் துவஜேந்திர ராஜா போன்ஸ்லே.

"சிவாஜி (சத்ரபதி சிவாஜிதான்)யின் ஒன்றுவிட்ட தம்பி வெங்கோஜியின் பரம்பரை நாங்க. சிவாஜி தஞ்சாவூர் வரை வந்துட்டு, தம்பியே ஆளட்டும்னு திரும்பிப் போயிருக்கார்..."

சகஜமாக நம் பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்ததும் மராட்டிய வரலாறு சொல்லும் மகாராஜா குரலில் பக்கத்துவீட்டு ரிட்டயர்ட் போஸ்ட்மாஸ்டரின் வாத்சல்யம்.

அரண்மனை உள்ளே ஏகமாக இடிந்து கிடக்கிறது.

"எம்.ஜி.ஆர். காலத்துலே இங்கே வந்து பார்த்துட்டு, உடனே ரிப்பேருக்கு ஏற்பாடு செய்தார்" என்ற போன்ஸ்லே, கலைஞரை எதிர்பார்க்கிறார்.

"'அரசவாரிசாக இருப்பதில் ஆதாயமில்லை" என்னும் போன்ஸ்லேயின் ஒரு மகன் ஐ.ஓ.பி.யில் உத்யோகம் பார்க்க, இன்னொருவர் பிசினஸ் செய்கிறாராம். மன்னர் ஓவியம் வரைகிறார்.

"கௌரவ பென்ஷன் வருகிறது" என்கிறவர், தொகையைச் சொல்லத் தயங்கினார். அப்புறம் சொன்ன தொகை தாலுக்கா ஆபீஸ் டவாலி சேவகரின் மாதாந்திர பென்ஷனை விடக் குறைந்தது!

விடைபெற்று இறங்கிவர, அரண்மனை வளாகத்தில் சைக்கிள் விட்டுக் கொண்டிருந்த எதிர்கால அரசு வாரிசுகள். 'லாஸ்ட் எம்பரர்' திரைப்படம் நினைவுக்கு வந்தது.

வெயில் தாழப் பெரிய கோயிலில் நுழைந்தோம்.

சுறுசுறுப்பாக கும்பாபிஷேக வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. துவாரபாலகர் சிலைகளை இடுப்புக்குக் கீழ் மறைத்துப் பலகை சார்த்தி இருக்கிறது. உள்ளே வரிசையாகத் தொங்கும் துணிகள் லிங்கம் படம் எழுதிக் காட்சியளிக்கின்றன.

'252 சிவலிங்கங்கள், 51 பரிவார மூர்த்திகள், 4 விமானங்கள் பாலாலயம் செய்யப்பட்டு, மூர்த்திகளைத் துணியில் ஆவாஹனம் செய்து வழிபாட்டுக்காக வைக்கப்பட்டுள்ளது' என்று அறிவிப்புப் பலகை சொன்னது.

'பாலாலயம்' என்றால் என்ன என்று கேட்கத் திரும்பினால் பிரகாஷைக் காணோம்.

உள்ளே கருவறை மூடப்பட்டு, உற்சவ மூர்த்திக்கு ஆராதனை, பக்கத்தில், "சாமிநாதா.. பியூஸ் கேரியரை எடு" எலக்ட்ரீஷியன்களின் சத்தம். சாரத்தில் சாந்து குழைத்து எடுத்துப் போகிற சித்தாள் பெண்ணை 'யக்கோவ்' என்று கீழே இருந்து யாரோ கூப்பிடும் ஒலி, "இஞ்ச பாரு.. ஜெயலலிதா கொடுத்த யானைக்குட்டி..." பிராகாரம் சுற்றும் பெண்களின் உற்சாகக் குரல்... ஓடிப்பிடித்து விளையாடும் குழந்தைகளின் சிரிப்பு...

தஞ்சைக் கோயிலில் தெய்வத் தன்மையோடு இழையோடும் அலாதியான மனுஷவாடையும் உண்டு.

வெளியே வர, மெள்ள இருள் கவிந்து கொண்டிருக்கிறது. கோயிலை ஒட்டி மதிலோரம் காற்றில் மிதந்து வரும் குரல்–

"ஆல்ப்ஸ் மலைகளின் குளிர்ந்த காற்றும், அட்டிக் கடலில் உப்புக் காற்றும் கலந்து வீசிக் கொண்டிருக்க, ஏதன்ஸ் மாநகரின் திறந்தவெளி அரங்கில் அரிஸ்டோபேனஸின் நகைச்சுவை நாடகம். மேடையில் சாக்ரடீஸாக நடித்தவனைப் பார்த்து ஆயிரக் கணக்கான மக்கள் குலுங்கிச் சிரிக்க, கூட்டத்தில் சாக்ரடீஸ்..."

பிரகாஷ்தான் கதை சொல்லிக் கொண்டிருந்தார். 'கதை சொல்லிகள்' என்ற இலக்கிய அமைப்பின் மாதாந்திரக்கூட்டம் அது.

கதையில் லயித்துப் போய் உட்கார்ந்த அச்விளை வலுக்கட்டாயமாக எழுப்பி, 'ரயிலுக்கு நேரமாச்சு' என்று கூட்டிக் கொண்டு கிளம்ப, கதை கேட்டபடி இருந்த நண்பர் வட்டம் மௌனமாகக் கையசைத்து விடை கொடுத்தது.

— இரா. முருகன்

படங்கள்: சாய்வர்ஷா

அட்டையில் மலர்க் கதம்பத்துடன்: ரம்யா; வண்ணப்படம்: பிரவீண்குமார்



• எம்.ஜி.ஆர். தோண்டி எடுத்தார்



# அழகி

வாரத்தில் ஒருநாள் திருநாகேச்சரத்துக்கு வந்துவிட வேண்டும் பாலாமணிக்கு. இந்த நாள், இன்ன மணி, இந்தக் கிழமை என்றில்லை.

இரவு ஓய்கிற நாள். ஓய்கிற வேளை. இன்று ஓய்ந்தது. எட்டு மணிக்குப் புறப்பட்டான். டவுன் பஸ்ஸில்தான்.

கும்பகோணத்திலிருந்து திருநாகேச்சரத்திற்கு டவுன் பஸ்ஸாய்ப் பறக்கிறது. மணிக்கூண்டு, மார்க்கெட், மாமாங்கக் குளம் என்று மெஸ்ஸுக்கு காய்கறியோ, மளிகைச் சாமானோ வாங்க பாலாமணி அலைகிற போதெல்லாம் திருநாகேச்சரம் போகும் பஸ் கண்ணில் தட்டுப்படும்.

'இன்னிக்கு ஒயலேம்மா. நாளைக்கு வந்துடறேன்' என்று மனகள் பாலாம்பிகையிடம் சொல்லிக் கொள்வான்.

திருநாகேச்சரத்து பஸ்காரன் கூரியர் சர்வீஸ் புறாப் போல அந்தச் செய்தியை பாலாம்பிகையிடம் சேர்ப்பித்து விடுவான் என்று உருவில்லா நினைப்பு.

வெளியே தெரியாது. ஒருவருக்கும் சொன்னதில்லை. பனிரெண்டு வருஷமாகத் தாயாய்ப் பிள்ளையாய்ப் பழகுகிற டாக்டர் ஆராவமுது கூட அறிய மாட்டான்.

தெரிய என்ன அவசியம்?

சாரப்பள்ளத்தை விட்டு, பிருஹதீச்வரனையும் போகசக்தி அம்மனையும் விட்டு கையில் ஒரு சூட்கேஸும் தோளில் ஒரு தொங்கு பையுமாக குழந்தை அபயம் ஆட்டுக்குட்டி போல் பின்தொடரக் கிளம்பிய நாள் இந்த விதம் என்று சொன்னால் புரிந்து கொள்வார்களோ?

பெருவுடையார் கோபுர விமானத்திற்கு சாரப்பள்ளத்தில் இருந்துதான் பிரமாந்திரத் தனக்கல் போயிற்றாம். அழகி என்ற கிழவி வீட்டுப் பக்கம் இருந்த கல். இருபத்தைந்தடி சதுரம்.

இங்கிலீஷ்காரன் டன் கணக்கில், எண்பது.

அங்கிருந்துதான் சாரம் கட்டி இழுத்துச் சென்றார்களாம்.

பிரஹதீச்வரனுக்கே கல் நீங்கியதும் விழுந்த பள்ளத்தின் சோகம் தாங்கவில்லை போலும். அவனே ஒப்புக் கொண்டானாம் கோவில் ராஜராஜனுடையது; ஆனால் தான் தங்கியிருப்பது அழகி வீட்டு நிழலில் என்று.

# வீட்டு நிழல்

எம்.ஜி. ஈசன்

வீட்டு நிழல் விட்டு நீங்கிய பாலாமணி மனசின் பள்ளம் எத்தனை அடி ஆழம் என்று துருவ யாருக்கு அக்கறை? அவரவர் மனசில் என்னென்ன பள்ளங்களோ!

ராகு சந்நிதியில் வற்றாத கூட்டம். அவன் தலையில் வழிகிற அபிஷேகப் பாலுக்கு ஓய்வில்லை. காவிரிக் கரையில் மாடும் எருமையும் மடிமடியாய்ச் சுரந்து தள்ளுகின்றன.

அந்தப் பால் சிந்தியாவது மனசின் பள்ளம் தூர்ந்து விடாதா என்று ஜனம் தவிக்கிறது.

பாலாமணி கோவிலுக்குப் போனால் காலூன்றி நிற்கமாட்டாள். விளக்கு ஏற்றுகிறவன் ஒவ்வொரு விளக்காக ஏற்றிச் செல்வது போல ஒரு நிதான விரைவு. வேலை பார்க்கிற கரிசனம்.

சந்நிதி சந்நிதியாக ஒரு நோட்டம். மூர்த்தியின் மீது, மூர்த்திக்கு முன்நின்று கலங்கும் முகங்கள் மீது.

புறப்பட்டு விடுவாள்.

பாலாமணி திருநாகேச்சரத்தில் இருந்தவள்தான். மூன்று வருஷம் முந்தி ஆராவமுது கும்பகோணத்தில் காரோணர் சந்நிதிக்கு எதிர்ச்சந்தில் கிளினிக் ஆரம்பிக்கிற வரை பாலாமணி மெஸ் திருநாகேச்சரத்தில்தான்.

கும்பகோணத்தில் டவுன் பஸ்ஸிலும் சைக்கிளிலும் போய்ப் படிக்கிற பிள்ளைகளுக்காகத் துவங்கிய மெஸ்.

ஹாஸ்டல் கிடைக்காத, ஹோட்டலுக்குக் கொடுக்க வசதியில்லாத ஏழை வீட்டுப் பிள்ளைகளுக்கான மெஸ். ஏழை மெஸ்.

அங்கேயிருந்து போய் ப்ளஸ் டூ படித்தவன் தான் ஆராவமுது.

ஹவுஸ் சர்ஜன்ஸி முடித்ததும் கும்பகோணத்தில் கிளினிக் திறந்தான்.

"திருநாகேச்சரம் என்ன பாவம்டா பண்ணித்து?" என்று கேட்டாள்.

"சரி" என்று மாலை நேரத்தில் அங்கு வர இன்னொரு கிளினிக் திறந்தான்.

அவள் வீட்டு நிழலில் ஒண்டி, அவள் வைத்த வத்தக்குழம்புக்கும் வடுமாங்காய்க்கும் வீங்கி வளர்ந்த பிள்ளை. சொல் தட்டுவானோ!

ஆறு மாதம் ஓடியது. அவனும் டவுன் பஸ்ஸில் ஓடி வந்தான்.

" 'ஸ்ப்லெண்டரா'வது யமாஹாவாவது வாங்கிக்கயேன்!" என்றாள்.

"தொழில் நன்னா பிக்கப் ஆகணுங்கறே" என்று இடக்காகக் கேட்டான் ஆராவமுது.

பாலாமணியும் காவிரித் தண்ணீரில் வளர்ந்தவள்தானே! இடக்கு மடக்கெல்லாம் பொசுக்கென்று உறைத்துவிடும்.

"என்னால அலைச்சல்படறியேன்னு சொன்னேன்!" என்று இறங்கி வந்தாள்.

"நோக்கு அலைச்சல் படலாம். நேக்கு அலைச்சல் வாண்டாமோ?"

"எந்த அலைச்சலைச் சொல்றே?"

"அடுப்படி அலைச்சல். பனிரெண்டு வருஷம்"

அவன் சொன்னபின்தான் காலம் நினைவு வந்தது.

அதற்குப் பதில் சொல்லியிருப்பாள். தேவையில்லை.

ஆராவமுதுக்கு எல்லாம் தெரியும். நன்னாத் தெரியும். சாதம் போடறது சந்தோஷம். திருப்தியா சாட்டுட்டு 'பாலாமணி மெஸ்'தான் என்னோட 'ஸ்டடி இம்ப்ருவ்மெண்ட்'டுக்குக் காரணம்னு சொல்லிண்டு போவானே, அதைக் கேக்கற சந்தோஷம் இல்லே. அத விடப் பெரிசு. கும்பம் குளிரவைக்கிற சந்தோஷம்.

'ஆராவமுதுக்கு அங்கலாய்ப்பு. எங்கிட்டே பீஸ் வாங்கிக் கட்டி, என் மூலம் முன்னுக்கு வந்துட்டு கை கால் ஒஞ்சு அக்கடான்னு உட்கார்ந்து சாப்பிட மாட்டாளாங்கற அங்க லாய்ப்பு.'

ஆனால் அவள் உட்கார்ந்து சாப்பிட மாட்டாள். அவனுக்கும் தெரியும்.

ஆராவமுது ஆறாம் மாசம் முடிவில், "அம்மா" என்று சட்டையை மாட்டிக் கொண்டே இழுத்தான்.

பாலாமணி சொந்த அம்மா இல்லை. ஒரு சொந்தமும் இல்லாதவனுக்கு அது ஒரு பெரிய

சுதந்திரம். எந்த இரவல் கூட்டிலாவது தன் மனசை அக்கடாவென்று வைத்து விடலாம். 'மாமி' சிறிது அந்நியம். 'அம்மா' அப்படி யில்லை.

"என்ன?" என்று குழம்பிற்கும் ரசத்திற்கும் புளி கரைத்தவாறே கேட்டாள் பாலாமணி.

"ஜாதகையைக் கும்மோணத்துக்கு மாத் திண்டுடவா?"

"ஏன் திடீர்னு?"

"கும்மோணத்து டாக்டர் திருநாகேச்சரம் வரலாம். திருநாகேச்சரம் டாக்டர் கும்மோ ணத்துக்கு வரப்படாது."

"அப்படி ஒரு சாஸ்திரம் இருக்கோ."

"சாஸ்திரம் இல்லே. சம்பிரதாயம். வில் லேஜ் டாக்டரான்னு கும்மோணத்திலே நெத்தி சுளிக்கறா."

"மருத்துவம் பாக்கறதிலேயும் விலேஜ், டவுன்னு பாகுபாடு இருக்குன்னு சொல்லு!"

"மருத்துவத்திலே இல்லே. நோயாளி மனசுலே இருக்கு."

"மாத்திக்கயேன்."

"என்ன 'ஏ'காரத்திலே சொல்றே?"

"பின்ன எப்படிச் சொல்லட்டும்?"

"மாத்திக்கலாம்னு சொல்லு."

"எப்படியாவது பாலாமணி கையக் காலைக் கட்டி ஒக்காத்தி வச்சுச் சாதம் போட் டுடணும் நோக்கு!" என்று கொசுவத்தில் கை துடைத்துக் கொண்டே அவனைக் குறுகுறு வென்று பார்த்தாள்.

மூக்கும் பார்வையும் நெற்றிப் பொட்டின் வட்டத்தைச் சுற்றி நிமிர்ந்து நின்ற வியர்வை யும் நாற்பத்தி மூன்று கடந்தும் அவள் யௌ வன எழில் பாங்கு கெடாததை உணர்த்தின.

**அ**வனுக்கு இப்படி அபூர்வ வேளையில் அபயம் நினைவு வந்துவிடும். மாடு மாதிரி நெஞ்சை முட்டும். வலிக்கும். கலங்கி விடு வான்.

அபயம், பாலாமணியின் மகள்தான். வேறு ரகம்.

அபயம் பாலாமணியைப் பின்புலமாக வைத்து வரைந்த சித்திரம். தேஜஸ் ஜாஸ்தி.

அம்மா கொஞ்சம் மனுஷி. கொஞ்சம் அப் சரஸ். மகள் சுத்த கந்தர்வக் கன்னி.

பாலாமணி பார்த்தால், சிரித்தால் மனசு சற்று உதறும். தசைக் கவர்ச்சி கண்டி இழுக் கிறதோ என்று சுதாரிக்கத் தோன்றும்.

அபயம் நிர்ப்பயமான வஸ்து. வெள்ளை யாய் சிறகு முளைக்க விட்டு விண்ணிற்கு எழும்பும் பார்வை. பால் வழியும் சிரிப்பு. பனி மலரும் வார்த்தை. நினைத்தாலே கலங்குகிறது.

"என்னடா?"

ஆராவமுது கண் கவிழ்த்தான்.

"சொல்லேண்டா!"



அவன் ஒன்றும் சொல்லாமல் சற்று நின் றான். பின் வெளியேறினான்.

பாலாமணிக்குப் புரிந்தது. ஆராவமுதுக்கு அபயம் நினைவு வந்து விட்டது. அது ஒரு சாரப் பள்ளம். லேசில் அகலாது. ஆராவமுது பேதை.

"அப்பா, உப்பிலியப்பா" என்று அவன் வெளியேறிய சூன்யம் பார்த்துக் கூப்பிட்டாள்.

**வ**யசுக்கு வந்து ஒரு வருஷம் இருந்தாள் அபயம். செவ்வாயிலும் வெள்ளியிலும் துர்க்கை சன்னிதியில் எரியும் தீபக் கொழுந்து போல.

வெளிச்சக் கோலாகலத்திலேயே நீடித்தால் கண் மழுங்கி விடும் என்று எதற்கோ தோன்றி யிருக்கும். அது அவித்து விட்டது.

மரண காரணத்திற்கு இப்பொழுது புதிது புதிதாய் பெயர்கள். அப்போது வெறும் ஜுரம்.

ஆராவமுதுக்கு அபயத்தின் மீது நாட்டம் இருந்ததை அவள் உயிரோடிருந்தபோதே அவள் அறிவாள். இதைக் கண்டுபிடிப்பது என்ன பிரமாதம்? சுலபமாய்த் தெரிகிற விஷயம்.

அப்போது அவள் கோபப்படவில்லை.

இது எங்கு முடியும் என்றுதான் கவலை. பயமில்லை.

பாலாமணி பயப்படுகிறவள் அல்ல.

புத்தி தெரிந்த பெண்ணைப் பக்கத்தில் பாயில் உடன் படுக்க வைத்திருக்கும் பாதி ராத்திரியில், வேறொருத்தியுடன் அவள் கண வன் கையும் பாட்டிலுமாய் வந்ததைப் பார்த் தவள். மனிதன் மிருகமானதைக் கண்டவள்.

"வெளியே போய்டுங்கோ!" என்று விரல் நீட்டிப் பத்ரகாளியாக நின்றவள்.

"என்னடி பண்ணுவாய்?"

முன்னே ஓடி பாலாமணி அவர்கள் நுழைந்து வந்த கதவை விரியத் திறந்து விட் டாள்.

"ம்ம்ம்" என்று கைநீட்டி வழிகாட்டி புலி மாதிரி உறுமினாள். கதவோரம் ஒரு கடப் பாரை. அதையும் அவளையும் விசுவநாதன் மாறி மாறிப் பார்த்தான்.

"உன்னைப் பாத்துக்கறேண்டி. நீ வாடி!" என்று கூட்டி வந்தவள் தோளில் கை போட் டுத் திரும்பித் திரும்பி முறைத்துக் கொண்டே வெளியேறினான் விசுவநாதன்.

**"இப்ப என்ன செய்துக்கிட்டிருக்கீங்க?"**

**"ஆளுங்கட்சிக்கு ஆதரவா ஒரு நடுநிலை நாளேடு நடத்திக்கிட்டிருக்கேன்!"**

**— உ. ராஜாஜி**

எப்படி இவர் இப்படி குப்பையானார்?

நம்ப முடியவில்லை.

என்ன கொஞ்சல்! என்ன வாத்சல்யம்! எவ்வளவு பிரியம்!

எதுக்கு இப்படி நீசமாகணும்? மனுஷாளாலே இப்படி கோபுரத்திலேர்ந்து தொபுக்கடீர்னு தலைக்குப்புற சாக்கடைலே விழ முடியுமா?

அன்று சாரப்பள்ளத்தில் நேர்ந்தது நிலநடுக்கம். எந்த அச்சின் மீதும் பூமி இல்லை என்று உணர்த்திய பூகம்பம்.

அபயம்தான் பயப்பட ஒன்றுமில்லை என்று மிஞ்சிய அச்சாணி.

மணிக்கூண்டு முதல் மாமாங்கக்குளம் வரை அவன் போட்ட சுண்டலை கும்பகோணம் விரும்பி வாங்கிச் சாப்பிட்டது. பயப்பட ஒன்றுமில்லை. பிழைத்துக் கொள்ளலாம்.

திருநாகேச்சுரத்துக்காரர் ஒருநாள் சுண்டல் வாங்கிச் சாப்பிட்டுவிட்டு விளையாட்டாகச் சொன்ன வழிதான் ஸ்டூடண்ட்ஸ் மெஸ்.

இங்கே ஆராவமுது கிடைத்தான்.

இப்போது அபயத்திற்கு அடிபோடுகிறான். இவனும் ஆண்தானே! நல்ல பிள்ளைதான். சாது. சூட்சுமம் உள்ளவன். ஆனால் சூது வாதில்லை.

எனினும் இவனும் ஆண்.

"ஆராமுது, நீ ஐயங்கார், நாங்கள்ளாம் ஸ்மார்த்தா."

நறுக்கென்று விஷயத்திற்கு வந்தான் ஒரு நாள். என்னது திடீர் வேற்றுமை என்று அவன் முகம் மேலும் வெளுத்தது.

"ஏம்மா... அநாதைன்னு பூடகமாச் சொல்றியா?"

"அதில்லே! வந்து..."

நாற்காலி முதுகைப் பிடித்துக் கொண்டு ஆராவமுது கம்மென்று நின்றான். அவன் பிளஸ் டூ முடித்து ரிசல்ட் எதிர்பார்த்துக் கொண்டிருந்த நேரம் அது.

முதுகைத் திருப்பி நெடுநேரம் முற்றத்து வெயிலைப் பார்த்துக் கொண்டிருந்தாள் பாலாமணி.

ஒரு விசும்பல் சத்தம்.

திரும்பினாள். அபயம்.

ஆராவமுதையும் பாலாமணியையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தவள், அம்மா முகம் திரும்பவும், விருட்டென்று புழக்கடைக்குப் போனாள்.

காலடியோசை கேட்டு நிமிர்ந்தான் ஆராவமுது. பாலாமணி அவனைப் பார்த்தாள்.

வெள்ளை வெளேரென்ற முகத்தில் கண்ணீர்ச் சாரல்.

மீண்டும் தலை கவிழ்த்து அவன் வெளியே போனான்.

'அப்பா உப்பிலி, யார் அநாதை?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டாள்.

இனி தலையிடுவதில்லை என்று முடிவு செய்தாள்.

**மே**, ஜூன்.

இரண்டு மாதங்கள்.

அபயமும், ஆராவமுதும் கனவு கண்ட காலம் அவ்வளவுதான். அனுமதியும் காபந்தும் இருந்த கனவு.

அபயம் போய் விட்டாள்.

ஆராவமுது அடிபட்ட குருவி போல மூலையில் விழுந்தான்.

என்னமோ ஆச்சரியம். பாலாமணி தெளிந்து விட்டாள்.

உப்பிலியப்பனையும் பாலாம்பிகையையும் ஒருமுறை போய்ப் பார்த்தாள்.

அகால இரவில் கிரௌஞ்ச பட்சிக்கு விமோசனம் கிட்டிய அஹோராத்ர புஷ்கரிணியில் மூன்று முழுக்குப் போட்டாள். அவ்வளவுதான்.

**வீ**ட்டுக்கு வந்தால் துக்கப் பூனைக்குட்டி சுருண்டு படுத்திருந்தது.

"ஆராமுது..."

அவன் தலைதூக்கிப் பார்த்தான். கண்கள் கோவைப்பழம் போலச் சிவந்திருந்தன.

"எழுந்திரு"

அவன் எழவில்லை.

"நல்ல டாக்டர் இருந்தா அவளைக் காப்பாத்தி இருக்கலாமாம்."

"யார் சொன்னது?"

அவன் குரல் கம்மிற்று.

"கடைத் தெருவிலே சாமிநாது சொல்றார்."

அவன் தலைமீது முழங்கை வைத்து விட்டதைப் பார்த்தான்.

"நீ எண்ட்ரன்ஸ் எழுது. எம்.பி.பி.எஸ். கிடைக்கும்." அருள்வாக்கு மாதிரி சொன்னாள்.

அவன் திரும்பிப் பார்த்தான்.

"நிறைய அபயங்கள் இருக்காடா குழந்தே!" அவள் குரல் தழுதழுத்தது.

அவன் எழுந்து உட்கார்ந்தான்.

சொன்னபடி நடந்தது. எம்.பி.பி.எஸ்.



" 'ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீ' நடத்தறதாச் சொன்னீங்களே, என்ன தயாரிக்கறீங்க?"

"அரையடி ஸ்கேல்."

— ஜெயாப்ப்ரியன்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

கிடைத்தது. கும்பகோணத்தில் ஒரு கிளினிக். திருநாகேச்சுரத்தில் ஒரு கிளினிக்.

நிறையத்தான் அபயங்கள். ஓய்வு ஒழிவில்லாமல் காப்பாற்ற வேண்டியிருந்தது. சமயத்தில் அலுப்பாய் விடும்.

அன்று மாலை தான் கும்பகோணத்துக்கு ஜாகை மாற்ற ஆராவமுது கேட்டிருந்தான்.

இரவு கடைசி பஸ்ஸில் அவன் வீடு திரும்பியபோது "ஜாகையை மாத்திக்கலாம். ஆனா..." என்று தொடங்கினாள்.

"நீ மெஸ்ஸை விட மாட்டே. அதானே."

அவன் சட்டை பேண்டைக் கழற்றியவாறே கேட்டான்.

"கை கால் உள்ள வரைக்கும் நாலு பேருக்கு உபகாரமா இருககணும் ஆராவமுது."

"கும்மோணத்திலே பாத்திருக்கிற வீடு பெரிசு. இஷ்ழ தாராளமா மெஸ் நடத்தலாம்."

அவன் பேசவில்லை. யோசித்து விட்டுப் பின்பு சொன்னான்.

"நோக்கு ஒரு நல்ல ஐயங்கார் பொண்ணா பாத்து கல்யாணத்தை முடிச்சுட்டேன்னா..."

கேட்டுக் கொண்டே கைகால் அலம்பி முகம் துடைத்தான் ஆராவமுது.

"நீ ஹாய்யா மெஸ் நடத்துவே. நான் வேற நடுவிலே ஒரு தொல்லை" என்று சொல்லியவாறு சாப்பாட்டுத் தட்டின் முன் உட்கார்ந்தான்.

சாதம் போட்டு பொறித்த குழம்பை ஊற்றினாள் பாலாமணி.

"அம்மா! விஷக்கடியை ஒருமுறை வாங்கினா போறாதோ"

அவள் கை கரண்டியோடு உயரத்தில் நின்று விட்டது.

அவன் நிமிர்ந்தான்.

"நான் அபயத்தைச் சொல்லலே." என்றான்.

அப்பளத்தை எடுத்து வைத்தாள்.

"இது போதும்மா. வேற வேண்டாம்."

மீண்டும் அவன் நிமிர்ந்தான்.

நெஞ்சு விம்மிற்று.

திருநாகேச்சுரத்தில் பஸ்ஸிலிருந்து இறங்கும்போதே மனசில் கலக்கம். இன்று என்னமோ நடக்கப் போகிறது!

நினைப்பிற்கும் நடப்புக்கும் ஒரு துரித சம்பந்தம் சில வேளையில் அமைந்து விடுகிறது.

"பாலாமணி"

யாரோ கூப்பிட்டார்கள்.

லாரி ஒன்று நின்றிருந்தது. தெருவிளக்கு தள்ளியிருந்ததால் முகம் தெரியவில்லை. லுங்கி தெரிந்தது.

"பாலாமணி..."

பரிச்சயமான குரல்.

யார்? கணவன் விசுவநாதனா?

ஒரு மின்னல் கொடியோடுகிற நேரம். மெஸ். ஆராவமுது. அபயம் என்று மனசில் எல்லாம் பளிச்சிட்டன.

சரசரவென்று யோசித்து படீரென்று முடிவுக்கு வந்தாள். சாலைத் திருப்பத்துச் சந்தில் நுழைந்து மூச்சுவாங்க ஓடினாள். இருள் தங்கிய ஒரு வீட்டுத் திண்ணையில் மறைந்து நின்று கொண்டாள்.

"பாலாமணி", "பாலாமணி" கூப்பிட்டுக் கொண்டே ஒன்றுக்கு இரண்டு முறை ஓர் ஆணுருவம் அந்தச் சந்தில் ஓடிவந்து இடமும் வலமும் பார்த்து நடந்தது. ஐந்து நிமிஷம் அவள் மூச்சை அடக்கி நின்றாள்.

ஒரு தெருநாய் குலைத்தது.

சாலையில் நின்ற லாரி ஹார்ன் ஓசை கேட்டது. விட்டு விட்டு மூன்று முறை.

மேலும் சிறிது நேரம் கழிந்தது. நடமாட்டமில்லை. திரும்பிப் போயிருக்க வேண்டும்.

"போலாம் ரைட்!" என்று ஒரு சாலைக் குரல். அடுத்த சில விநாடியில் லாரி கிளம்புகிற ஒலி.

பாலாமணி சாலைக்கு வந்தாள்.

யாரோ யாரையோ கேட்டார்கள்.

"டிரைவர் ஃபுல்லா இருக்கான். தடுமாறிட்டிருக்கான்."

"யாரையோ கூப்பிட்டானே."

"ஆமாம்... வாடா மணி.. வாடா மணின்னான். ஒம் பேரு மணியாச்சே. ஒன்னைக் கூப்பிட்டறான்னு நினைச்சேன்."

"சுகம்புடா ஒனக்கு! இந்த லோடிலே போறானே இவன் போய்ச் சேருவானா...?"

"பெரியகோயில் கும்பாபிஷேகத்துக்குச் சாமான் போவுது. போயிடுவான்.. போயிடுவான்."

பாலாமணி திரும்பிப் பார்த்தாள்.

தூரத்தில் போகும் லாரியின் சிவப்பு விளக்கு வெளிச்சம் தெரிந்தது.

"பிரஹதீஸ்வரா" என்று தனக்குள் கூவிக் கொண்டாள்.

லாரியின் கியர் மாறும் ஓசை துல்லியமாகக் கேட்டது.




1997 ஜூன் 8
ஈசுவர வைகாசி 25
மலர் : 55
இதழ் : 45

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## ஜால்ரா ஜனநாயகம்!

'ஒரு கூடை செங்கலும் பிடாரி' என்று தஞ்சை மாவட்டத்தில் ஒரு பழமொழி வலம் வருவதுண்டு. ஒன்றைப் பார்க்க ஒன்று, அத்தனையும் உபயோகிக்க லாயக்கில்லாத அரை வேக்காட்டுக் கற்கள் என்று அர்த்தம்.

இன்று இந்திய அரசியல் சூழ்நிலையைப் பார்க்கையில் அந்தப் பழமொழியைத்தான் கோபத்துடன் எடுத்துச் சொல்லத் தோன்றுகிறது.

போகிறபோக்கில் சேஷன் ஓர் உத்தரவைப் பிறப்பித்துவிட்டுப் போய்விட்டார். 'எல்லா கட்சிகளும் உட்கட்சித் தேர்தல்களை நடத்தியாக வேண்டும் - குறிப்பிட்ட காலகெடுவுக்குள் நடத்தாவிட்டால், தேர்தலில் போட்டியிட அக்கட்சிக்கு அனுமதி வழங்கப்பட மாட்டாது' என்று அவர் கூறிவிட, காங்கிரஸ் கட்சி அப்படி இப்படி வாய்தா வாங்கி, ஒருவழியாக உட்கட்சித் தேர்தல்களை நடத்தியிருக்கிறது.

தேர்தல்களா அவை..?! தேர்தல்களையே கேலிக்கூத்தாக்கும் கேவலம்! தமிழ்நாடு காங்கிரஸில் மூன்று பிரிவுகள் தனித்தனியே தேர்தல்கள் நடத்தியுள்ளன. அத்தனை மாநிலங்களிலும் அடிதடி நடக்காத குறையாக காங்கிரஸின் பல பிரிவுத் தலைவர்கள் குடுமிப்பிடி சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். 'உட்கட்சித் தேர்தல் அக்கிரமமான முறையில் நடந்தது' என தலைமையிடம் புகார் சொல்ல முற்பட்டிருக்கிறார்கள்.

காங்கிரஸ் தலைமைப் பொறுப்புக்கான தேர்தலிலோ அதனினும் கேவலமான நிலைமை! கேசரியை எதிர்த்துப் போட்டியிட ராஜேஷ் பைலட், ஷரத் பவார், அந்துலே, ஜிதேந்திர பிரசாதா என தலைக்குத் தலை கிளம்பி விட்டார்கள். இத்தனை பேரும் கேசரிக்கு எதிராகத் தனித்தனியே அணிவகுத்தால்




காங்கிரஸின் கதி என்னாகும் என்பதைச் சொல்லத் தேவையில்லை!

ஜனதா தளக் குட்டையிலும் இதே போன்ற குழப்பம். தாம் தலைவராகத் தொடர்வதற்கு பெருவாரி அபிப்பிராயம் **(consensus)** மூலம் சம்மதம் பெற வேண்டும் என லல்லுபிரசாத் யாதவ் வற்புறுத்துகிறார். ஷரத் யாதவ் இதற்குக் கடும் எதிர்ப்புத் தெரிவித்து, தாம் அப்பொறுப்புக்குப் போட்டியிட விரும்புவதையும் கோடி காண்பித்திருக்கிறார்.

அ.தி.மு.க. மட்டும் விதிவிலக்கா...? ஜெ பிரிவுக்கும் திருநாவுக்கரசு பிரிவுக்குமிடையே, பொதுக் குழுவைக் கூட்டுவதற்கு ஒரு தேதி யுத்தமே நடக்கிறது!

ஜெ.வைக் கடுமையாக எதிர்த்தாலும், திருநாவுக்கரசு பிரிவினரை ஆதரிக்க போட்டி அ.தி.மு.க.வினர் தயாராயில்லை. ஆக, இப்போதைக்கு இரண்டு போட்டி அ.தி.மு.க. கட்சிகள்!

கட்சித் தலைமைக்கு இப்படி அநாகரிகமான போட்டி நடக்கும்போது, உட்கட்சித் தேர்தல்கள் குழாயடிச் சண்டைகளாக உருமாறும்போது, தேர்தல் கமிஷனின் உத்தரவைக் கடனுக்கு நிறைவேற்றுவதில் என்ன பயன்? இதனால் கட்சி அமைப்பும் சீர்படுவதில்லை; மக்களுக்கும் ஆதாயம் இல்லை.

உட்கட்சி ஜனநாயக மரபுகள் ஒட்டுமொத்தமாகக் குழிதோண்டிப் புதைக்கப்படுவதுதான் மிச்சம்!

கட்சித் தலைவர்கள் 'முகராசி'க்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பொறுப்பில் தொடர்வதும் அவர்களைச் சூழ்ந்துகொண்டு குட்டித் தலைவர்களும் தொண்டர்களும் ஜால்ரா அடிப்பதும்தான் இன்றைக்குக் கட்சி மாநாடுகளில் நடைபெறுகிறது.

உண்மையில், கட்சி மாநாடுகள் நடத்துவதே, உறுப்பினர்கள் பலருக்கும் தங்கள் கட்சியின் கொள்கைகளை எடைபோடவும், காலத்துக்கேற்ப மாற்றங்களைப் புகுத்தவும் அது குறித்துத் தங்கள் கருத்தைச் சொல்லவும் எண்ணங்களைப் பகிர்ந்துகொள்ளவும் இடமளிக்க வேண்டும் என்பதற்குத் தான்.

ஆனால், நம் நாட்டில் கட்சி மாநாடுகள் சாதனை விளக்கக் கூட்டங்களாகவே நடந்து முடிகின்றன. கூடவே, எதிர்க்கட்சிகளை விரும்பியபடியெல்லாம் விமர்சிக்கும் மேடை வாய்ப்புகளாக அவை திகழ்கின்றன. கூடுகிற கூட்டத்தின் அளவும் ஆடம்பரமும் மட்டுமே கட்சியுடைய பலத்துக்கு ஆதார




மாகக் கொள்ளப்படுகிறது.

உட்கட்சித் தேர்தல் என்று வரும்போது, பேரணியிலும் மாநாட்டிலும் சக்கைபோடு போட்ட கட்சியின் சாயம் அடியோடு வெளுத்துப் போகிறது. பிளவுகளும் பிரிவினைகளும் தலைதூக்கி, நிரந்தரமாகி விடுகின்றன.

ஜனநாயக பாரம்பரியம் வேரூன்றிய அயல்நாடுகளில் (குறிப்பாக பிரிட்டன்) ஓர் அமைச்சரவை தேர்வானால், எதிர்க்கட்சியினர் ஒரு நிழல் அமைச்சரவையை அமைத்து, தங்கள் கருத்துக்களை மக்கள் அறியும்படி வெளியிட்டுக் கொண்டேயிருப்பார்கள். கட்சிக் கூட்டங்களிலும் மாநாடுகளிலும் வெளிப்படையாகக் கருத்து சொல்லி, சுயவிமர்சனமும் ஆத்ம பரிசோதனையும் நடத்துவார்கள். இவையெல்லாம் அக்கட்சி பலப்பட உதவுவதோடு அல்லாமல், நல்ல கருத்துக்களைச் சொல்லும் பல புதிய, இளம் உறுப்பினர்களை அடையாளம் காட்டி முன்நிறுத்தும். கட்சித் தேர்தல்கள் என்று வரும்போது தலைமைப் பண்புடைய இந்த உறுப்பினர்களுக்கு வாய்ப்புத் தர முடிவெடுப்பது சுலபமாகும். கட்சி மாநாட்டில் உருப்படியான யோசனைகள் சொன்ன அந்த நபருக்குப் பிற உறுப்பினர்களின் ஆதரவும் கிடைக்கும்.

இந்தப் பண்பாடு, நமது ஜால்ரா ஜனநாயகத்தில் அடியோடு இல்லாமல் போனது துரதிர்ஷ்டம். அதன் பயனைத்தான் நாடே இப்போது அனுபவித்துக் கொண்டிருக்கிறது.

ஆரோக்கியமான கருத்துப் பரிமாற்றத்தை அனுமதிக்காத, குறுகிய நோக்கிலான கட்சிகள், என்னதான் தேர்தல் கமிஷன் நிபந்தனைக்காக உட்கட்சித் தேர்தல் நடத்தினாலும், அதன் மூலம் தேர்வாகிற தலைவர்கள் போலித் தலைவர்களாகவே இருக்கிறார்கள். இறுதியில் அவர்கள் ஆட்சிப் பொறுப்பையும் ஏற்க நேர்ந்தால், அதே போலித்தனமும் வாய்ச் சொல் வீரமும் மட்டுமே தொடர்கிறது. நல்லாட்சி என்பது மக்களுக்கு எட்டாக் கனியாகவே இருக்கிறது.

இம்மாத இறுதியில் தி.மு.க. மாநாடு சேலத்தில் நடைபெறவுள்ளது. இந்தக் கூட்டமாவது பிற கட்சி மாநாடுகளிலிருந்து விதிவிலக்காக அமையுமா?... எழுபத்திநாலாவது வயதில் அடியெடுத்து வைக்கும் முதல்வருக்குப் பிறந்த நாள் சிந்தனையாக இந்தக் கேள்வியை முன்வைக்கிறோம்.

# வட்டமேஜை



• தமிழ்க்குடிமகன் : சீரியஸாகி விட்டால்?



• சோனியா : பூஞ்சோலை?



• அப்பாஸ் : கீதைக்கா விளக்கம்?

## பூத்துக் குலுங்கிவிடவா போகிறது காங்கிரஸ்?

☒ காங்கிரஸ் கட்சி, சோனியாவை உறுப்பினராகக் கொண்டதன் மூலம் 'பூத்துக் குலுங்கும் பூஞ்சோலையாக மாறிவிடுமென (ஒப்பற்றவர்களோடு சோனியாவை ஒப்பிட்டுப் பகற்கனவு காணும் மூப்பனாருக்கு, அவர் ஆற்ற வேண்டிய அதிமுக்கிய பணிகளை அடையாளங் காட்டித் தாங்கள் தீட்டிய தலையங்கம் அரசியல் சாணக்கியம் பொதிந்த அரிய பொக்கிஷம்!

கோவில்பட்டி. எஸ்.ர. கேசவன்.

☒ டாக்டர் கிருஷ்ணசாமியின் பேட்டி படித்தேன். "என் சமூகம், ஒற்றுமையாகவும் கட்டுக்கோப்பாகவும் இருந்து, எதிர்த்துப் போராட்டம் நடத்த வேண்டிய தன் அவசியத்தை வலியுறுத்திப் பேசியது..." எனக் கூறியிருக்கிறார். இதைத்தானே வன்முறையைத் தூண்டும் பேச்சு என்கிறோம்? எதிர்த்து என்றால், யாரை எதிர்த்து...? புரியவில்லை, இவரது பேச்சின் நியாயம்...!

சூலூர், பாரதி பிதா.

☒ 'டாக்டர் கிருஷ்ணசாமியின் மனம் திறந்த பேட்டி படித்தேன். 'அமுக்கப்பட்ட' வகுப்புச் சகோதரர்களுக்கு சிற்சில இடங்களில் இன்னமும் நடக்கும் கொடுமைகள் மனத்தை வருத்தத்தான் செய்கின்றன.

திருவண்ணாதபுரம், தி.க.பாலசுப்ரமணியன்.

☒ திரை மறைவில் இல்லறம் நடத்திக் கொண்டிருக்கும் போலிச் சாமியார்கள் மலிந்து காணப்படும் இந்நாளில், துணிச்சலாக, துறவறம் துறந்து, இல்லறம் புகுந்திருக்கும் வித்யா பூஷண தீர்த்த ஸ்வாமி உண்மையிலேயே பாராட்டுக்குரியவர்தான்!

கும்பகோணம், கே. என். பாலகிருஷ்ணன்.

☒ முன் அட்டையில் நக்மாவும், பின் அட்டையில் அப்பாஸும் புன்னகை முகத்துடன் காட்சியளித்தது அசத்தலோ அசத்தல்!

திருச்சி – 18, அம்மனூர் என். சாம்பமூர்த்தி.

☒ கெகிகெவுக்கு அப்பாஸின் விளக்கத்தை, என்னவோ கீதைக்கு விளக்கம் தருகிறாற் போல முக்கியத்துவம் தந்து போடுகிறீரே... நியாயமா சார்...?

வேலூர், வே. ந. கதிர்வேல்.

☒ 'வற்றிப் போன' எண்ணெய்க் குளம் பற்றிய கட்டுரையில் வளமான சிந்தனை நீரைக் கொட்டி விட்டீர்கள். உங்கள் சங்கநாதம் 'டெல்லி' வரை கேட்க வேண்டும்!

நீலம்பூர், ஏ.எஸ். இராமசாமி.

☒ 'டாப் ஆங்கிள்' பகுதியில் ரயில் தண்டவாளங்களைக் காட்டி, 'இணைவதும், பிரிவதும் அரசியலில் மட்டுமா! என்று கேட்டிருந்தீர்கள். அதோடு 'கவிழ்வதும்' என்ற வார்த்தையையும் சேர்த்திருந்தால் இன்னும் சுவாரசியமாக இருந்திருக்கும்!

மதுரை, எஸ். செல்வம்.

☒ 'தமிழ்க்குடிமகனுக்குச் சில யோசனைகள்' சிரிக்கவும், சிந்திக்கவும் வைத்தது. நீங்கள் நகைச் சுவையாக எழுதப் போய் அதை த.கு.மகன் 'சீரியசாக எடுத்து விட்டால்...?' ஏற்கெனவே 'சன் டி.வி'க்கு சட்டசபையில் புது விளக்கம் சொல்லியவர்களல்லவா இவர்கள்!

தூத்துக்குடி, ப. குமார்.

☒ 'முரண்பாடாகச் செய்கிறாரா மோகன் வைத்யா?' என்ற தலைப்பில் 18.5.97 இதழில் என்னைப் பற்றி வெளியான செய்தியின் கடைசியில் ''ரஜினியின் ராகங்கள்'' நிகழ்ச்சி டி.வி.யில் வரப் போவது பற்றி எனக்குத் தெரியவே தெரியாது என்று தவறாக வந்து விட்டது. அது உண்மை அல்ல. அந்நிகழ்ச்சி ஒளிப்பதிவு செய்யப்பட்டபோது, அது எந்த சாட்டிலைட் சானலில் வெளிவரப் போகிறது என்பது தெரியாதுதான் என்றாலும் பிறகு அதை விஜய் டி.வி.யில் ஒளிபரப்பப் போவதாக பேஞ்ஜோ குளிர்பான நிறுவனத்தினர் என்னிடம் சொல்லிவிட்டுத்தான் செய்தார்கள் என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை - 28, மோகன் வைத்யா.

# "எல்லோர் கவனமும் எங்கள் மீது ! தாங்க்யூ, என்டைஸ் !"




என்டைஸ்
பள்ளிச்சீருடைகள்.
துடிப்புடன் திகழும்
பள்ளிப்பருவத்திற்கு
உறுதியான துணை.
படிக்கும்போதும்,
விளையாடும்போதும்.
என்டைஸ் சீருடை.
இளைய பாரதத்தின்
இதயத்தில்
இடம் பெற்றது.

**என்டைஸ்**®

**பள்ளிச்சீருடைகள்**

**சிறந்த ரகங்கள். சரியான விலை.**

**நேஷனல் டெக்ஸ்டைல் கார்ப்பொரேஷன்** (தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி லிமிடெட்) ஒரு மத்திய அரசு நிறுவனம்

35-B, சோமசுந்தரம் மில்ஸ் ரோடு, கோயமுத்தூர் - 641 009.

# படித்ததில் பிடித்தது!

எம்.ஜி.ஆரைப் பற்றி எழுதாதது இல்லை; பேசாதது இல்லை; தெரியாதது இல்லை. டி.ஜி.பி. (முன்னாள்) மோகன் தாஸிலிருந்து திரையுலக மணிரத்னம் வரைக்கும் நிறையவே காட்டி விட்டார்கள். ஆனாலும் இந்த நூற்றி இருபத்தி நாலு பக்கப் புஸ்தகம் (இயற்கை மருத்துவம், வைப்பு நிதி, ராசியின் ஆசி இன்னபிற விளம்பரங்களுடன்) புதுசு புதுசாக சுவாரஸ்யம் உண்டு பண்ணத்தான் செய்கிறது.

தாம் நடித்த ஒரு படத்துக்கு (எங்க வீட்டுப் பிள்ளை) தாமே சென்னை நகர விநியோக உரிமையை வாங்கி, எதிர்பார்த்ததற்கு மேல் லாபம் வந்ததால் தயாரிப்பாளருக்கு (நாகிரெட்டி) ஒரு லட்ச ரூபாய்க்கு செக் அனுப்பி, புதுவித 'அதிர்ச்சி' உண்டு பண்ணிய ஒரே சினிமாக்காரர் எம்.ஜி.ஆராகத்தான் இருக்க முடியும்!

வழக்கத்துக்கு மாறாக 'இதயக்கனி' படத்தின் காதல் காட்சிகளில் கொஞ்சம் 'கூடுதல்' நெருக்கம் காட்டி நடித்துவிட, ஒரு வயதான பெண்மணி "நீங்க கூடவா இப்படி?" என்கிற ரீதியில் கேட்டிருக்கிறார்.

"நிச்சயமா இனிமே இப்படி நடிக்க மாட்டேன்!" என்று போல்டாக அப்பாலஜி கேட்ட குணம், படிப்பவரை வியப்பின் எல்லைக்குக் கொண்டு போகச் செய்வது. (மூத்தப் புகழ் நடிகர்கள் கவனிக்க)

அப்புறம், எம்.ஜி.ஆரின் தைரியம் பற்றி அவரது அண்ணன் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். ஜெய்சங்கர், ஸ்டண்ட் மாஸ்டர் ஷ்யாம் சுந்தர், ரஜினி, கமல் எனப் பலர் அவ்வப்போது பத்திரிகைகளில் எழுதியவற்றைத் தேடித் தொகுத்திருக்கிறார்கள். கவனத்தைக் கவர்ந்தது, சிவகுமாரின் ஒரு புதுக்கவிதை.

"எத்தனையோ பல்கலைக் கழகங்கள்
உனக்குப்
பட்டம் தர முன் வந்தாலும்
ஏற்காமல்
சென்னைப் பல்கலையின்
பட்டத்தை மட்டும்
ஏற்றுக் கொண்டாயே,
அதன் மர்மமென்ன?
ஆயிரம் பல்கலைக் கழகமாய்
அரிதுயில் கொண்டிருக்கும்
அண்ணாவுக்குப் பக்கத்தில்
அது அமர்ந்திருப்பதால் தானே?'





எம்.ஜி.ஆர். நினைவுகள்

அருண்மொழி பதிப்பகம்

அபூர்வ புகைப்பட ஆல்பம்

விலை ரூ. 30

## அதிர்ச்சி புதுசு!

நூலில் இருக்கும் நூற்றுக்கணக்கான புகைப்படங்களில் சில மிக அபூர்வமானவை. (லுங்கி கட்டிய எம்.ஜி.ஆர். தொப்பி, கண்ணாடி இல்லாத எம்.ஜி.ஆர்., தியானம் பண்ணும் எம்.ஜி.ஆர், கோணம் பார்க்கும் எம்.ஜி.ஆர்.)

**எம்.ஜி.ஆர் நினைவுகள் / அருண்மொழி பதிப்பகம், 6, அஜீஸ் முல்க் 1 வது தெரு, ஆயிரம் விளக்கு, சென்னை - 6/ரூ. 30/-**

# பார்வைக்கு வந்தவை

● பெண்களுக்கு ஆலோசனைக் களஞ்சியம்/கங்கா ராமமூர்த்தி/கங்கை புத்தக நிலையம், சென்னை - 17/. ரூ. 60/-
சமையல் குறிப்புகளிலிருந்து பெண்களுக்குப் படிக்கப் பிடிக்கிற சகலவிதமான விஷயங்களையும் சேர்த்துக் கலக்கிய தொகுப்பு. பிறருக்கு போரடிக்கும்.

● கூடை நிறைய லட்டு/நர்மதா பதிப்பகம், 16/7, ராஜாபாதர் தெரு, சென்னை - 17/ ரூ. 18/-
குழந்தைகளுக்கான சிறுகதைகள். ஆகவே படங்கள் இல்லாதது பெரிய குறை.

● தம்பிக்குறள்/கு.ந. அர்த்தநாரி/தம்பிக் குறளகம், 93, நாரமங்கலம் நெடுஞ்சாலை, ஜலகண்டபுரம் - 636 501/ ரூ. 30/-
திருக்குறளின் விபரீதமான பாதிப்பால் விளைந்த நூல். கிட்டத்தட்ட அதே மாதிரி சப்ஜெக்ட்கள், மொழி நடை.

● கருவேலம்பூக்கள்/பூமணி/பூஞ்சோலை பதிப்பகம், 11, சிவப்பிரகாசம் தெரு, சென்னை - 17/ரூ. 35/-
தேசிய திரைப்பட வளர்ச்சிக் கழக நிதி உதவியுடன் வெளிவரவிருக்கும் திரைப்படத்தின் திரைக்கதை - நூல் வடிவில். தீப்பெட்டித் தொழிற்சாலையில் பணிபுரிகிறவர்களின் பிரச்னைகள் பற்றிய கதை.

● வீரவணக்கம்/கண்ணன் மகேஷ்/காவ்யா, 16, 17th E Cross, Indra Nagar II Stage, Bangalore - 560 038.
சில நல்ல கதைகளும் உள்ள சிறுகதைத் தொகுப்பு.

● மருந்தாகும் மூலிகைகள்/டாக்டர் ரா. கண்ணன்/கங்கை புத்தக நிலையம், சென்னை - 17/ரூ. 50/-
மஞ்சள், மணத்தக்காளி, தூதுவளை போன்ற தெரிந்த மூலிகைகளுடன் பல தெரியாத மூலிகைகளும் அவற்றின் மருத்துவ குணங்களும்.

● வள்ளலார் காவியம்/மதிவண்ணன்/ராமகிருஷ்ணா விவேகானந்தா புக் சென்டர், 8, சிவன் கோவில் வடக்கு மாட வீதி, திருவேற்காடு, சென்னை - 77/ரூ. 28/-
ராமலிங்க வள்ளலாரின் வாழ்வையும் பணியையும் புதுக் கவிதை வடிவில் படம் பிடித்திருக்கும் நல்ல முயற்சி.

● அந்திப் பொழுது/க. ஜான் லூயி/மணிவாசகர் பதிப்பகம், 8/7, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 108/ரூ. 50/-
முதுமை பற்றிய அலசல் கட்டுரைகள். சிந்திக்கத்தூண்டும் பல சங்கதிகள் உள்ளன. சுவாரஸ்யமான நூல்.



# ஆல் வேல்டு அக்கவுண்டிங் அட்மினிஸ்ட்ரேடிவ் அண்ட் டெக்னலாஜிகல் அகாடமி(AAAAA)

# All-World Accounting Administrative and Technological Academy.

| படித்த அனுபவம் மிக்க நிபுணர்களின் சீரிய நிர்வாகம் | கௌரவமான வருமானம் | மரியாதையான சேவை |
|---|---|---|

## AAAAA Trust (Regd No. 1488)

## In Education from 1979

நமது மாணவர்களின் எண்ணிக்கை மதிப்பீடு: வருடத்திற்கு 1 லட்சம் பேர்.
150 பேராசிரியர்கள் சேவை செய்கிறார்கள். துபாய் போன்ற வெளிநாடுகளிலிருந்தும் படிக்கின்றனர்.

நடத்தப்படும் படிப்பு பயிற்சிகள் IAS, IPS, IIT, BE, MBBS, BL, MBA, MCA, AIPMD, SSC, AMIE, Chartered Manager Courses, TNPSC, Spoken English/Hindi, BSRB, RBI, SBI, LIC, GIC, Computer courses, GMAT, GRE, TOEFL, Business Technology, etc

### வாடிக்கையாளர் வசதி திட்டம்: (TM)

30 தினம் 18% PA, 45 தினம் 19% P.A.
60 தினம் 20% PA, 90 தினம் 21% P.A.

எப்போது வேண்டுமானாலும் பணம் எடுத்துக் கொள்ளலாம்.
புதுப்பிப்பதற்காக வர வேண்டிய அவசியமில்லை.

### மாதப் பென்ஷன் திட்டம் (TM)

| டெபாசிட் | காலம் | மாதவட்டி ரூ. |
|---|---|---|
| 5000 | 1 வருடம் | 125 |
| 10000 | 1 வருடம் | 250 |
| 10000 | 3 வருடம் | 300 |
| 10000 | 5 வருடம் | 320 |

### சேமிப்பு கணக்கு: 15%P.A. தினசரி புராடக்ட், மாதாமாதம் வரவு.

### மத்திய நிதி மந்திரி என்ன சொல்கிறார்?

ஜனங்கள் தங்கள் சேமிப்பை தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளிலோ, சர்க்காரின் திட்டங்களிலோ போடலாம், மேலும் பணம் இருந்தால் கல்வி நிறுவனங்களில் முதலீடு செய்யலாம்.
ஆதாரம் : 'இந்து' பத்திரிக்கை 28.12.96. பக்கம் - 6.

### ரிசர்வ் வங்கி என்ன சொல்கிறது?

ரிசர்வ் வங்கி திருத்தச் சட்டம் 1997 பிரிவு 45 S வர்த்தக காரியங்களுக்காக டெபாசிட் பெறுவதை தடை செய்யவில்லை. பதிவு செய்யப் படாத நிறுவனங்கள் கடன் கொடுப்பதற்காக டெபாசிட் வாங்குவதையே தடை செய்கிறது.
ஆதாரம் : 'இந்து' பத்திரிக்கை 26.2.97. பக்கம் - 18.

### மனநிம்மதியான முதலீடு - பரிபூரண பாதுகாப்பு (TM)

உங்கள் டெபாசிட்டுகள் T. நகரில் உள்ள பிரதான அசையா சொத்தால் (டோர் நம்பர் 27சி, பிளாக் 5488/1, ராமேஸ்வரம் ரோடு) பாதுகாக்கப்படுகின்றன.

**தலைமை காரியாலயம்:** *"வித்யாலயா", 27சி, ராமேஸ்வரம் ரோடு, மாம்பலம் ரயிலடி சமீபம்,* **Next to DAV School, T.** *நகர், சென்னை - 17.*

**கிளை:** *7, முதல் மாடி, ஸ்டேஷன் ரோடு, தாம்பரம் சானடோரியம், சென்னை - 47.*

**கிளை:** *5, 2வது மெயின் ரோடு, நியு காலனி, குரோம்பேட்டை, சென்னை - 44*

**கிளை:** *13, காலேஜ் ரோடு, நங்கநல்லூர், சென்னை - 114.*

மும்பை: 1, தீபால் அபார்ட்மென்ட்ஸ், ஜெய் ஹிந்த் காலனி, குப்தேரோடு, டோம்பிவ்லி மேற்கு - 421 202

உங்கள் வீட்டிற்கும் வந்து சேவை செய்கிறோம். போன் : 4348560, 4347025.
AAAAA — பாதுகாப்பின் சின்னம்.

Prof. V. **விவேகானந்த்**
B.Com, (Distn), DOA, MBA (Distn), CAIIB (All India First), EKSAMD (Germany) (Distn), B.L.
**Managing Trustee.**

சொத்து பாதுகாப்பு. மாத வட்டிக்கும், அசலுக்கும் முன்கூட்டியே செக்.

Dr. **பரமேஸ்வரி**, MBBS,
**Managing Trustee.**

**Sunday Working Day**

(TM) :Trade Mark

அண்ணா ஹஸாரே ஒரு வழியாக ஜூஸ் குடித்து, தன் உயிரை தக்கவைத்துக் கொண்ட சூட்டோடு சூடாக, சமூகநல அமைச்சர் பபன்ராவ் கோலாப் மீது, 'மனைவி பெயரில் 12 ஹெக்டேர் நிலங்களை அபேஸ்' பண்ணியதாகப் புதுக் குற்றம் சாட்டியிருக்கிறார். மனைவிக்குப் படு பொருத்தமான பெயர் - சசிகலா! 'ப்ளாக்கில் சினிமா டிக்கெட் விற்றுக் கொண்டிருந்த கோலாப், சிவசேனை அமைச்சரானதும் எப்படிக் கோடீஸ்வரரானார் என்று 'அபத்த'மான ஒரு கேள்வியையும் வீசியிருக்கிறார். ஆனால் அண்ணா விசுவாசிகளோ, இவர் சுறாக்களை விட்டுவிட்டு, சின்ன மீன்களையே பிடிப்பதாகக் குற்றம் சாட்டுகிறார்கள். ஆதாரங்களுடன் நிரூபிக்காமல், 'சும்மா' குற்றப் பத்திரிகை வாசித்துக் கொண்டிருந்தால், இவரும் கைர்நார் போலாகிவிடுவார் என்கிறார்கள்! கைர்நாரோ, தேன் எடுத்தவனும், அரசு பணத்தில் டிரஸ்ட் நடத்துபவரும், நாக்கைச் சப்புக் கொட்டாமல் இருக்கவே முடியாது! ஜோஷி காப்பாற்றி விடுவார் என்ற தைரியத்தில் இன்னும் எத்தனை முறை உண்ணாவிரத நாடகத்தை அண்ணா அரங்கேற்றுவார்?" என்கிறார். ஆளாளுக்குக் குற்றம் சாட்டுவதென்பது தண்ணீர் பட்டபாடாகி விட்டது!



## நண்பனா! பகைவனா!

ஊழல் பெருச்சாளிகளை வேட்டையாடுவதில் சமர்த்தரான டி.ஜி.பி. சஞ்சய் பாண்டேயின் டிமர் டிரான்ஸ்ஃபர், போலீஸ் வட்டாரங்களைக் குமுற வைத்திருக்கிறது! 'ஷேர்' ஸ்காமில் சில பல காங்கிரஸ்காரர்களை அவர் மாட்டியபோது, துணை முதல்வரும் பி.ஜே.பிக்காரருமான கோபிநாத் முண்டே, சந்தோஷத்தில் துள்ளிக் குதித்தார்; பால்தாக்கரேவுக்கு நெருக்கமான சத்ருகின்தயா, இன்னபிற சிவசேனைக்காரர்களைப் "பிடித்த"போது, பாண்டேவை ரொம்பப் "பிடித்து" விட்டது முண்டேவுக்கு! ஆனால்... அபுதயா பாங்க் ஸ்காமில் சிக்கியிருக்கும் சுயேச்சை எம்.எல்.ஏ. சீதாராம் காந்தாத்தைக் கைது செய்ய முற்பட்ட போது மட்டும், முன்னொரு காலத்தில் பாண்டே ''Narcotics

# தாக்கரேவுக்கே அல்வா!

Cell''ன் தலைமைப் பொறுப்பிலிருந்தபோது, போதைப் பொருள் கடத்திய யாரோ தப்பிப்பதற்குத் துணை புரிந்ததாக திடீரென்று குற்றம் சாட்டி, முண்டே அவரை ஒப்புக்குச் சப்பாணியாய், போலீஸ் ட்ரெயினிங் சென்டர் அதிகாரியாக மாற்றிவிட்டார். அண்டர் வர்ல்ட் டான் அருண் காவ்லிக்கும் சீதாராமுக்கு மிருந்த நெருக்கத்தை பாண்டே வெளிச்சமிட யத்தனிக்க, சீதாராமுக்கும் முண்டேவுக்கு மிருந்த நெருக்கம் ஊரறிந்ததாயிருக்க... அப்புறமென்ன? எதிரிக்குப் பகைவனாயிருக்கும்வரை நண்பன்! நண்பனுக்கே பகையாகிவிட்டால்... எதிரிதானே?

## ஏமாறச் சொன்னது யாரோ?

ஏமாந்தே தீருவோம்



• அமிதாப் பச்சன்

என்று கங்கணம் கட்டிக் கொண்டு இந்த நடுத்தர வர்க்கம் அலையும்போது, நிதி நிறுவனங்கள் என்ன செய்யும், பார்வை அடுத்து வந்திருப்பது "ஆயிரம் கோடி CRB ஸ்காம்: இவர்களது "காபிடல் மார்க்கெட் கேபினெட் டெபாஸிட்" திட்டத்தில், வாழ்க்கைச் சேமிப்புகளை எல்லாம் இழந்தவர்கள், மும்பையில் மட்டும் ஒரு லட்சம் பேர். இங்கும் அங்குமாக முதலீடு செய்ய இருந்தவர்களை மயக்கி, ஒட்டுமொத்தமாக CRBயில் போட வைத்து, வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டவர்கள் ஸ்டாக் மார்க்கெட் ப்ரோக்கர்கள்தாம்! மற்ற கம்பெனிகள் 2% ப்ரோக்கரேஜ் கொடுக்கும்போது, CRB மட்டும் 10% கொடுத்தால், தரகர்களுக்குக் கசக்குமா என்ன? கனடாவுக்கு கம்பி நீட்டிவிட்ட சேர்பர்ஸன் C.R. பன்சாலியைப் பிடிக்கும் பொறுப்பை 'இண்டர்போலி'டம் விட்டுவிட்டு, பேராசை பிடித்த தரகர்களை வளைக்கத் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்கள்! தலையை விட்டுவிட்டு வாலைப் பிடிப்பதுதான் நமக்குக் கைவந்த கலை ஆயிற்றே?

## ரவுடி ராஜ்ஜியம்!

சட்ட விரோதக் கும்பல்களை ஜெயிலில் அடைத்து, போலீசார் காவல் காத்தது அந்தக் காலம்! ஜெயில் ரவுடிகளிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள போலீசார் போராடுவது இந்தக் காலம்! சட்டத்துக்குப் 'பொது'வான இந்த விரோதிகள், தங்களை 'தாவூத் குழு', 'சோடாராஜன் காங்', அருண் காவ்லி அடியாட்கள் என்று இனம் பிரித்துக் கொண்டு, சினிமாவில் வருவது போல், எச்சில் துப்புவது, பீடிப் புகையை முகத்தில் ஊதுவது போன்ற சில்லறைக் காரணங்களுக்கெல்லாம் அடித்துக் கொள்வார்களாம்! இந்தக் குருக்ஷேத்திரத்தைக் கண்டு போலீசாரே வெலவெலத்துப் போய்விடுவார்களாம்! சில காலம் முன்பு, மும்பையில் ஆர்தர் ரோட் ஜெயிலில், மொபைல் ஃபோன்களும், இறக்குமதி விஸ்கி பாட்டில்களும் சிக்கின. (சோடா ராஜன் ஆட்கள் 900 கால்கள் செய்திருக்கிறார்கள்!) சிறைச்சாலைக்குள் அண்மையில் கடத்தப்பட்டவை ஏராளமான ரேஸர் ப்ளேடுகள்! அடுத்து என்ன கலவரம் வெடிக்குமோ என நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள், போதிய பாதுகாப்பில்லாத அப்பாவி போலீஸ்காரர்கள்!

## அல்வா அல்லவா?

தாக்கரே வீட்டிலேயே வைத்து அவருக்கு 'அல்வா' கொடுப்பதென்றால் சும்மாவா? HMVக்காரர்களும், இயக்குனர் ராகுல் ரவாயிலும்

இணைந்து, "அவுர் பஸீரா ஹோகயா" ஆல்பத்தை தாக்கரே கையால் வெளியிட, ஐஸ்வர்யா ராயும் பாபி தியோலும் புடைசூழ, 13 விருந்தினர்கள் கலந்து கொண்டனர். வெளியீட்டு விழாவில் ஃபோட்டோகிராஃபர் காமிராவைக் 'க்ளிக்' செய்தபோது, வேறு வழியில்லாமல் சிரித்துத் தொலைத்தார் தாக்கரே! என்ன செய்வது? அவர் வெளியிட்டது, "மும்பைக்குள் நுழையக் கூடாது" என்று அவர் தடை விதித்த, பிரபல பாகிஸ்தானிப் பாடகர் நுஸ்ரத் ஃபதே அலிகானுடைய இசையமைப்பில் உருவான ஆல்பத்தை அல்லவா? இசையமைப்பாளர் வந்தபோது, "மன்ன ஒட்டவில்லையே" பாணியில் பேசிச் சமாளித்தாலும், இவர் காதில் அவர் இரண்டு முழம் பூ சுற்றியது, சுற்றியதுதானே?

## ஏன் கருணை?

செய்தி ஒலிபரப்பு அமைச்சகத்தில் அமிதாப்புக்கென்று அனுதாப அலை அபரிமிதமாக வீசுகிறது போலும்! அமிதாப்பின் 'மருத்யுதாதா' மரண அடி வாங்கியதில் ABCLக்கு (அமிதாப் பச்சன் கார்ப்பொரேஷன் லிமிடெட்) நிமிர முடியாத வலி! கடந்த ஆண்டில் மட்டும் பிளஸ் சானல், ப்ரைம்டைம் போன்றவை ஐந்து கோடிகள் பாக்கி வைத்ததற்கே, அவர்களது பாங்க் கியாரண்டிகளைக் காசாக்கி விட்டது டிடி! ஆனால் அமிதாப்புக்கு 'வார்னிங்' கொடுத்ததோடு சரி! Big 'B'யிடம் D-D எக்கச்சக்கமாகக் கருணை காட்டுவது எதனாலோ?

## மாமனார் ஜாக்கிரதை!

"கிழத்துக்கென்ன வேலை? சும்மா குப்பை கொட்டிட்டிருக்கு!" என இனி எந்த மும்பை மருமகளாலும் மாமனாரைத் திட்டமுடியாது! குப்பை கொட்டுபவர்களைப் பிடிக்கும் வேலையை 'ஸீனியர் ஸிடிசன்'களிடம் ஒப்படைத்திருக்கிறது BMC. அவரவர் குடியிருக்கும் பகுதிகளில், அநாகரிகமாகக் குப்பையை வீசுபவர்கள், எச்சில், வெற்றிலை நீர் உமிழ்பவர்கள், கண்டபடி அசுத்தப்படுத்துபவர்கள் போன்றோரை கையும் களவுமாக, சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் பிடித்துத் தர வேண்டும்! குப்பை குறைகிறதோ இல்லையோ, வயசானவர்களிடம் வாலாட்டுவது குறையலாம்!

— ஜெயஸ்ரீ ராஜ்

---

"என் பையனுக்கு வேலைக்கு போற பொண்ணுதான் வேணும்னு நான் சொல்லறேன்."

"உங்கள் மனைவி என்ன சொல்லறாங்க?"

"வேலைக்குப் போகாத பொண்ணுதான் வேணும்னு சொல்லறா."

"உங்க சண்டை இருக்கட்டும், உங்க பையன் என்ன சொல்லறான்?"

"அவன் இதுல ஒண்ணு அதுல ஒண்ணா இருந்துட்டுப் போகட்டுமேன்றான்!"

— ராதா வாசுதேவன்



"தலைவர் தினமும் தூங்கியெழுந் தவுடனே அவரோட பி.ஏ. அவர்கிட்டே போய், 'என்ன கனவு கண்டீங்க'ன்னு கேட்டுக் குறிச்சு வெச்சுக் கறாரே, ஏன்?"

"நாளைக்கு தலைவரோட காலத்துக்குப் பிறகு அவரோட கனவையெல்லாம் நனவாக் கணுமே, அதுக்குத்தான்!"

— டி.என். பாலகிருஷ்ணன்





"ரஜினி பேர்ல சாமிக்கு அர்ச்சனை பண்ணுங்க."

"நட்சத்திரம் என்ன?"

"இது கூடத் தெரியாதா! சூப்பர் ஸ்டார்!"

— ராதா வாசுதேவன்

# திருமகளாக வந்த மருமகள்

யூதா நாட்டில் உள்ள பெத்லேகம் என்ற ஊரிலிருந்து பஞ்சம் பிழைப்பதற்காக எலிமலேக்கு என்பவரும், அவரது மனைவியான நகோமி மற்றும் அவர்களின் இரண்டு மகன்களும் மோவாபு என்ற நாட்டிற்குச் சென்றார்கள். அவர்கள் அங்கே இருந்த காலத்தில் எலிமலேக்கு இறந்து போனார். நகோமிக்கு மக்லோன், கிலியோன் என்கிற மகன்களைத் தவிர வேறு துணையில்லாது போயிற்று. வாலிபர்களான அவர்கள் இருவரும் மோவாபு நாட்டுப் பெண்களான ஓர்பா, ரூத்து ஆகியோரை மணந்து கொண்டனர். அவர்கள் பெத்லேகத்தை விட்டு அந்த நாட்டுக்குப் பிழைக்க வந்து பத்து ஆண்டுகள் ஆகியிருந்தன. கணவனை இழந்து கண்ணீரும், கம்பலையுமாக வாழ்ந்த நகோமி தனது மகன்களையும், மருமகள்களையும் பார்த்து ஓரளவு ஆறுதல் பெற்று வந்தார். பட்ட காலிலே படும்; கெட்ட குடியே கெடும் என்பதுபோல எதிர்பாராதவிதமாக மக்லோன், கிலியோன் ஆகிய இரண்டு மகன்களும் மாண்டு போனார்கள்.

தானும் விதவையாகி, தனது மருமகள்கள் இருவரும் விதவைகளாகிய சூழ்நிலையில் மோவாபு நாட்டில் இனி காலம் தள்ளுவது முடியாது என்கிற முடிவிற்கு வந்தாள் நகோமி. அவளது சொந்த நாட்டில் இப்பொழுது செழிப்பு வந்துவிட்டது; ஆண்டவர் அம் மக்களைக் கருணையோடு கண் நோக்கினார் என்று அவள் கேள்விப்பட்



வலம்புரி ஜான்

டாள். ஆகவே நகோமியும் அவளது இரண்டு மருமகள்களும் யூதா நாட்டிற்குப் புறப்பட்டார்கள். அனல் அடிக்கிற வெயிலில் இரு பக்கமும் எரிகிற மெழுகுவர்த்திகளைப் போலத் தமது மருமகள்கள் உருகி ஓடுவது மாமியாரான நகோமிக்கு வேதனையாய் இருந்தது.

ஆகவே நகோமி அவர்களைப் பார்த்து "நீங்கள் பயண வழிகளில் படுகிற பாடுகளைப் பார்ப்பதற்குச் சகிக்கவில்லை; உங்கள் தாய்வீடு திரும்புங்கள். என் மீது இவ்வளவாய் இரக்கம் காட்டிய ஆண்டவர் உங்கள் மீதும் இரக்கம் காட்டுவாராக; நீங்கள் உங்கள் நாட்டுக்குச் சென்று அழகும், தகுதியும் உடைய வாலிபர்களை மணந்து மகிழ்ச்சியோடு வாழ்வீர்களாக" என்று வாழ்த்தினாள். அதற்கு அந்த மருமகள்கள் இருவரும், "அம்மா! நாங்கள் எந்த நிலையிலும் உங்களைப் பிரியமாட்டோம்; உம் கூடவே வந்து உங்களது நாட்டில் உமக்கு ஒத்தாசையாக இருப்போம்" என்றார்கள். அதற்கு நகோமி "மக்களே! திரும்பிச் செல்லுங்கள். என்னோடு நீங்கள் வருவதால் உங்களுக்கு என்ன பயன்? நீங்கள் மணந்து கொள்ள மகன்களை இனி நான் பெற்றுத் தர இயலுமா? எனக்கோ வயதாகி விட்டது; கணவரோடு கூடி வாழும் பருவமும் கடந்து விட்டது; இப்படியே எனக்கு இனி திருமணமாகி மகன்கள் பிறந்தாலும், அவர்கள் வளர்ந்து பெரியவர்கள் ஆவதற்குள் உங்களுக்கு வாலிபம் போய் விடுமே! ஆண்டவர் என்னைப் பெருந்துன்பத்தில் ஆழ்த்தி உள்ளார். என்னால் உங்களுக்கு நேர்ந்தவைகளுக்காக நான் வருந்துகிறேன்; உடனே உங்கள் நாட்டிற்குத் திரும்பிச் சென்று, மகிழ்ச்சிகரமாக வாழ்க்கையைத் தொடங்குங்கள்" என்றார். அந்த இளமை ஊஞ்சலாடும் இரண்டு மருமகள்களும் அம்மா, அம்மா என்று தங்கள் மாமியாரைப் பிரிய மனமில்லாமல் அழுதுகொண்டே வந்தார்கள். வழியில் அவர்களது துயரங்களைப் பார்த்த பட்சி பறவைகளுக்கே சங்கடமாக இருந்தது.

பிறகு சிலநாள் சென்று ஓர்பா தமது மாமியாருக்கு முத்தம் கொடுத்துவிட்டு தமது நாட்டுக்குத் திரும்பினாள். ஆனால் ரூத்து தனது மாமியாரை எந்தச் சூழ்நிலையிலும் பிரிய முடியாது என்பதில் உறுதியாக இருந்தாள். மாமியார் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் அவள் கேட்பதாக இல்லை.

நகோமி தனது மருமகளான ரூத்திடம், "இதோ பார், உன் ஓரகத்தி தன் இனத்தவரையும், தெய்வங்களையும் நோக்கித் திரும்பிப் போய்விட்டாள். அவளைப்போல் நீயும் திரும்பிப் போ" என்றாள். அதற்கு ரூத்து, "திரும்பிப் போகுமாறு நீங்கள் என்னை வற்புறுத்த வேண்டாம்; உமது வீடே எனது வீடு; உமது சுகமே எனது சுகம்; உமது துக்கமே எனது துக்கம்; உம்முடைய இனமே என்னுடைய இனம்; உம்முடைய தெய்வமே என்னுடைய தெய்வம்; நீங்கள் எங்கே இறப்பீர்களோ அங்கேயே நானும் இறப்பேன், உமது கல்லறைக்கு அருகிலேதான் எனது கல்லறையும் அமையும்" என்றாள். ரூத்து இறுதிவரை தம்மோடு இருக்கிற மன உறுதியோடு இருக்கிறாள் என்பதை நகோமி அறிந்து, அதற்குப் பதில் சொல்லுவதற்கு ஒன்றுமில்லை என்று சும்மா இருந்துவிட்டாள்.

அநேக நாட்கள் அந்த மாமியாரும், அன்பு மருமகளும் பயணப்பட்டு இறுதியாய் பெத்லேகத்திற்கு வந்தார்கள். பல ஆண்டுகளுக்குப் பிறகு நகோமியையும், வேற்று இனத்துப் பெண்ணான மரு



மகளையும் பார்த்த பெத்லேகம்வாசிகள் பரபரப்பானார்கள். ஊர்ப் பெண்கள் "இவள் நகோமிதானே" என்று பேசிக் கொண்டார்கள். அப்போது நகோமி அவர்களைப் பார்த்து "என்னை நகோமி என்று அழைக்காதீர்கள்; (நகோமி - இன்பம்) மாரா (மாரா- கசப்பு) என்றே அழையுங்கள் என்றாள். இவ்வாறாக நகோமியும் மோவாபியப் பெண்ணான அவளது மருமகள் ரூத்தும் பெத்லேகம் வந்து சேர்ந்த காலத்தில் வாற்கோதுமை அறுவடை தொடங்கியிருந்தது.

அப்போது ஒருநாள் ரூத்து தனது மாமியாரிடம் "நான் வயலுக்குப் போய், யார் என்னைக் கருணைக் கண் கொண்டு நோக்குவாரோ, அவரது வயலில் அறுவடையாகும் போது சிதறி விழும் கதிர்களைப் பொறுக்கிக் கொண்டு வருவேன்" என்றாள். அனுமதி கேட்டு நின்ற மருமகளுக்கு அன்பான முத்தம் தந்து நகோமி அனுப்பி வைத்தாள். ரூத்து ஒரு வயலுக்குப் போய் அறுவடையாட்களுக்குப் பின்னால் நடந்து சிந்திய கதிர்களைப் பொறுக்கிச் சேர்த்தாள்.

சிறிது நேரம் கழித்து வயலின் உரிமையாளரான போவாசு என்பவர் அங்கு வந்து சேர்ந்தார். அவர் அறுவடைக்காரர்களைப் பார்த்து "ஆண்டவர் உங்களோடு இருப்பாராக!" என்றார். அவர்களும் திரும்ப "ஆண்டவர் உம்மைத் தம் அருளால் நிரப்புவாராக" என்றனர். இவ்வாறாக அவர்கள் தங்கள் சமுதாய வழக்கத்தின்படியே ஒருவரை ஒருவர் வாழ்த்தியபோது, அறுவடையாட்களின் கண்காணியிடம் தூரத்தில் தென்பட்ட ரூத்தைச் சுட்டிக் காட்டி "இவள் யார் வீட்டுப் பெண்?" என்று போவாசு கேட்டார். "இவள்தான் நகோமியின் மருமகள்; மோவாபு நாட்டுப் பெண்" என்று கண்காணி சொன்னார். மேலும் "இந்தப் பெண்ணைப் பார்ப்பதற்கே பாவமாக இருந்தது; ஆகவேதான் கதிர்களைப் பொறுக்கிக் கொள்ளுகிறேன் என்று சொன்னதும் அனுமதித்தேன்; காலை முதல் இதுவரை சிறிதும் ஓய்வின்றி அவள் கதிர் பொறுக்கிக் கொண்டிருந்தாள். இப்போதுதான் அதோ அந்தப் பந்தல் நிழலில் சற்று நேரம் இளைப்பாறிக் கொண்டிருக்கிறாள்" என்றார்.

பிறகு போவாசு ரூத்தை நோக்கி "இந்த வயலைத் தவிர வேறு எந்த வயலுக்கும் கதிர் பொறுக்க நீ போக வேண்டாம்; கதிர் பொறுக்கும் மற்ற பெண்களோடு தங்கிக் கொள். எந்த ஆண்மகனும் உன்னை அதட்ட மாட்டான். உனக்குத் தாகம் எடுத்தால் அவர்களது பாண்டங்களிலிருந்து தண்ணீர் பருக உனக்கு முழு உரிமை உண்டு" என்றார். தாங்க முடியாத தாகத்தோடு நின்றவளுக்கு எதிரே நதியே வந்து என்னை ஏற்றுக் கொள் என்று சொன்னதைப் போல ரூத்திற்கு மகிழ்ச்சி உண்டானது. ரூத்து போவாசின் பாதங்களில் விழுந்து வணங்கி "அன்னியப் பெண்ணான எனக்கு நீங்கள் இவ்வளவு ஆதரவு தருவானேன்? உங்கள் கருணையே கருணை" என்றாள். அப்போது போவாசு அவளைப் பார்த்து "உன் கணவர் இறந்ததிலிருந்து உன் மாமியாருக்காக நீ செய்த அனைத்தையும் கேள்விப்பட்டேன். உன் விதவை மாமியாரின் கண்ணீரைத் துடைப்பதற்காக நீ உன் தாய், தந்தை, சொந்த இனம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு இங்கே வந்திருக்கிறாய். ஆண்டவராகிய கர்த்தரின் அரவணைப்பைத் தேடி வந்த உத்தமியாள் உன்னை அவர் எப்போதும் நிறைவாய் வைத்திருப்பார்!" என்று சொன்னார். அப்போது ரூத்து அவரைப் பார்த்து "உமது பணிப்பெண் அல்லாத என்னைப் பட்சமுள்ள வார்த்தைகளால் தேற்றுகிறீர்" என்றாள்.

உணவு வேளை வந்தது. அப்போது போவாசு ரூத்திடம் "இங்கே வந்து இந்த அப்பத்தை எடுத்து புளித்த திராட்சை ரசத்தில் தோய்த்துச் சாப்பிடு" என்றார். ரூத்தும் அறுவடையாட்களோடு உட்கார்ந்து சாப்பிட்டாள். போவாசு ரூத்துக்கு வறுத்த பயிறும் கொடுத்தார். அவள் பசி தீர உண்ட பின் மிஞ்சிய உணவைத் தனது மாமியாருக்காகப் பொட்டலமாகக் கட்டிக் கொண்டாள். பிறகு போவாசு தமது வேலையாட்களைப் பார்த்து "அரிக்கட்டுகள் கிடக்குமிடத்திலும் அவள் கதிர் பொறுக்கட்டும்; யாரும் அவளை அதட்ட வேண்டாம்; அவள் பொறுக்கும்படியாக கட்டுகளிலிருந்து சில கதிர்களைக்கூட கீழே போட்டு விடுங்கள்" என்றார். மாலையான போது ரூத்து கதிர்களைத் தட்டிப் புடைத்து நிறுத்தபோது, வாற்கோதுமை ஏறத்தாழ இருபது படிகள் இருந்தன. அந்த வாற்கோதுமை மணிகளை மூட்டையாகக் கட்டிக் கொண்டு ரூத்து புறப்பட்டாள். மாமியாருக்கான உணவையும் அவள் எடுத்துக் கொண்டு போக மறக்கவில்லை.

தமது மருமகளை முத்தமிட்டு வாழ்த்துக் கூறிய மாமியார், "உனக்குக் கருணை காட்டிய கனவானைக் கர்த்தர் நிறைவாக ஆசீர்வதிக்கட்டும்" என்று சொல்லிவிட்டு "இன்று நீ கதிர் பொறுக்கிய வயல் யாருக்குச் சொந்தமானது?" என்று கேட்டார். அப்போது ரூத்து அந்த வயல் போவாசு என்பவருக்குச் சொந்தமானது என்றும் அறுவடை முடிகிறவரை அங்கே கதிர் பொறுக்கிக் கொள்ளுகிற உரிமை தனக்குத் தரப்பட்டிருக்கிறது என்றும் சொன்

ளாள். அப்போது கடவுளைத் தோத்தரித்த நகோமி, "அம்மா! போவாசு, வேறு யாரும் அல்ல; நமக்கு நெருங்கிய உறவினர்; மேலும் நம்மைக் காப்பாற்றும் கடமையுள்ள உறவினர்; அவருடைய வயலுக்கே போ. வேறு வயலுக்குச் சென்றால் ஆண்மக்களால் உனக்குத் தொந்தரவு உண்டாகலாம்" என்றாள். அவ்வாறே ரூத்து அந்தப் பணிப்பெண்களோடு போவாசின் வயலிலேயே தங்கியிருந்து கதிர் பொறுக்கி வந்தாள்.

ஒருநாள் மாமியாராகிய நகோமி ரூத்திடம் "அம்மா நீயோ இளம்பெண்; நீ இல்வாழ்க்கை நடத்தி மகிழ்ச்சியோடு இருக்கும்படியாகப் பார்த்துக் கொள்ளுவது எனது கடமை; நான் சொல்லுவதைக் கவனமாய்க் கேள்; இன்று இரவு போவாசின் களத்துக்குப் போ. போவ



'சினிமா ஆர்ட்டிஸ்ட் யூனியன்னு ஒண்ணு புதுசா ஆரம்பிச்சிருக்காங்களாமே! எதுக்கு?''

''ராதாரவியை சாதா ரவியாக்கத்தான்!''

— ராஜாஜி

தற்கு முன் குளி; எண்ணெய் பூசிக் கொள்; கன்னிடத்தில் உள்ள நேர்த்தியான ஆடையை உடுத்திக் கொள். போவாசு எங்கே படுத்துக் கொள்கிறார் என்று முதலிலேயே பார்த்து வைத்திரு. எவரும் அறியாதபடிக்கு இரவில் அவர் தூங்கிய பிறகு அவரது காலில் கிடக்கும் போர்வையை அகற்றிவிட்டு அவரது கால் மாட்டிலேயே படுத்துக்கொள். அதற்கு மேல் நீ செய்ய வேண்டியதை அவரே சொல்லுவார்" என்றாள்.

நகோமி சொன்னபடியே ரூத்து செய்தாள். நடு இரவில் எழுந்த போவாசு இருட்டில் இவளை அடையாளம் தெரியாமல் "யார் நீ?" என்று கேட்டார். அதற்கு அவள் "நான்தான் ஐயா ரூத்து; உமது அடிமை. நீரே என்னைக் காப்பாற்றும் முறை உறவினர்; அந்த முறைப்படி உமது போர்வையால் என்னை மூடும்" என்றாள். அதற்கு அவர் "மகளே! உன்னை ஆண்டவர் ஆசீர்வதிப்பாராக! இதுவரை நீ காட்டிய குடும்பப்பற்றை விட இப்போது நீ காட்டுகிற பாசமே தீவிரமானது; மேலானது. ஏனெனில் ஒரு பணக்காரனை நீ நாடவில்லை; ஏழையாயினும் இளைஞனாக இருந்தால் போதும் என்றும் நினைக்கவில்லை. என்னை விட உனக்கு நெருங்கிய முறை உறவினர் ஒருவர் இருக்கிறார். காலையில் அவர் உன்னை ஏற்றுக் கொள்கிறாரா என்று பார்ப்போம்" என்றார்.

ஒரு பெண் களத்துக்கு வந்தது தெரியக் கூடாது என்கிற போவாசின் வேண்டுகோளின் படியே, ரூத்து அதிகாலையில் வீட்டுக்குப் புறப்பட்டாள். அவளது போர்வையில் ஆறு மரக்கால் வாற்கோதுமையைக் கொட்டி போவாசு அவளை வாழ்த்தி அனுப்பினார்.

**வீ**ட்டுக்கு வந்து தனது மாமியாரிடம் நடந்ததையெல்லாம் ரூத்து தெரிவித்தாள். பொதுமன்றம் கூடுகிற நகரவாயிலில் போவாசு அமர்ந்து கொண்டு ரூத்தின் நெருங்கிய உறவினரையும் நகரத்துப் பெரியோர்களையும் அழைத்தார். அவர்கள் முன்னிலையில், "நம் நெருங்கிய உறவினரான எலிமலேக்கிற்குச் சொந்தமான நிலத்தை நகோமி விற்பதாக இருக்கிறாள். அதை வாங்குகிற முதல் உரிமை உமக்கே இருக்கிறது. வாங்குகிறீரா?" என்று கேட்டார். அவர் முதலில் சரி என்றார். அடுத்து போவாசு அவரைப் பார்த்து, "நிலத்தை வாங்கிக் கொண்டால் நிலத்துக்கு உரியவருக்கு சந்ததிகள் தோன்றும் வண்ணமாக விதவையான ரூத்தை நீர் மனைவியாக ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்றார். அந்த மனிதர் இந்தத் தீர்மானத்திற்கு உடன்படாமல் பின் வாங்கினார். பிறகு எல்லோரது முன்னிலையிலும் அனைவரையும் சாட்சிகளாக வைத்து போவாசு ரூத்தை மனைவியாக ஏற்றுக் கொண்டார். அவர்களது மணவாழ்க்கையின் அடையாளமாக ஒரு ஆண் பிறந்தான்.

ஊர்ப் பெண்கள் அனைவரும் ஒன்றுகூடி "புது வாழ்வு உனக்கு அன்னவன் தருவான்; முதுமையிலும் உனக்கு அன்னமும் அளிப்பான்" என்று நகோமியை வாழ்த்தினர். நகோமி, தனது பேரப்பிள்ளையை நெஞ்சோடு அணைத்துக் கொண்டு, கர்த்தரைத் துதித்தாள். இப்போது ஊரார் அனைவரும் ரூத்தின் மகனை அவனைப் பேணி வளர்க்கும் தாயான நகோமியை முன்னிட்டு 'நகோமியின் மகன்' என்றே அழைத்தனர். அவனுக்கு 'ஓபேது' என்று பெயர். இவனே வரலாற்றின் வணக்கத்திற்குரிய தாவீது அரசனின் பாட்டன் ஆவான்.

(தொடரும்)

முடியுமா? இந்த மனநிலையிலே கதை எழுத முடியுமா? இப்படியொரு சூழலிலா? சாத்தியமா? நடக்குமா? இயலக்கூடிய விஷயமா?

கதையே எழுத முடியுமான்னு யோசிக்கிற நெலையிலே... ரெண்டு கதை கேட்டுக் கடிதம். கையில் அந்த வெள்ளைத்தாள். டைப் அடிக்கப்பட்ட கடிதம். 'ரெண்டு கதைகளா' என்று நினைத்த கணத்திலேயே என்னுள்ளிருந்து வெடித்து உதிர்கிற கசந்த சிரிப்பு. என்னை நானே பரிகசித்துக் கொள்கிற மாதிரி. என் நிலைமைக்கு நானே பரிதாபப்பட்டுக் கொள்கிற மாதிரி - ஒரு கசந்த சிரிப்பு.

"என்னப்பா" என்று என் மகளைக் கேட்க வைக்கிறது. அந்தக் கசந்த சிரிப்பில் கசிந்த வேதனை. ப்ளஸ் டூ பரீட்சை எழுத முடியாமல் போன மூத்தமகள்.




"ரெண்டு கதை வேணுமாம்... கடிதம் வந்துருக்கு."

"செம்மலருக்கு வேற அனுப்பணும்லே?"

"ஆமா.. அவுகளுக்கு ஒண்ணு வேணும்."

"எழுதுங்கப்பா...."

அவள் உதடு மட்டுமே சொல்கிறது. ஒப்புக்குச் சொல்கிறது. அவள் மனசுக்குத் தெரியும். 'என்னால் எழுத இயலாது' என்று.

என் இயலாமையை அவளும் அறிந்து விட்டாள் என்று உணர்ந்த கணத்தில் எனக்குள் கவிகிற விரக்தி. என்னைக் கவிழ்க்கிற அவநம்பிக்கை. உள்ளுக்குள் ரம்பமாய் அறுக்கிற வெட்க வேதனை.

"என்னத்தை எழுத?"

இயலாமையின் பலவீனமும், வெறுப்பும் கலந்த உச்சத்தில் நான். கையிலிருக்கும் வெள்ளைத் தாளையே வெறிக்கிறேன். ஏதோ புரியாத மொழியில் எழுதப்பட்டிருப்பதைப் பார்ப்பதைப் போல... புரிய முயலாத வெறுமையோடு. நோக்கின்றி நோக்குகிறேன்.

மனசே சரியில்லை. ரொம்பக் குழப்பமாக இருக்கிறது. மனசுக்குள் எல்லாக் கணங்களிலும் நச்சரிக்கிற கவலைகள். வேலி முள் சொருகின மாதிரியான நிரந்தர ரணம். நொம்பலமான நினைவுகள்.

கடிதத்தை உறையில் போட்டு அசிரத்தையாகப் போட்டேன். தரையில் படுத்திருக்கிற பிள்ளைகள். வெறும் துணியை விரித்துப் படுத்திருக்கிறார்கள். கண் முழிக்க முடியவில்லை. துவண்ட துணிக் கந்தல்களாகப் பிள்ளைகள். அவர்கள் உடம்பெல்லாம் வைசூரிக் கொப்பளங்கள். கண்பட்டை, நெற்றி, கன்னம் கழுத்தடி, தேகம் பூராவும் அம்மையின் கண்கள். பொன் மீனா, ராச அன்னத்திற்காவது பரவாயில்லை.

அதிலும் மகன், வெண்மணி, அவன் மீது ஏராளம். அரிசியை அள்ளியிறைத்த மாதிரி அடர்த்தியாக அம்மையின் கண்கள். நாக்கில் - உதட்டில் உள்ளங்கையெல்லாம். கண் இமைகளிலும் 'கண்கள்'. பார்த்தாலே என் உடம்பு பதறுகிறது. மனசு கூசி நடுங்குகிறது. டென்த் பரீட்சை எழுதி முடித்திருக்கிறவன். கெட்டிக்காரன். கவிதைகள் கூட எழுதுவான். சுயமானவன். சில கவிதைகள் கூட இலக்கிய இதழ்களில் பிரசுரமாகியிருக்கின்றன.

அப்பேற்பட்டவன் கண் திறக்க முடியாமல் நனைந்த துணியாகக் கிடப்பதைப் பார்க்கிற போது, படுக்கவும் முடியாமல், புரளவும் முடியாமல், நேராக உட்காரவும் முடியாமல் அவன் தவிக்கிற தவிப்பையும், திணறலையும் மனசால் உணர்கிற போது. ஒரு தகப்ப மனசு என்னமாய்த் துடிக்கிறது! வெட்டுப்பட்ட சதைச்சிதறலாய் ரத்தம் கசிகிற ரணத்தில் மனசு துடிக்க... அதிலிருந்து கதையா? கதை எழுதுகிற மன அமைதியா? மனநிதானமா? குவிமையமாகிற உணர்வா? உணர்வின் குழைவா? திறம் மாறும் ரசாயனமா? நடக்கிற கதையா? ஹே!

மார்ச் மாசத்திலிருந்தே ஆரம்பித்து விட்ட துன்பங்கள். நச்சரிப் பான கவலைகள். மனசுக்குள் நிரந்தர நமைச்

## வைட்டமின் கதை - 9



சல். எத்தனை பெரு மூச்சுகளை விட்டாலும் அடங்காத நமைச்சல்.

மார்ச் மாசமே துரதிருஷ்டத்தின் அவலக் கூச்சலாகத்தான் கண் விழித்தது. ஓடியாடி, வீட்டு வேலை முழுவதையும் செய்து... ஒரு கப்பலின் மாலுமி போலத் திகழ்ந்தவள் என் மனைவி. திடுதிப்பென்று மயக்கம் போட்டு விழுந்தாள். வீடே பதறியது. பிள்ளைகள் கதறியழுதனர்.

"அம்மா... அம்மா...." என்று கலங்கினர். வீடு முழுக்கப் பதற்றம். எனக்கும் நடுக்கம்.

தெரு அல்லோல கல்லோலப்பட்டது. உறவுக்காரர்கள் ஓடி வந்தனர். டி.வி.எஸ். 50களில் ஏற்றி டவுனுக்குப் பறந்து... ஆஸ்பத்திரியில் விழுந்து... மனசுகள் கலங்கித் தவித்து... சகஜமாக...

அப்புறமும்... மயக்கம் வந்துவிடுமோ என்ற திகில், நிரந்தரமாக.

மூத்த மகள் வைகறை. இத்தனை அமளியிலும் +2 பரீட்சைக்கு விழுந்து விழுந்து படித்தாள். ராவிலும் பகலிலுமாய் படிப்பு. 12ந் தேதி பரீட்சை. எட்டாம் தேதியில் அவள் முகத்தில் தெரிந்த 'முத்து'. வைசூரியின் முத்து. மனசுக்குள் தீவைத்த மாதிரியிருந்தது.

'முத்து தானா... முத்துதானா...' என்று நப்பாசையோடு ஆராய்ச்சி.

'முத்தேதான்' என்ற இடி.

# மேலாண்மை பொன்னுச்சாமி

எனக்குள் கனவுகள் உடைந்து நொறுங்கி உதிர்கிற ரணம். 'இவளை டாக்டருக்குப் படிக்க வைக்கணும்' என்ற கனா. அதற்காகவே இந்த ஆண்டு முழுவதும் ட்யூஷன் மூலம் அவளைத் தயாரித்தது. நுழைவுத் தேர்வு ஃபாரத்திற்கு இப்போதே அலைந்த அலைச்சல்.

எல்லாம் போச்சு. சுக்குநூறாயிருச்சு. கதையே கந்தலாயிருச்சு. சிற்பம் புழுதியாயிருச்சு. என்ன செய்ய?

"மாரியாத்தா விளையாண்டுட்டா..." என்கிற பெண்கள். முகமெல்லாம் அம்மை முத்துக்

கள். மகளின் தோற்றமே விகாரமாகி... அயற்சியும் சோர்வுமாய் துவண்ட காகிதமாகி...

'இந்த நிலையிலும் தேர்வு எழுதிவிட முடியுமா?' ஒரு நப்பாசை. அதற்கான பேயலைச்சல். நாய் படாத பாடு. தலைமையாசிரியரைப் பார்த்து... கல்வியதிகாரிகளைத் தேடிக் கண்டடைந்து... பேசி...

எல்லாம் வீண். எழுதும் நிலையில் அவள் உடம்பு இல்லை. உக்ரமாகிவிட்ட அம்மை. எழுந்து உட்காரக் கூட முடியாத நிலைமை.

இழப்பின் கன பரிமாணத்தை உணர்ந்த என் வேதனை. யாரிடம் சொல்லியழ? என்ன சொல்லியழ? துரதிருஷ்டத்திற்கு யார் மருந்து தருவார்?

இதில் வீட்டுப் பெண்கள் 'வருத்தப்படக் கூடாது' என்று சொல்கிற கண்டிஷன்.

''ஆத்தா எறங்கிட்டா. அவ இஷ்டம் போலிருந்துட்டு, ஆசை தீர விளையாடிட்டுப் போகட்டும். ஆத்தா வந்துட்டா... ஆனந்தம் தான். யாரும் வருத்தப்படக் கூடாது. ஆத்தா... கோவிச்சுக்குவா....''

ஒரு பக்கம் இது உண்மைதான். பங்குனி, சித்திரை கோடையில் மட்டுமே வருகிற வைசூரி. மாரி (மழை) யாத்தா விளையாட்டு தான். வராமல் கண்ணாமூச்சி காட்டுகிற மாரி யாத்தா. வெக்கை. மண்ணின் கொதிப்பு. வைசூரி முத்துக்களாக தோலில் வெடிக்கிற அதன் கோபம்.

வீடெல்லாம் வேப்பிலைகள். தாளிதமில்லாத பத்தியச்சாப்பாடு எல்லோருக்கும். காலையும் மாலையும் வைகறைக்கு அம்மன் காப்பு. வேப்பங் கொழுந்தும், மஞ்சளும் வைத்து அரைத்து உருட்டிய அம்மன் காப்பு. விழுங்கித் தண்ணீர் குடிக்கிறாள்.

பா'ட்சை கடந்து போகிற ரணம். எனக்குள் ஏமாற்ற வலி. ஏக்க வேதனை. 'ஒரு வருஷம் போகிறதே... படிப்பின் தொடர் சங்கிலி அறுபடுகிறதே' என்கிற பயம்.

என்ன செய்ய? தாங்கித்தான் ஆகணும். தலைச்சுமையா? அடுத்தவர் தலைக்கு மாற்றிக் கொள்ள. நோய், துரதிருஷ்டம். அவரவர்தான் அனுபவித்தாகணும். வேற வழி?

பதிமூன்று நாள் ரணம், எனக்குள்.

அவளுக்கு தலைக்குத் தண்ணீர் ஊற்றி... எழுப்பிய ரெண்டாவது நாளில் தம்பி மகள் இளவேனிலுக்கு வைசூரி. அப்புறம் என் மகன் தென்றலுக்கு. அவளுக்கும் முத்துகள். அம்மை முத்துகள்.

"என்னடா இது, பெரிய கொடுமையாப் போச்சே" என்று புலம்பினேன்.

இன்னும் மூன்று பிள்ளைகள். நான், மனைவி, தம்பி, தம்பி மனைவி, இவர்களுக்காச்சும் வைசூரி வராமல் தடுத்தாகணும் என்கிற வேட்கை.

எட்டு மைல் தள்ளியிருக்கிறது கிராம நல மருந்தகம். ஓடினேன். அவநம்பிக்கை தெரிவிக்கிற அதிகாரிகள்.

''அம்மையை ஒழிச்சாச்சுன்னு கவர்மெண்ட் டிக்ளேர் பண்ணியாச்சே... அம்மைப் பால் வைக்கிற டிபார்ட்மெண்டையே கலைச்சாச்சே...'' என்கிறார்கள்.

அம்மையை ஒழித்து விட்டார்களா? எங்கே? ஃபைலிலா? இதென்ன கொடுமை? அம்மையை ஒழித்துவிட்டதாக அரசு முடிவு செய்தால்... என் வீடு அரசின் கணக்கில் இல்லையா? அம்மை விழுந்த என் குழந்தைகள் அரசின் ஜெனனப் பதிவில் இல்லையா?



• கிரேஸி

• தேவன்

## யாரைப் போல் பிறக்க ஆசை?

### 'கிரேஸி' மோகன்

தமிழில் நகைச்சுவை என்றால், என்னைப் பொறுத்த வரை தேவன்தான். அவர் 100% ஹியூமரிஸ்ட். இன்றும் நான், தேவனின் எழுத்துக்களுக்கு ரசிகன். நானும் இன்று நகைச்சுவை எழுதிக் கொண்டிருக்கிறேன் என்றால், அதற்கு முழுக் காரணம், அவரது நகைச்சுவை கொடுத்த இன்ஸ்பிரேஷன்தான். என் நாடக அரங்கேற்றம் நெருங்கிவிடும். ஸ்கிரிப்ட் ரெடியாய் இருக்காது. அந்த சமயங்களில், தேவன் எழுதிய புத்தகங்கள் ஏதாவது இரண்டை மடமடவென படித்து முடித்ததும் 'செமை மூடு' வரும். என் ஸ்கிரிப்டை இரவோடு இரவாய் எழுதி முடித்து விடுவேன். அடுத்த பிறவியில், தேவனைப் போல, சிகரம் தொட்ட நகைச்சுவை எழுத் தாளராய்ப் பிறக்க எனக்கு ஆசை!

— மௌலி

கடைசியில் -

அம்மைப்பால் இல்லவே இல்லை என்று சாதித்துவிட்டார்கள். இங்கு மட்டுமல்ல... எங்குமே இல்லையாம். 'தனியார் மருந்துக்கடைகளில் கிடைக்குமா? பணம் தந்து பெற்றுக் கொள்கிறேன்...' என்றும் கேட்டுப் பார்த்தேன். எங்குமே கிடைக்காதாம்!

என்னடா...யிது, கூத்து? 20-ம் நூற்றாண்டு விஞ்ஞானம் என்னாயிற்று? எய்ட்ஸ் எனும் ஈனத்தின் முன்னால் கைபிசைந்து, தலை குனிந்து நிற்கிற விஞ்ஞானம். அம்மைக்கு முன்னாலும் கையாலாகாத பலவீனத்தில் வீரிய மிழந்து விழுந்து கிடக்கிறதா? அரசின் ஃபைல் புரட்சி, விஞ்ஞானத்தின் காலை ஒடித்து, சின்ன அம்மையின் காலடியில் முடக்கிப் போட்டு விட்டதா? பரவும் தன்மையுள்ள இந்த நோயைக் கட்டுப்படுத்துகிற பொறுப்பிலிருந்து அரசு நழுவிக் கொண்டதா? நோயின் சிரிப்பில் இறைவனைக் காண்கிறார்களா?

டாக்டர்களிடம் ஓடினேன்.

"மாத்திரை மருந்து எதுவும் கிடையாது. இருந்தாலும் பிரயோசனம் ஆகாது. 'ஒதுங்கி' யிருக்கிறது மூலமா மட்டும்தான் தவிர்க்க முடியும். வேற வழியே கிடையாது."

புகலற்றுப் போனேன். 'இன்று போய் நாளைவா' என்கிற ராமனின் விளிம்பு நிலைப் பெருந்தன்மை கூட எனக்கு எதிர்ப்பட வில்லை. நிராயுதபாணியாகிப் போன நிலையிலும் மூர்த்தண்யமாகத் தாக்கப்படுகிற கொடூரம். ராட்சஸம்.

வெந்து நொந்து போனேன். நொந்து நூலாகிப் போய் விட்டேன்.

உள்ளுக்குள் உடைந்து போனேன். ஆணிவேர் அறுபட்ட மரமாய் நான். ஒப்புக் கொண்ட கூட்டங்களுக்குப் போக மனமில்லை. மனசில் சுரத்தில்லை.

வருகிற கடிதங்களுக்குப் பதில் எழுத மனமில்லை. மிகப் பெரிய மனிதர்களின் பாராட்டுக் கடிதங்களுக்குக் கூட சந்தோஷப்பட மனசில் தெம்பில்லை.

எப்படிச் சந்தோஷப்பட? நனைந்த காகிதத்தில பேனாவினால் எப்படி எழுத முடியும்? துவண்ட மனசில் எந்தக் காகிதம் மகிழ்ச்சியை உருவாக்கிவிட முடியும்?

தென்றலுக்கு 'முத்து' இறங்கி... கைபடாத தண்ணீரை வெங்கலப் பானையில் பிடித்து, வேப்பிலைகள் போட்டு ஏறு வெயில், இறங்கு வெயில் எல்லா வெயிலுக்கும் வெளியே வைத்து... சாயங்காலம் 'இறங்கு பொழுதில்' கலைக்குத் தண்ணீர் ஊற்றி விட்டார்கள்.

**நா**லே நாலு நாள்தான். மூன்றாம் தண்ணீர் ஊற்றுவதற்குள்.



''புகழின் உச்சியில் இருக்கும் பொழுதே ஓய்வு பெற விரும்புகிறேன்னு சொல்லற அவர் அப்படி என்ன சாதனை பண்ணிட்டார்!''

''அவர் எழுதின ஒரு 'ஜோக்' பத்திரிகையில பிரசுரம் ஆயிடுச்சாம்!''

— ஏ. இராசேந்திரன்

பொன் மீனா முகத்தில் முத்து. வெண்மணி உடம்பில் முத்து. இதோ... ராச அன்னமும். ஏககாலத்தில் மூவருக்கும். அதிலும்...

வெண்மணிக்கு ரொம்ப. இடை விடாமல் முத்துகள். தட்டைப் பயறு மாதிரி முத்துக்கள். புரளமுடியவில்லை. படுக்க முடியவில்லை. உட்கார்ந்திருக்கவும் முடியவில்லை. காந்தல் வேறு. பாவம்... அவன் தத்தளிக்கிற தத்தளிப்பு. அவன் கண்ணில் மிதக்கும் அச்ச உணர்வு. மிரட்சி. அயற்சி சோர்வு.

எனக்குப் பார்க்கவே சகிக்கவில்லை. மனசு கிடந்து அதிர்கிறது. நடுங்கி நடுங்கிக் குளிர்கிறது.

பார்க்காமல்... தெருவில் போய் நிற்கலாம் என்றால்... தெரு நிறைய சாதித் தகராறு. எல்லா மனிதர்கள் கண்களிலும் புகலற்ற பீதி. கிலி உணர்வு. 'என்னாகுமோ, ஏதாகுமோ...' என்கிற பதைப்பு. பேச்சு பூராவும் வெக்கை. கோடை வெக்கை. மனசுகளில் வெடிக்கும் அம்மைக் கொப்புளங்களாக சாதி உணர்ச்சி. உஷ்ண உணர்ச்சி.

கிராமத்துக்கு பஸ் வரத்து நிறுத்தப்பட்டு பன்னிரண்டு நாட்களாகி விட்டது. வெட்டுும் குத்தும், வதந்தியும் அலறலுமாய் நாட்கள். வன்முறையாளர்கள் கையில் மாவட்டத்தையே ஒப்படைத்துவிட்டு.. இத்தனை நாளாய் வேடிக்கை பார்க்கிற வெறுப்பான விமர்சனம்.

தெருவுக்குப் போக முடியவில்லை. எங்குமே சவக்களை. மயான நெடி. கறுத்த முகங்களில் அப்பிக் கிடக்கும் அச்ச இருட்டு. என்னத்தைப் பேச? எவரிடம் பேச? எப்படிப் பேச?

'அங்கே வெட்டு...' 'இங்கே சாவு'... 'அங்கே பிரேதம்' என்று அலறலான பீதி. வதந்தி. கொஞ்சம் நிஜம்.

பிரசவத்துக்கு அவஸ்தைப்படும் பெண்ணை நகரத்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போக முடியவில்லை. கோயில் குளத்துக்கு, கல்யாணம் காட்சிக்குப் போக முடியவில்லை. போனவர்கள் திரும்பவில்லை. 'இருக்கிறார்களா, செத்தார்களா' என்று இங்குள்ளவர்களுக்கு மிரட்சி. பயம். கவலை.

இதில் போய் எப்படிப் பேச? என்ன நிம்மதியில் பேச? ரோம் நகரம் தீப்பற்றி எரியும் போது, நீரோ மன்னன் மலர்க் கண் காட்சியை ரசிக்க முடியும். என்னால் முடியவில்லை. இதயம் இருக்கிறது. அதில் ஈரமிருக்கிறது. கவலை இருக்கிறது. என் சகமனிதர்களின் வேதனை கண்டு கலங்குகிற கலை மனசு இருக்கிறது.

இந்தக் கவலையில் நான் எப்படி உட்கார்ந்து... ஒரு மனசாகக் கதை எழுத? உணர்வுகளைக் குவித்து எப்படி எழுத? என்ன சிந்திப்பது? எங்கிருந்து வரும் நிம்மதி?

மதிப்புரை கேட்டு வந்திருந்த நாவல்கள் இரண்டும்... திறக்கப்படாமல் கிடக்கின்றன. என் பக்கத்தில் ஒரு பேடு. கிளிப்பில் கற்றையாகக் காகிதம். அதில் முதல் பக்கத்தில் —

193 என்று பக்க எண் இடப்பட்டிருந்தது. அதன் இடது மூலையில் 30 என்று எண்ணிட்டு அதைச் சுற்றிய வட்டக் கோடு. 193-ம் பக்கத்தில் துவங்குகிற 30 வது அத்தியாயம்.

தூசி படிந்து கிடந்தது. நாள்பட்ட நீர்த் துளிக் கறைகள்.

இது ஒரு கட்டுரை நூல். பெரிய புத்தகம். அதற்கான தயாரிப்பு. தொடர் 'அறுந்து' போய்க் கிடக்கிறது, ரெண்டு மாசமாய்.

என்னாச்சு? எனக்குள் வற்றிப் போச்சா? கதை ஊற்று அடைபட்டுப் போச்சா? இனி எழுதவே முடியாதா, என்னால்?

சூழலின் கைதியாக சுருண்டு கிடக்கிறேனா? பலவீனமுற்று வீழ்ச்சியுற்று, சூழலின் அடிமையாகி விட்டேனா?. சூழலின் இறுக்கத்தால் சூறையாடப்பட்டு... அந்தரத்துக் காற்று வெளியில் மிதக்கும் துரும்பாகிப் போனேனா?

சூழலின் வரம்பை உடைத்து, சூழலைப் புதுப்பிப்பவன் தானே, மனிதன்! சூழலின் வரம்புக்குட்பட்டு வாழும் மிருகங்களிலிருந்து மனிதனை வேறு படுத்துவதே... இந்த மீறல் தானே! சூழலை மாற்றும் வல்லமைதானே! சூழலை எதிர்த்துப் போரிடுகிற ஆற்றல்தானே... மானுட ஆற்றல்?

அதை நான் தொலைத்து விட்டேனா? உடைந்து நொறுங்கிப் போனேனா? நொறுங்கி நொ(ய்)த்தவிடாகிப் போனேனா? சோர்ந்து துவண்டு விட்டேனா...?

எனக்குள் ஆயாசப் பெருமூச்சு. மகனைப் பார்க்கிறேன். அவன் முகமெல்லாம் அம்மை முத்துக்கள். கையில் உள்ளங் கையில், கால்களில், பிருஷ்டத்தில் முதுகில் எல்லா இடத்திலும் முத்துக்கள். நீக்கமற நிறைந்திருந்த முத்துக்கள்.

எனக்குள் பயப் படபடப்பு. நரம்புகளில் பரவுகிற பயக் கூச்சம். அச்சப் புல்லரிப்பு.

அவனும் பயப்படுகிறான்.

சோகமாய் சிரிக்கிறான். சிரிக்க முயல்கிறான். முடியவில்லை.

"என்னப்பா....?" என்கிறான். எனக்கு ஆறுதல் சொல்ல விரும்புகிற கண்கள்.

"என்னடா....?"

"தலகாணிக்கு அடியிலே ஒரு கவிதை எழுதி வைச்சிருக்கேன்..."

"ஏன்டா... இந்த நெலையிலே எதுக்கு எழுதுறே? ஏன் ஸ்ட்ரெயின் பண்றே?" அன்புக் கண்டிப்பு.

"சும்மாதா...."

"என்ன... சும்மாதான்?"

"நாலு வரிதாப்பா. படிச்சுப் பாருங்க..."

"எனக்குள் என்னைத் தேடினேன்
காலைக் கவ்வும் முதலைக் குணம்,
ஆளைக் கொல்லும் புலிக்குணம்
ஏய்த்துப் பிழைக்கும் நரிக்குணம்
எல்லாம் இருந்தன.
எங்கே மனிதம்?
இந்தக் கேள்வியின்
ஏக்கத்தில் புதைந்து கிடந்தது
என் மனிதம்.

— பொ. வெண்மணி"

"அற்புதம்டா."

நிஜமாகவே பாராட்டினேன். மனப்பிரமிப்பின் அசல் வெளிப்பாடாய் என் பாராட்டு. அவனது கோணல் மாணலான பேனா எழுத்துக்களையே திரும்பத் திரும்பப் பார்க்கிறேன்.

இந்தக் கவிதை, எனக்குள் வேறொரு பரிமாணத்தில். பளீரென்று வெட்டி மின்னுகிற புது மின்னலாய்.

"இந்தக் கேள்வியின்
ஏக்கத்தில் புதைந்து கிடந்தது.
என் மனிதம்."

எழுத முடியலியே என்கிற ஏக்கத்தில் - மன அழுத்தத்தில்தான் என் கதைகள் புதைந்து கிடக்கின்றனவா?. இனம் புரியாத இந்தக் கவலைக்குள்தான் என் கதை ஊற்றுகளா?

இந்த மின்னலே எனக்குள் வெளிச்சமாக - ஊற்றுகள் உடைத்துக் கொண்டு பீறிட கரையைப் புதுப்பிக்கும் நதியாக நடை போட.....

"எந்தக் கருவை எழுத?"

இதுவா பிரச்னை? இப்போதைய என் மனநிலையையே எழுத வேண்டியது தானே.

எழுதத் துவங்கி விட்டேன், என் கதையை.

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1997

கல்கி விலை உட்பட விலைவாசியெல்லாம் எக்கச்சக்கமாக ஏறிவிட்டது! சிறுகதைப் போட்டிக்கான பரிசுத் தொகை மட்டும் ஏறாவிட்டால் எப்படி? ஆகவே

**முதல் பரிசு :**
**ரூ. 2500**

**இரண்டாவது பரிசு :**
**ரூ. 2000**

**மூன்றாவது பரிசு :**
**ரூ. 1500**

ஆக மொத்தம் ரூ. 6000
பரிசுகளாக வழங்கப் பெறும்.



தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 200 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்கு போனஸ் உண்டு!

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும் இதற்குமுன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய**
**கடைசித் தேதி : ஜூன் 15.**

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலை ஒட்டிய, சுயவிலாசம் எழுதிய உறையைக் கதையுடன் கூடவே அனுப்ப வேண்டும். பின்னால், தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள், கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாமல் இருப்பது நலம். ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் இடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 3 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி,
47. ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 97.

மழலை மிழற்றித் தவழும் பருவமா?
பட்டாம் பூச்சியாகப் பள்ளி செல்லும் பருவமா?
சிறகடித்து வானைத்தொடும் வாலிபப் பருவமா?
நரைவந்து வாசலில் நிற்கும் நடுத்தரப் பருவமா?
மனம் கனிந்து குழைந்திருக்கும் பழுத்த பருவமா?

## எப்பருவத்திற்கும் ஏற்றவை என்பிடி புத்தகங்கள்

* மதலையர், சிறுவர்—சிறுமியருக்கான ஏராளமான புத்தகங்கள்; இனிய தமிழில், வண்ண வண்ண ஓவியங்களுடன்.
* உரூப், தகழி, பஷீர், பைரப்பா, மாஸ்தி, குவெம்பு, பங்கிம் சந்திரர், பிரேம்சந்த், ஹர்பஜன்சிங், வெங்கடேஷ் மட்கூல்கர், அம்ரிதாப்ரீதம், கேசவரெட்டி உள்ளிட்ட முன்னணி இந்திய எழுத்தாளர்களின் இலக்கியப் படைப்புகள்—தரமான தமிழில்.
* இந்தியாவின் தேசியப்பண்பாடு, அரசியலமைப்பு, இந்திய மூலிகைகள், பறவைகள், ஆர்க்கிட்கள், இந்திய நாணயங்கள், நறுமணப்பொருட்கள், இந்திய ஓவியம், தென்னிந்தியக் கோவில்கள் உள்ளிட்ட இந்தியவியல் நூல்கள்.
* இந்தியச் சமுதாயம், சுற்றுச்சூழல், காலந்தோறும் பெண், மக்களாட்சி பற்றிய கேள்விகள் முதலிய இளைய சமுதாயத்தினருக்கான புத்தகங்கள்.
* இதயநோய், இயந்திரமனிதன், நமது வானிலை, கலைப்பொருட்கள் பராமரிப்பு, நமது நீர்வளங்கள் போன்ற அறிவியல் புத்தகங்கள்.
* கபீர், இராமானுஜர், பாரதி, சைதன்யர், ராமலிங்கர், தியாகராஜர், அம்பேத்கர், எம்.என்.ராய், வ.வே.சு. ஐயர் போன்ற தேசியத் தலைவர்களின் வாழ்க்கை வரலாறுகள்.

## தமிழகத்தில் நேஷனல் புக் டிரஸ்ட் புத்தகங்கள் கிடைக்குமிடங்கள்

- பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், சென்னை
- வெர்ஸா புக்ஸ், சென்னை—12.
- புக்லேண்ட், சென்னை—4
- பி.ஐ. பப்ளிகேஷன்ஸ், சென்னை.
- எஸ்.கே. பி. புக் ஷாப், சேலம்—1
- வள்ளலார் புத்தக நிலையம், சேலம்—1
- பாரதி புத்தகப் பண்ணை, தஞ்சை—1
- விஜயா பதிப்பகம், கோவை—2
- சேரன் புக் ஹவுஸ், கோவை
- அய்யனார் புக் ஸ்டால், திண்டுக்கல்
- பத்மா புக் ஸ்டால், நாகர்கோவில்
- டிஎல்.எஸ். டிரஸ்ட், திருச்சி—1
- இன்டர்நேஷனல் புக்ஸ், திருச்சி—2
- புக்லேண்ட்ஸ், சென்னை—17
- நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை
- பாரி நிலையம், சென்னை.
- ஹிக்கின்பாதம்ஸ், சென்னை
- அஜந்தா புக் சென்டர், சேலம்
- டெக் புக் ஜங்ஷன், ஈரோடு—1
- முரசு புத்தக நிலையம், தஞ்சை
- சித்ரா ஸ்டோர்ஸ், கோவை
- ஜெமினி நியூஸ் ஏஜன்சி, மதுரை—10
- ஈகிள் புக் சென்டர், திருநெல்வேலி
- பெல் புக் ஹவுஸ், கடலூர்
- திருச்செந்திலாதிபன் புக் சென்டர் தேவகோட்டை

## நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
## தரமான தமிழ்ப்புத்தகத் தயாரிப்பாளர்

பிரணவமானது மங்களகரமான சப்தம் என்று சொன்னேன். அதிலே முதலில் வரும் 'அ' என்கிற (அ+உ+ம்= ஓம்) அக்ஷரம் விஷ்ணுவைக் குறிக்கும்.

விஷ்ணு என்கிற சப்தத்திலுள்ள மூன்று அக்ஷரங்கள், 'அ' என்கிற சப்தத்தில் ஒரே அக்ஷரத்தில் வந்து நிற்கிறது.

அக்ஷரங்களுக்குள்ளே நான் அகாரமாக இருக்கிறேன்- என்கிறான் பகவான்.

அகார: விஷ்ணு வாசக: - அகாரம் என்றால் அது

# குறையொ



விஷ்ணுவைக் குறிக்கும் சொல். இப்படிப் பிரணவத்திலே முன்னதாக இடம்பெற்று ரக்ஷிக்கிறான் மஹாவிஷ்ணு.

ரக்ஷிக்கிறானா? இல்லையா? என்கிற சந்தேகமே வரக் கூடாது. அப்படிப்பட்ட ரக்ஷகன் அவன். - ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன்- சர்வதா ரக்ஷகன்; சர்வத்ர ரக்ஷகன்- அதாவது என்றும் ரக்ஷிப்பவன், எப்போதும் ரக்ஷிப்பவன்.

அடுத்த அக்ஷரத்தைப் பாருங்கள்.

'உ' என்பது மஹாலக்ஷ்மியைக் குறிக்கும். சாந்தோக்ய 'உபநிஷத்தில் 'உத்' என்கிற கானம் பண்ணுவதுண்டு. அதனால் ஆராதிக்கப்படுவது யார் என்று கேட்டால் சாக்ஷாத் மஹாலக்ஷ்மி! அப்படிப்பட்ட 'உ' என்கிற சப்தத்தில் மஹாலக்ஷ்மி அமர்ந்திருக்கிறாள்.

'உ' என்ற சப்தத்துக்கு மற்றொரு அர்த்தமும் உண்டு. அதாவது 'அ' என்கிற சப்தத்துக்கு உரியவனே என்கிற அர்த்தத்தை அது காட்டும். அப்படிச் சொல்லும்போது இன்னொரு அர்த்தமும் உள்ளடங்கியிருக்கிறது. 'அ என்கிற சப்தம் தவிர வேறெதற்கும் உரியது 'அல்ல'- என்று அழுத்திச் சொல்கிறது அந்த உள் அர்த்தம். - 'அ'வைச் சேர்ந்தது; 'அ'வுக்காக இருக்கக் கூடியது; 'அ'வினுடையது- என்கிற அர்த்தத்தைக் காட்டுகிறது.

இப்படி 'அ'வுக்காகவே

முக்கூர் லக்ஷ்

# றுமில்லை

இருக்கக் கூடியது யார் என்று கேட்டால் அது தான் 'ம' என்கிற சப்தம்.

அ - மஹாவிஷ்ணு உ-உரியது ம-மனம்.

ம என்றால் மனம்; அறிவை உடையவன் என்று பொருள்.

அறிவை உடையவன் யார்...? ஜீவாத்மா!

ஜீவாத்மா எப்படியிருக்கிறான்... அறிவை உடையவனாகவும் இருக்கிறான். அறிவாகவும் இருக்கிறான்.

சூரியன் இருக்கிறான். ஒளிக் கற்றையை உடையவனாகவும் இருக்கிறான். ஒளிப்பிழம்பாகவும் இருக்கிறான். அதேபோல் ஜீவாத்மா அறிவை உடையவனாகவும், அறிவாகவும் இருக்கிறான்.

அப்படிப்பட்ட இந்த ஜீவாத்மா 'ம' என்கிற அக்ஷரத்தினால் சொல்லப்படுகிறான்.

ம என்பது ஜீவாத்மாவையே குறிக்கும் என்பதற்கு இன்னொரு விஷயமும் சான்றாகச் சொல்லப்படுகிறது.

பிரக்ருதி முதலான தத்துவங்களைப் பார்த்துக் கொண்டே வந்தோமானால், ப்ரக்ருதி, என்றொரு தத்துவம், மகத் என்றொரு தத்துவம், அகங்காரம் என்றொரு தத்துவம்.

இந்த மூன்றிலிருந்து (3) பஞ்சதன் மாத்திரைகள் என ஒன்று தோன்றிற்று. அந்த பஞ்சதன்மாத்திரைகளிலிருந்து(5) பஞ்சபூதங்கள்(5) தோன்றின. அதிலிருந்து விசேஷமாய்த் தோன்றிற்று பஞ்ச கர்மேந்த்ரியங்கள்;(5) பஞ்ச ஞானேந்த்ரியங்கள்(5) இவற்றுக்கெல்லாம் மேலே மனஸ் என்கிற ஓர் இந்த்ரியம்(1) இவற்றின் கூட்டுத் தொகை: 24. இதைக் காட்டிலும் வேறானவன், இருபத்தைந்தாவதான ஜீவாத்மா. இருபத்திநாலையும் இருபத்தைந்தையும் காட்டிலும் வேறானவன் 26 ஆகிற பர்மாத்மா.

இருபத்தாறாவது தத்வமாக பகவான் இருக்கிறான்.

நரசிம்மாச்சார்யார்

9

இருபத்தைந்தாவது- ஜீவாத்மா. இருபத்திநாலாவது ப்ரக்ருதி தத்துவம்... 'இந்த இரண்டைக் காட்டிலும் வேறானவனாக நான் விளங்குகிறேன்' என்கிறான் பர்மாத்மா- அவனே இருபத்தாறாவது தத்துவம்.

அதனால்தான் நம்மாழ்வார் 'எண்ணிலும் வரும்' என்கிறார்.



எண்ணால்(26) அறியப்படுபவன்; அழைக்கப்படுபவன். எண்ணத்திலே நிலைத்திருப்பவன் என்று இரண்டு பொருள்' இதற்கு.

இப்போது நாம் பகவான் எதிரிலே உட்கார்ந்து 1,2,3,4 என்று எண்ணினோமானால், '26' என்று உச்சரிக்கும்போது,

"என்னப்பா! என்னை ஏன் கூப்பிட்டாய்?" என்று கேட்பான். நம் கையை ஓடி வந்து பிடித்துக் கொள்ளுவான்.

எண்ணால் சொன்னால் வருவான் இருபத்தாறிலே; எண்ணினால்– நாம் நினைத்தாலும்– ஓடி வருவான்.

'மனத்தில் எண்ணுங்கள். அது இயலாவிட்டால் ஒன்று, இரண்டு என்றாவது சொல்லத் தெரியாதா...?' என்று நமக்கு எளிமைப்படுத்தியிருக்கிறது பகவானை.

'குழந்தையைப் பார்த்து 'நூறு வரைக்கும் சொல்லு...' என்பார். அது 'ஒன்னு, இரண்டு...' என்று ரொம்ப அழகாகச் சொல்ல ஆரம்பிக்கிறது. அது '26' என்று சொல்லும்போது பகவான் ஓடி வந்துவிடுகிறான். 'குழந்தை தானே சொல்கிறது' என்று விட்டுவிடுவதில்லை.

அதனால்தான் ஆதிசங்கர பகவத்பாதாள் அழகாக எழுதுகிறார்: 'ஒரு வஸ்துவிலிருக்கிற சக்தி, எதிராளியுடைய புத்தியை எதிர்பார்ப்பதில்லை..' என்று.

நெருப்பு சுடுகிறது! சின்ன குழந்தை தொட்டாலும் சுடும்; பெரியவர்கள் போய்த் தொட்டாலும் சுடும்.

'ஐயோ! குழந்தை வருகிறதே... இதற்குத் தெரியாதே நமது தன்மை.. இது வந்து கையை வைத்தால் நாம் சீதளமாக மாறிப் போய்விட வேண்டும்...' என்று எண்ணி, நெருப்பு மாறிவிடுமா என்ன...!

குழந்தையாய் இருந்தாலும் பெரியவராய் இருந்தாலும் சுடத்தான் செய்யும். அது போன்றுதான் எம்பெருமானுடைய காருண்யமும். சமமானது. எளியோர் அழைத்தாலும் ஞானிகள் அழைத்தாலும் ஓடி வருவான்.

'எப்போது அலை ஓயும்!' என்று சமுத்திரக் கரையிலே ஒருத்தர் உட்கார்ந்திருக்கிறார்.

அந்த மாதிரி பாவமெல்லாம் ஓயட்டும், என்று நாம் காத்திருந்தால் ஆகுமா...!

'அலை ஓய்ந்து சமுத்திர ஸ்னாநம் செய்வோம்' என்று இருந்துவிட்டால்? நாம் அவனை நெருங்க வேண்டும். நெருங்கினால் ஓடி வருவான்.

எண்ணினால் ஓடி வரும் பரமாத்மா 26வது தத்துவம்.

எண்ணுகிற ஜீவாத்மா இருபத்தைந்தாவது தத்துவம்.

கொஞ்சம் கவனித்துப் பார்த்தோமானால் 'ம' என்பது வடமொழியில் 25வது அக்ஷரம் (ச ச ஜ ஜ ஞ என்று சொல்லிக் கொண்டே வந்தால் 26வது இடம் 'ம'வுக்கு வரும்)

எனவேதான் 'ம' என்கிற அக்ஷரத்தால் சொல்லப்படுவது 25வது தத்துவமான ஜீவாத்மா என்றாகிறது.

**'அ'** என்கிற அக்ஷரத்தினாலே சொல்லப் படக்கூடியவன் பகவான் மஹாவிஷ்ணு. 'உ' என்கிற அக்ஷரத்தினாலே சொல்லப்படக் கூடியவள் அவனுடைய தர்ம பத்தினியான மஹாலக்ஷ்மி– என்று விளக்கினேன்.

இப்படியும் ஒரு தத்துவம் சொல்வதுண்டு.

அ என்கிற அக்ஷரத்திலேயே நாராயணனும் லக்ஷ்மியும் சேர்ந்து இருக்கிறார்கள். நாராயணனைச் சொல்லும் இடத்திலெல்லாம் லக்ஷ்மியையும் சேர்த்துச் சொன்னதாகிறது.

அப்போது 'உ' என்கிற சப்தம், லக்ஷ்மியோடு கூடிய லக்ஷ்மிநாராயணனுக்கே... என்று அர்த்தமாகிறது (உடைமை இலக்கணம்)

ம என்பது மீண்டும் ஜீவாத்மாவையே குறிக்கிறது.

ஆக, 'அ உ ம' என்றால், அந்த லக்ஷ்மி வசிஷ்டனான நாராயணனின் பொருட்டு– என் பொருட்டு அல்ல... அவன் பொருட்டு– என்று பொருள். யானும் என் உடைமையும் நீயே, உனக்கே...' என்று அர்த்தம்.

எல்லாவற்றையும் பகவதர்ப்பணம் பண்ண வேண்டும் என்பதைத்தான் இந்த மூன்று அக்ஷரங்களும் கற்றுத் தருகின்றன.

ஸ்வாமி தேசிகன் இதைப் 'பரமார்த்த ஸ்துதி' என்கிற ச்லோகத்திலே அழகாகச் சொல்கிறார்:

---

"இந்தக்கால மாணவர்கள் பலே கில்லாடியா இருப்பாங்க போலிருக்கு."

"அப்படியா?"

"ஆமாம்... பிரதம மந்திரி பெயர் குஜ்ராலு எழுதிவிட்டு 'கடைசி நேர மாறுதல்களுக்குட்பட்டது'ன்னு அடைப்புக் குறிக்குள் எழுதியிருக்காங்க!"

– சுந்தர் அழகேசன்



'நன்றாக ரக்ஷிப்பதற்காக நீ இரண்டு இடங்களில் முன்னே நிற்கிறாய். பிரணவத்திலே, ஓம்காரத்திலே முன்னே நிற்கிறாய்; பார்த்தனுடைய மாமணித் தேர்த்தட்டிலே முன்னே உட்கார்ந்திருக்கிறாய்.'

– இந்த இரண்டு இடங்களையும் சுவாமி தேசிகன் பரமார்த்த ஸ்துதியிலே நமக்குக் காட்டுகிறார்.

இப்படிக் காட்டும்போது வேறொரு இடம் இதே போல் அமைந்திருந்தால், அதையும் சேர்த்துச் சொல்லலாம். இப்படிச் சொல்வதை அஸ்திரத்தில் உபலக்ஷணம் என்று குறிப்பிடுவார்கள்.

உபலக்ஷணமாக எந்த இடம் சொல்லப்படுகிறது...?

**ரா**மாயணத்திலே, தண்டகாரண்யத்தில் ராமபிரான் முன்னே போகிறான். ஆரண்யப் பிரவேசம். பரமாத்மா உள்ளே நுழையும் போது எப்படி நுழைகிறான்?

முன்னதாக ராமன் போகிறான்; இடையிலே சீதாப்பிராட்டி; அவர்களிருவரிடத்திலேயும் கைங்கர்யம் பண்ணும்படியான லக்ஷ்மணன் கடைசியிலே...

'இது எப்படியிருக்கிறது?' என்று கேட்டால் அந்த ப்ரணவம் இருக்கிறதே, அதைப் போல...

ப்ரணவத்தைச் சொல்லித்தான் கேட்க வேண்டும் என்பதில்லை. எழுதித்தான் பார்க்க வேண்டும் என்பதுமில்லை. அதன் செயல் வடிவினை நாம் பார்க்க முடியுமா என்றால்.. இங்கே ராமாயணத்திலே பார்க்கிறோம். பாரதத்திலே, அர்ஜுனனுடைய தேர்த்தட்டிலே ப்ரணவ ஸ்வரூபமாய் இருப்பவனும் அவனேதான்.

அதனால்தான் தண்டகாரண்யத்தில் நடந்ததை வால்மீகி, 'ஹா!' என்ற ஆச்சர்யப் பிரயோகத்துடன் சேர்த்து எழுதியிருக்கிறார்.

'அடடா! இங்கே பிரணவம்– ஓம்காரம்– போகிறதே அதைப் பாருங்கள்; பாருங்கள்' என்கிறார்! ஓம்காரத்தைச் சொல்வதானால் கட்டுதிட்டமெல்லாம் உண்டு. ஆனால், வால்மீகியின் இந்தச் சுலோகத்தைச் சொன்னால் நேரடியாக பகவானைப் பார்த்துவிடலாம்.

**மு**ன்னதாக கோதண்டபாணியாக ராமன் போகிறான்... எதற்காகப் போகிறான்?

எதிர்ப்படுகிற துஷ்டர்களை முடிக்க தனியொருவனாகப் போகிறான்.

துரியோதனன், துச்சாதனன், கர்ணன், சகுனி– என்று நான்கு துஷ்டர்கள். இவர்களை பகவான் நிக்ரஹித்தான்.

ராமாவதாரத்தைப் போலவே, கிருஷ்ணாவதாரத்திலும் முன்னே வந்து உட்காருகிறான் பரமாத்மா. பிரணவத்தில் முன்னே வீற்றிருப்பது போலவே வீற்றிருக்கிறான்– அர்ஜுனனின் தேர்த் தட்டிலே உட்கார்ந்திருக்கிறான்.

பிரணவத்தில் எதற்காக முன்னே உட்கார்ந்திருக்கிறான்...?

அந்தப் பிரணவத்தை உச்சரிக்கிற அடியவர்களுக்கு உள்ளுக்குள்ளே சில விரோதிகள் இருக்கிறார்களே... அவர்களை நிக்ரஹம் பண்ணத்தான்!

இங்கே, வனத்திலே, கண்ணுக்கெதிரே தெரியும் விரோதிகளைச் சொன்னோம். பாரதத்திலும் ராமாயணத்திலும் அப்படிப்பட்ட விரோதிகள் என்றால், நமக்குள்ளே ஒளிந்து கொண்டும் சில விரோதிகள். யார் அவர்கள்...?

காம, க்ரோத, லோப, மோக, மதமாச்சர்யம் என்று சொல்லக் கூடிய விரோதிகள். அப்படிப்பட்ட விரோதிகளை அழிப்பதற்காகத்தான் ஓம்காரத்திலே முன் வந்து உட்கார்ந்திருக்கிறான் பரமாத்மா.

அதனால்தான் ஓம்காரத்தை உச்சரிக்கும் ஒருத்தருக்கு மாபெரும் பலம் கிடைக்கிறது. அப்படிப்பட்டவர் ஆசையைப் பார்த்து நமஸ்காரம் பண்ணினாரென்றால், அந்த ஆசை அவருக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டு ஓடிப் போய்விடும்! இப்படிச் சொன்னால் என்ன அர்த்தம்...? ஆசைக்கு ஏன் நமஸ்காரம்? அது ஏன் ஓடிப் போக வேண்டும்...?

வேதம் ரொம்ப சமத்காரமாக இந்த உதாரணத்தைச் சொல்கிறது– அதாவது, ஓம்காரம் ஜபிப்பவராயிருக்கும் பட்சத்தில், அவர் ஆசையை வலிய விரும்பி அழைத்தாலும் அது



''ரெண்டு பேர் போலீஸ் மாதிரி மாறுவேடப் போட்டிக்குப் போனதில் உனக்கு மட்டும் எப்படி முதல் பரிசு கிடைச்சது?''

''நான் மட்டும்தான் தொப்பையோட போனேன்!''

– கீழை அ. கதிர்வேல்



''என் மருமக மாதிரி பொல்லாதவளை நீ பார்த்தே இருக்க முடியாது!''

''ஏன்? என்ன செஞ்சா?''

''நேற்று ராத்திரி நம்ம லேடீஸ் கிளப்பின் டின்னர்ல நானும் கலந்துக்கறதா இருந்தேன். அதுக்கு முன்னாடி என் பல்செட்டை எங் கேயோ ஒளிச்சு வைச்சுட்டா!''

– பாஸு

ஓடிப் போய்விடும்; அவரை நெருங்காது.. என்று அர்த்தம்.

வழியனுப்பி வைப்பதற்கும் 'நமஸ்காரம்' என்றுதானே சொல்கிறோம். இங்கே, ஆசைக்கு நமஸ்காரம் சொல்லி வழியனுப்பு தல் நடைபெறுகிறது!

ஆசை, பேராசை, அதற்கும் மேலே ஏற் படக் கூடிய ஆசை.... இதற்கெல்லாம் காரண மான மகா லோபம்... இவையெல்லாம் கெட்ட குணங்கள்!

இவற்றையெல்லாம் ஓம்காரம் போக் கடித்து விடுகிறது.

ஒருத்தர் ரொம்பக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார். ஆனால் மகாவித்வான் அவர். ராஜாவினிடத்திலே போய் சம் பாதனை பெற வேண்டும் என்று பார்க்கிறார். ஆனால் கிடைக்கவில்லை...

ஒரு நாள், ராஜா த்னது சமஸ்தானத்துப் பெரிய வித்வான்கள் எல்லோரையும் அழைத்து ராஜ சம்பாவனை பண்ணத் தீர் மானம் செய்தான்.

அப்போது அந்த வித்வான் என்ன பண்ணினார்... தானும் போய் சம்பாவனை பெறலாம் என்று புறப்பட்டார்.

ராஜா ஒரு வழி ஏற்பாடு செய்திருந்தான். அரண்மனைக்குள்ளே அந்த வழியாக வந்து சம்பாவனை வாங்கிக் கொண்டு, இன்னொரு பக்கமாகப் போய்விட வேண்டும். மறுபடி உள்ளே வர முடியாதபடி வகை செய்திருந்தது.

நமது வித்வானும் அழகாக வந்து சம்பா வனையை வாங்கிக் கொண்டார். பத்தாயிரம் ரூபாய் சம்பாவனை! ஒரு சால்வை; இரண்டு கைகளுக்கும் தங்கத் தோடா... எல்லாவற் றையும் இன்னொரு முறை பார்த்தார். பார்த்த வுடனே 'அடடா! இது மாதிரி இன்னும் இரண்டு இருந்தால் நன்றாயிருக்குமே. இன்னும் இரண்டு சால்வை, இன்னும் இரண்டு தோடா, இன்னும் பத்தாயிரம் ரூபாய்...'

– அவருக்கு வரக்கூடாத ஆசைகள் வந்து விட்டன! வித்வானாயிருந்தாலும் ஆசைகள் விடாமல் வருகின்றன பாருங்கள்!

அந்த வித்வான்களுக்கே ஆசை வரவழைக் கிறது என்றால், இந்த்ரியங்களுக்கு எவ்வளவு பலம்!

இப்படியொரு ஆசை தோன்றியவுடனே வித்வான் அதைப் பூர்த்தியாக்கிக் கொள்ள முடிவு செய்தார். 'இன்னும் பத்தாயிரம் இருந்து விட்டால்தான் நல்லது; இன்னுமொரு ஜதை தோடா வேண்டும்...' மறுபடியும் உள்ளே போக முடியுமா..? முடியாது. இரண்டு பேர் காவலுக்கு நிற்கிறார்கள்!

பார்த்தார்... ஒரு நாளும் பண்ணாத காரி யத்தை அன்றைக்குப் பண்ணினார் அவர்! பெற்றது மொத்தத்தையும் சுருட்டி பையிலே அடைத்துக் கொண்டார். கீழ்ப் பாய்ச்சாக வேட்டியைக் கட்டிக் கொண்டு மதில் சுவரில் ஏறிவிட்டார்!

மகாவித்வான் அவர்... சதுர் சாஸ்திர பண்டிதர்! இப்போது மதில் சுவர் ஏறுகிறார்! ஏன்...? காமத்துக்கு இடம் கொடுத்து விட்ட தால்; ஆசைக்கு இடம் அளித்து விட்டதால்... கல்வியெல்லாம் போய்விட்டது. அவரிடம் இருக்கிற வித்வத் எல்லாம் போய் விட்டது.

இந்தக் கதையைச் சொல்லும்போதே எனக்கு ராமாயணத்தில் ஒரு கட்டம் ஞாபகம் வருகிறது... அதை அடுத்த வாரம் சொல் கிறேன்.

(தொடரும்)



''ஒரு டேப் ரிகார்டரில் வெஸ்டர்ன் மியூசிக்கையும், இன்னொரு டேப் ரிகார்டரில் கர்னாடிக் மியூசிக்கையும் அலற விட்டுட்டு அந்த மியூசிக் டைரக்டர் என்ன செய்யறார்?''

''புரியலையா? ரெண்டையும் மிக்ஸ் பண்ணி புது மியூசிக் போடறாரு!''

– பாஸு

GURUDEV

# சுராணா! சுராணா!



இரும்பு போன்ற உறுதி,
தங்கம் போன்ற
நாணயம் கொண்ட
குழுமத்தின்
ஒரு அங்கம்.

## சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்

## அளிக்கும் முதலீடு திட்டங்கள்

# ஆண்டுக்கு வட்டி விகிதம் 15%

CARE
மதிப்பீட்டாளர்களால்
"போதுமான பாதுகாப்பு"
சான்றிதழ் பெற்றது.
(BBB+)

சுராணா நிறுவனங்கள் 1971 முதல் இயங்கி வருபவை. 25 ஆண்டு அனுபவம் பெற்றவை.

சுராணா நிறுவனங்கள் இரும்பு உற்பத்தி, இரும்பு வியாபாரம் முதலிய தொழில்களில் ஈடுபட்டுள்ளன. இக்குழுமம் தென்னகத்தில் இரும்பு வியாபாரத்தில் முதலிடம் வகிக்கிறது.

குழுமத்தின் மொத்த விற்பனை அளவு ரூ.125 கோடி.

சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட் (SFCIL), ஹயர் பர்ச்சேஸ், லீசிங், பில் டிஸ்கௌண்டிங், ஃபாரின் எக்ஸ்சேஞ், பப்ளிக் டிபாசிட் போன்ற பல வகைப்பட்ட நிதி நிர்வாகத்தில் ஈடுபட்டுள்ளது.

### SCHEME 1 - FIXED DEPOSITS

| Period (Months) | Rate of Interest per annum |
|---|---|
| 12 | |
| 24 | 15.00% (Monthly) |
| 36 | 15.19% (Quarterly)* |
| 48 | 15.48% (Half-yearly)* |
| 60 | |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Minimum Amount of Deposit for Monthly Interest is Rs.10,000/-
* Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 2 - GURUDEV CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Minimum Amount (Rs.) | Maturity Value (Rs.) | Maturity Value for Rs. 1,000/- | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|---|
| 12 | 3,000 | 3,482 | 1,161 | 16.06 |
| 24 | 3,000 | 4,042 | 1,347 | 17.36 |
| 36 | 3,000 | 4,692 | 1,564 | 18.80 |
| 48 | 3,000 | 5,446 | 1,815 | 20.38 |
| 60 | 3,000 | 6,321 | 2,107 | 22.14 |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Addition in Multiples of Rs.1,000/-
3. Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 3 - SURYODAY CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Principal (Rs.) | Maturity Value (Rs.) | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|
| 12 | 862 | 1,000 | 16.01 |
| 24 | 742 | 1,000 | 17.38 |
| 36 | 639 | 1,000 | 18.83 |
| 48 | 551 | 1,000 | 20.37 |
| 60 | 474 | 1,000 | 22.19 |

Interest at 15% Compounded at Monthly rests.


## சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்

குரூப் ஆப் சுராணா
நெ. 16, ஒயிட்ஸ் சாலை, இரண்டாவது மாடி,
சென்னை - 600 014.
போன் : 8543145 / 8522684 / 8525596 /
8525396 / 8525694
ஃபாக்ஸ் : (044) - 8520587.

கிளைகள் : திருச்சி போன்: 46821, [illegible] போன்: 77454, [illegible] போன்: 85423, 85536, பெங்களூர் போன்: 228143, எர்ணாகுளம் போன்: 374617, கோயம்புத்தூர். ஆகிய இடங்களில் உள்ளன.


29.9.96 தேதியிட்ட மக்கள் குரல், Trinity Mirror நாளிதழ்களில் வெளியான சட்டபூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி

ADWAVE/SFC/5420

# ஆளையே மாற்றிய அந்தப் பயணம்...!

எதிர்பாராவிதமாக அரக்கோணம் ஸ்டேஷனில் ஏ.பி. நாகராஜனை சந்திக்க நேர்ந்தது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியளித்தது. என்னைப் பார்த்ததும் அவரும் மகிழ்ச்சி பொங்க விரைந்து வந்தார்.

"எங்க புறப்பட்டீங்க?" என்றேன்.

"கோயமுத்தூர் போறேண்ணே! அழகி படத்துக்கு!" என்று அவர் சொன்னதும் நான் உற்சாகமாக, "அழகிக்கா? சரிதான். நானும் அதுக்குத்தான் போறேன். அங்க சந்திப்போம்" என்று விடைபெற்றேன், ரயில் புறப்பட்டு விட்டதால்.

கோவை ரயில் நிலையத்தில் எனக்கு மிகப் பெரிய வரவேற்பு காத்திருந்தது. ஜூபிடரைச் சேர்ந்த முக்கியப் பிரமுகர்கள் பலர் கூடி வந்து வரவேற்று, தனி காரில் அழைத்துப் போனார்கள்.

கோவை உட்லண்ட்ஸில் அறை போட்டிருந்தார்கள். அங்கு சென்று குளித்து, சாப்பிட்டு விட்டு, இயக்குநர் சுந்தர்ராவ் நட்கர்னியைப் பார்க்கக் கிளம்பினேன்.

அவரைச் சந்தித்துப் பேசுவதென்பதே பெரிய விஷயம் அப்போது. மிகவும் பிஸியான டைரக்டரல்லவா? யூனிட் ஆட்களே கூட அத்தனை சுலபத்தில் அவரை அணுகிவிட முடியாது.

ஆனால், என்னைச் சந்திக்க எந்த மறுப்பும் சொல்லவில்லை, அவர். நான் போய்ச் சந்தித்து, நலம் விசாரித்து சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தபின், டைரக்டர் அழகி படத்தின் கதையை என்னிடம் சொன்னார். படத்தில் என் பாத்திரம் என்ன என் பதையும் மிக விரிவாக விளக்கிச் சொல்லிவிட்டு, "நல்ல வேஷம் இது. நல்லா செய். ரெண்டு பாஷைல படம் தயாராகுது. தெரியுமில்லே?" என்று கேட்டார்.



* எம்.என். நம்பியார்.

"சொன்னாங்க சார்."

"ரைட். போய் மேக்-அப் போடு. டெஸ்ட் பார்க்கணும்" என்றார்.

மேக்-அப் அறைக்குப் போனேன். நாலைந்து மேக்-அப் மேன்கள் இருந்தாலும் அந்நாளின் மிகப் பெரிய மேக்-அப் மேனான சங்கர்ராவ்தான் எனக்கு மேக்-அப் போட்டார்.

டைரக்டர் வந்து பார்த்ததுமே "ஓகே, ஓகே! கெட்-அப் நல்லா வந்திருக்கு. இதையே கீப்-அப் பண்ணிக்கங்கப்பா!" என்று மேக்-அப் மேனிடம் சொல்லி விட்டுப் போய் விட்டார்.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக ஏ.பி.என்னுக்கு அந்தப் படத்தில் மேக்-அப் பொருந்தி வராததால் அவர் நடிக்க முடியாமல் போக, அவர் நடிக்கவிருந்த பாத்திரத்தில் எஸ்.ஏ. நடராஜன் நடித்தார். (மந்திரிகுமாரியில் வாராய் வாராய் பாடியவர்)




இரு மொழிகளில் எடுக்கப்

படுகிற படங்கள் என்றால் வழக்கமான நேரத்தைக் காட்டிலும் ஷூட்டிங்குக்குச் சற்று கூடுதல் நேரம் பிடிக்கும்.

ஒவ்வொரு காட்சியையும் முதலில் தமிழில் பேச வைத்து எடுத்துக் கொள்வார்கள். உடனே தெலுங்கு வசனங்கள் தரப்பட்டு, அதைப் பாடம் செய்து பேச வேண்டும்.

அழகி படத்தின் தெலுங்கு வசனங்களை எழுதியவர், பிரபல தெலுங்கு வசன கர்த்தா ஆத்ரேயா.

அவர், கிளைமாக்ஸில் நான் பேசுகிற காட்சி ஒன்றுக்கு மூன்று பக்க வசனங்கள் எழுதியிருந்தார்.

தயக்கத்துடனே அதை எனக்குச் சொல்லிக் கொடுத்தவருக்கு சந்தேகம். 'ரொம்பக் கஷ்டப்படுவேன்' என்று நினைத்தார் போலும்.

துளிக்கூட தெலுங்கு தெரியாத நான், அந்த மூன்று பக்க வசனங்களை ஒரே டேக்கில் பேசி முடித்து ஓகே வாங்கியதைப் பார்த்து அசந்து போய் விட்டார்!

''எப்படிப் பேசினீர்கள்?'' என்று அவர் கேட்டதற்கு என் விளக்கம் இதுதான். தாய்மொழி வசனங்களைப் பேசும்போது அர்த்தம், அழகு இவற்றில் மனசு நிற்கும். ஆகவே வசனங்களைக் கோட்டைவிட நேரும். தெரியாத மொழி என்றால் பிரச்னையே இல்லை. வெறும் வார்த்தைகள் சுலபமாக, மண்டையில் நிற்கும்!




நான் மிகவும் ஆசை ஆசையாக நடித்த அந்தப் படம் வெளிவருவதில் நிறைய பிரச்னைகளைச் சந்திக்க வேண்டி இருந்தது. ஆரம்பத்தில் சுந்தர்ராவ் நட்கர்னி இயக்கிய அதை ஏன் ஏ.எஸ்.ஏ. சாமி தொடர்ந்து முடித்தார் என்பதோ, குறித்த காலத்தில் வெளியாகாமல் ஏன் மிகக் கால

●●●

**தாய்மொழி வசனங்களைப் பேசும்போது அர்த்தம், அழகு இவற்றில் மனசு நிற்கும். ஆகவே வசனங்களைக் கோட்டைவிட நேரும். தெரியாத மொழி என்றால் பிரச்னையே இல்லை. வெறும் வார்த்தைகள் சுலபமாக மண்டையில் நிற்கும்!**

●●●






தாமதமாக அது வெளியானது என்பதற்கோ இன்றுவரை எனக்குக் காரணம் தெரியாது!

ஒரு படத்தின் வெற்றியோ தோல்வியோ அப்படத்தில் நடித்த நடிகர்களைக் கட்டாயம் பாதிக்கும் என்கிற கூற்று என் விஷயத்தில் பொய் என்பதற்கு, 1950க்குப் பிறகு எனக்குத் தொடர்ந்து கிடைத்து வந்த நிறையப் பட வாய்ப்புக்களே சாட்சி. திறமையாகவும் நேர்மையாகவும் உழைக்கிற திறன் இருந்தால் மட்டும் போதும்; வாய்ப்புக்களுக்குப் பஞ்சம் இராது என்பது என் நம்பிக்கை.

நகைச்சுவை வேடங்கள்தானே, எப்படியாவது சமாளித்துக் கொள்ளலாம் என்று நினைக்காமல் ஒவ்வொரு பாத்திரத்திலும் ஆழ்ந்து போகப் பார்ப்பேன். என்னால் அதிக பட்சம் என்ன செய்ய இயலுமோ அது ஒவ்வொரு படத்திலும் முத்திரையாக விழ வேண்டும் என்று உழைப்பேன்.




அப்படித்தான் தேவர் பிலிம்ஸில் என்னை ஒரு படத்துக்கு அழைத்தார்கள். எம்.ஜி.ஆர், ஜெயலலிதா நடித்த முகராசி படம் அது!

வாகினி ஸ்டுடியோவில் நடந்த அந்தப் படப்பிடிப்பில் நான் ஹெட்கான்ஸ்டபிள் வேடம் ஏற்றிருந்தேன். நாகேஷ், கான்ஸ்பிள். நம்பியார்தான் வில்லன்.

இன்ஸ்பெக்டரான எம்.ஜி.ஆர்., ஒரு தப்பிப் போன கைதியைத் தேடிக் கண்டு பிடிக்கும் பொறுப்பை என்னிடம் அளித்திருப்பார்.

நான் நாகேஷை அழைத்துக் கொண்டு ஊரெல்லாம் சுற்றி வருவேன். கைதி மட்டும் அகப்பட மாட்டான்.

சோர்ந்து போய் நான் நாகேஷைத் திட்டிக் கொண்டே ஸ்டேஷனுக்கு வருவேன்.

அங்கே அந்தக் கைதி ஒரு மாதிரி ஸ்டைலாக சுவரில் சாய்ந்தபடி நின்று கொண்டிருப்பான்!

"அண்ணே, கைதிங்களெல்லாம் உங்களுக்கு எப்படி பயப்படறாங்க பாருங்க! நீங்க தேடறீங்கன்னு தெரிஞ்சதுமே தானே வந்து சரண்டராயிட்டான் பாருங்க!" என்பார் நாகேஷ்.

"அது சரி, என்னைப் பார்த்தும் மரியாதை இல்லாம ஸ்டைலா எப்படி நிக்கறான் பாரு. போய் இழுத்துட்டு வாய்யா."

நாகேஷ் போய்த் தொட்டதும் தடாலென்று சரியும் அந்தப் பிணம்!

"என்னய்யா இது! கைதியை அரெஸ்ட் பண்ணா அவார்டு, ரிவார்டு கிடைக்கும்னு பார்த்தா இவன் கருவாடா வந்து நிக்கறான்!"

சடாரென்று அந்தக் கணத்தில் நான் சொன்ன இந்த திடீர் வசனத்துக்கு எக்கச்சக்கப் பாராட்டு!

ஷாட் இடைவேளையில் ஃப்ளோருக்கு வெளியே நான், நாகேஷ், எம்.ஜி.ஆர், நம்பியார் எல்லோரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். எப்போதுமே என் நடிப்பை- டைமிங்கைப் பாராட்டிப் பேசும் எம்.ஜி.ஆர்., அப்போதும் என்னை வெகுவாகப் பாராட்ட, கேட்டுக் கொண்டிருந்த நம்பியார், "எல்லாம் சரி. இந்தப் பையனை ஒருதரம் சபரி மலைக்குக் கூட்டிட்டுப் போகணும்னு பார்க்கறேன். ஆனால் கூப்பிட்டால் வர மாட்டேங்கறான். நீங்களாவது எடுத்துச் சொல்லுங்க தலைவரே!"

நான் சொன்னேன்: "என்னை விட்டுடுங்க. தரையிலே நடக்கறதுக்கே கஷ்டமா இருக்கு. நான் போய் மலைல நடக்கறதா? ஆளை விடுங்க சாமி!"

"அதான் வேண்டாங்கறாரே! விட்டுட வேண்டியதுதானே?" என்றார் எம்.ஜி.ஆர்.

"நீங்களே இப்படிச் சொன்னா எப்படி? நீங்க நாத்திகர். வர மாட்டேன்னு சொன்னா சரி. இவனுக்கென்ன வரதுக்கு?"

விடாப்பிடியாகக் கேட்டார் நம்பியார்.

நான் தீர்மானமாக மறுத்துக் கொண்டிருந்தேன்.

அன்று மட்டுமல்ல; அந்தப் படத்தின் ஷூட்டிங் நடந்த ஒவ்வொரு தினமும் நம்பியார் என்னை நச்சரிப்பதும் நான் மறுப்பதும் அவர் எம்.ஜி.ஆரை மத்தியஸ்தத்துக்குக் கூப்பிடுவதும் தொடர் கதையானது!

"யோசிக்காம மறுத்திட்டிருக்காதே! ஒரு தடவை வந்து பாரு. அப்புறம் உனக்கு எவ்வளவோ நல்லதெல்லாம் நடக்கும்!" என்றார் நம்பியார்.

அவரது இடைவிடாத வற்புறுத்தலில், ஒரு நாள் எம்.ஜி.ஆர் "போயிட்டுத்தான் வாங்களேன்! இத்தனை சொல்றாரே!" என்று கேட்கவும்,

"சரி. உங்களுக்காகப் போய் வரேன்" என்று சம்மதம் சொன்னேன்.

"எப்ப கிளம்பறது?" என்று நம்பியாரிடம் கேட்டேன்.

"நீங்க ஒத்துக்கிட்டா சரியாப் போச்சா? இருங்க, நான் ஐயப்பன்கிட்ட பர்மிஷன் கேட்டு வரேன். நாளை சொல்கிறேன்" என்றார்.

நான் விழித்தேன். என்ன பர்மிஷன்?

மறுநாள் ஷூட்டிங்கில் நம்பியாருக்காகக் காத்திருந்தேன். அவர் வந்ததும், "ஓகே. நேத்து ராத்திரி அனுமதி கேட்டாச்சு; கிடைச்சாச்சு. மாலை போட வேண்டியதுதான்!" என்றார் உற்சாகமாக.

அது 1967ம் வருடம். நான் முதல்முதலில் சபரிமலை சென்றது அப்போதுதான்!

அப்பப்பா! அதன்பின் என் வாழ்க்கையே எப்படியெல்லாம் அடியோடு மாறிப் போனது?

பாம்பு சட்டை உரிப்பது போல, அது வரை மதயானைபோல் உலாவிக் கொண்டிருந்த ராமசாமி, தன் சட்டையை உரித்து, புது மனிதனாக மாறத் தொடங்கியது அப்போதுதான்!

(தொடரும்)



"நம்ம மாஜி அமைச்சருக்கு ரொம்ப நாளா ஒரு சந்தேகம் இருந்துட்டே இருக்குங்க!"

"என்னது?"

"அவர் உண்மையிலேயே எந்தவித சாட்சியமும் இல்லாம சாமர்த்தியமா ஊழல் செஞ்சிருக்காரா அல்லது அவர் இலாகா சம்மந்தப்பட்ட ஃபைல்களை இன்னமும் சி.பி.சி.ஐ.டி. காரங்க புரட்டிப் பார்க்கலையான்னுதான்...!"

— பாஸு



"நீங்க மந்திரியா இருக்கலாம். அதுக்காக நானும் உங்க அம்மாவும் சண்டை போட்டுக்க ஆரம்பிச்சதும் நம்ம வீட்டை கலவர பகுதியா அறிவிச்சு அறிக்கை விடறது அவ்வளவு நல்லா இல்லே!"

— கீழை அ. கதிர்வேல்



"மாப்பிள்ளை அரசியல்வாதியா இருக்கலாம். அதுக்காக இப்படியா?"

"என்னங்க அலுத்துக்கறீங்க?"

"பின்ன என்னடி? வரதட்சணை பணம் பாக்கி தரலைன்னு என் கொடும்பாவியை நடுரோட்ல எரிக்கறாரே...!"

— நாகூர் ஆர். லோகநாதன்

# ஹாஹாஹா...!

அட்டகாசச் சிரிப்பு, வெடிச்சிரிப்பு, குலுங்கக் குலுங்கச் சிரிக்கும் சிரிப்பு... இப்படிச் சிரிப்பில் எத்தனை விதமோ அத்தனையும் பரிச்சயமாக்கிக் கொள்ள வேண்டுமென்றால், அடுத்த நிமிடமே மும்பைக்கு டிக்கெட் எடுங்கள்! இங்கு முளைத்திருக்கும் எக்கச்சக்கமான 'Laughters' club', உர்ராங் கோட்டான்'களைக் கூட 'இக்இக்'க வைத்து விடும்!

இடுக்கண் வருங்கால் நகைக்கச் சொன்ன வள்ளுவர் காலத்து பிரிஸ்கிரிப்ஷன்தான்! இந்த ஹைபர்டென்ஷன், டிப்ரஷன் போன்றவற்றுக்கு மருந்தாக, "ஹாஸ்ய தெரபி" என்ற புதிய லேபிலுடன் பொலிகிறது!

"வாய்விட்டுச் சிரித்தால் நோய் விட்டுப் போகும்" என்ற பழைய தத்துவத்துக்கு உருவம் கொடுத்து, உயிர் கொடுத்து, அதை 'லாஃபர் கிளப்'புகளாக முதன் முதலில் உருமாற்றிய பெருமை பிரியதர்சினி அகாதமிக்காரர்களைச் சாரும்.

இதன் உறுப்பினரான டாக்டர் மதன் கடாரியா, ஹாஸ்யரஸம், மனித உடல் மற்றும் மனம் மீது ஏற்படுத்தும் ஆக்கபூர்வமான மாறுதல்களைப் பற்றி விஞ்ஞானபூர்வமான ஆதாரங்களுடன் ஒரு கட்டுரையைத் தற்செயலாகப் படிக்க, உடனே அதை சோதிக்க நினைத்து, தெரிந்த நால்வரை அருகிலிருந்த பூங்காவிற்கு அழைத்துச் சென்று 'சிரிப்பு மூட்டினார்'!

அவர்களுடைய "ஹஹ்ஹா..." மற்றவர்களையும் தொற்றிக் கொள்ள, நாளடைவில் நாலு நாற்பதாகி... நானூறாக மாறி... இன்று நாலாயிரமாக, நாற்பதாயிரமாக உருவெடுத்திருக்கிறது!

முதலில் 'ஜோக்'குகள் மூலமாகத்தான் சிரிப்பை வரவழைத்தனர். ஆனால் நகைச்சுவைத் தொடர்களுக்கே பின்னணியில் சிரிப்பொலி நாடா தேவைப்படும் காலத்தில், தெரிந்த ஜோக்கைத் திரும்பத் திரும்பக் கேட்டு அழுகை வராமலிருந்தால் போதாதா?

அதனால் இப்போது 'ஹாஸ்ய யோகா' என்று உடற் பயிற்சி பாணியில், இதிலேயும் 'யோகா'வை அறிமுகப்படுத்தி கவர்ச்சி காட்டி விட்டார்கள்.

முதலில் பிராணாயாம முறையில் மூச்சை ஆழமாக உள்ளிழுத்து, வெளியேவிட்டு நுரையீரல்களை விரிவாக்கிக் கொண்டு, பிறகு ஹோஹ்ஹோ... ஹாஹ்ஹா என்று சீராக சிரிக்க (கத்த) வேண்டும். இது "கபால்பாதி" என்ற யோகப் பயிற்சியை ஒத்தது! சிரிக்கும் போது உடலில் சில சுரப்பிகளிலிருந்து சில திரவங்கள் சுரக்கின்றனவாம்; அவை ஆரோக்கியத்திற்கு வழி வகுக்கின்றன.

"இன்றளவும் நாம் இலவசமாகப் பெறக் கூடியவை மூன்று– காற்று, நீர், சிரிப்பு! காலைப் பொழுதை சிரிப்புடன் துவங்கினால் நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடனிருக்க முடியும்" என்கிறார் அகாதமியின் தலைவரான ரூபானி!

இந்தக் கிளப்புகள் இன்று அகமதாபாத், நாஷிக், அவுரங்காபாத், தில்லி, கல்கத்தா எனக் கிளை பரப்பியுள்ளதுடன், லண்டன், கலிஃபோர்னியா, இத்தாலி, ஆஸ்திரேலியா என்று கடல் கடந்தும் "பிரியதர்சினி இண்டர்நேஷனலாக" பிரபலமாகியுள்ளன. ஜப்பான், ஹாங்காங், சிங்கப்பூரிலும் நிறைய ஆர்வலர்கள் உள்ளன ார்! இந்த வெற்றி தந்த



* ஹாஸ்ய யோகா

தெம்பில், கண்டிவாலில் ஒரு சிரிப்பு ஆராய்ச்சிக் கூடம் நிறுவி, பிரபல மருத்துவர்கள் அங்கே கூடி விவாதிக்கவும் வழி வகுத்துள்ளார்கள்.

சிரிப்புத் தெரபியுடன், ஒரு படி மேலே சென்று, குழந்தைத்தன தெரபியையும் அறிமுகப் படுத்தியிருக்கிறார் டாக்டர் கடா



# ஹிஹிஹி...!

ரியா! வோனா வாவாவில் இவர் இதற் கென செமி னார் நடத்தி சக் கைபோடு போட் டிருக்கிறார்.

குரங்குவால், இரட்டைப் பின்னல், குட்டைப் பாவாடை, லாலிபாப், அரை டவுசர், பலூன், தொப்பி, டெட்டிபேர், பஞ்சுமிட் டாய் சகிதம், 45-65 வயதானவர் கள், 5-10 வயது குழந்தைகளாய் மாறி அடித்த லூட்டியைப் பார்த் திருக்க வேண்டும்!

"நம் துன்பத்திற்கும் துயருக்கும் அடிப்படைக் காரணம் நாம் எதையும் அறிவுபூர்வமாக சிந் தித்து, அலசி, சின்டைப் பிய்த்துக் கொள்வதுதான். குழந்தைகள் குதித்து, கும்மாளமிட்டு, அழுது, அடம்பிடித்து... எதைச் செய்தாலும் மனதை வருத்திக் கொள்ளாமல், உடலை மட்டும் அலட்டிக் கொள்ளும்! உடற்காயம் எளிதில் ஆறிவிடும்; உள்ளத்தின் காயங்கள் தான் ஆற மறுக்கும்; அதன் பயனாய் வருவதே ஹைபர் டென்ஷன், மைக்ரேய்ன், பிரஷர்... பெரியவர்கள் குழந் தைகளாய் மாறும்போது, உள்ளத்தில் அடிபட்டுக் கொள் ளாமல் உடலை மட்டும் ஆட்டுவிக்கும் கலையைக் கற்கிறார்கள். இதனால் அடிமனத்தின் காயங்கள் தேய்ந்து, மறைந்து நாளடைவில் மடிந்தும் விடுகின்றன" என்று விளக்கு கிறார் கடாரியா. இப்போது மும்பையில் ஆங்காங்கே ஹாஸ்ய கிளப்புகள் இஷ்டத்துக்கு முளைத்து விட்டன. ஆனால் பல வற்றில், மருத்துவ நிபுணர்களின் மேற்பார்வை இல்லாமல் சகட்டு மேனிக்குச் சிரித்துக் கூத்தடிக்கிறார்கள்.

"இதெல்லாம் தவறு; ஹெர்னியா, மூலநோய், இதயக் கோளாறு, தீவிர சளி, ஃப்ளு உள்ளவர்களும், கர்ப்பிணிகளும் உடலுக்கு அதிர்வுகள் தரக் கூடிய ஹாஸ்ய தெரபியை மேற் கொள்ளக் கூடாது" என்கிறார் டாக்டர் கடாரியா!

சரி, டாக்டருக்கு ஜுரம் வந்தால்...? இதே "சிரிப்பு வைத் தியம்தான்" என்கிறார் கடாரியா... இவர் 'டிப்ரெஸ்' ஆகும் போது ஒரு ரூமுக்குள் சென்று தாளிட்டுக் கொண்டு விடுவா ராம்! மனைவியின் லிப்ஸ்டிக், ரூஜ், பவுடர் எல்லாவற்றையும் முகத்தில் கன்னாபின்னாவென்று ஒரு ஜோக்கரைப் போல் ஈஷிக் கொண்டு, 'க்ளௌன் காப்'பை போட்டுக் கொண்டு குட்டிக் கரணம் அடித்து, ஆடிக் களைத்தபின் தியானத்தில் ஆழ்ந்து விடுவாராம்! வேதனைகள் 'சூ-மந்திரக்காளி' ஆகிவிடுமாம்! மனைவியின் வேதனைகள் அதன்பின்தான் ஆரம்பிக்கும் என்பது வேறு விஷயம்!

— ஜெயஸ்ரீ ராஜ்

**மூலம் : டேனியல் ஸ்டீல்**

# 11:29

'கா ரை ஓட்டிச் சென்றவர் விபத்தில் இறந்து விட்டதாக அல்லவா சொன்னார்கள்? இங்கே இதோ தாரென்ஸன் எதிரில் வந்து நிற்கிறாரே?' என்று பேஜ் குழம்புகையில், அவள் குழப்பத்தை அதிகரிக்கிற மாதிரி அவன் பேசினான்.

கண்களில் கண்ணீர் வழிய, "பேஜ், ஐ ஆம் ஸோ ஸாரி," என்றவன் அவள் கைகளை ஆதுரத்துடன் பிடித்துக் கொண்டான். "எனக்குத் தெரியாமல் போய் விட்டது. இந்த மாதிரி ஏதாவது நேரப் போகிறதே என்று நான் அடிக்கடி பயப்படுவதுண்டு. ஆனால் அலட்சியமாக இருந்து விட்டேன்... ஏன்தான் இப்படி முட்டாள்தனமாக இருந்து விட்டேனோ, எனக்கே தெரியவில்லை."

பேஜ் அவனை வெறித்து நோக்கினாள். என்ன சொல்கிறார் இவர்? முட்டாள்தனமாக இருந்து விட்டேன்... அலட்சியமாக இருந்து விட்டேன்... என்ன இதெல்லாம்?

எல்லாம் போக, இவர் உயிருடன் இருக்கும்போது இறந்து விட்டாரென்று அந்த நர்ஸ் ஏன் சொன்னாள்?

"எனக்கு எதுவும் புரியவில்லை," என்று தழுதழுத்த குரலில் கூறினாள்.

தாரென்ஸன் அவளை மெல்ல ஒரு பெஞ்சில் உட்கார்த்தி வைத்துத் தானும் உட்கார்ந்தான்.

நடந்ததனைத்தையும் நம்ப முடியாதவன் போல் தனக்குத்தானே தலையாட்டிக் கொண்டிருந்தான் தாரென்ஸன். "எனக்கு இப்போதுதான் கொஞ்சம் கொஞ்சமாய்ப் புரிகிறது... அப்படி ஒரு டிரெஸ்ஸில் க்ளோ கிளம்பியபோதே நான் ஊகித்திருக்க வேண்டும்... ஒரு கறுப்பு லெதர் ஸ்வெட்டரை யாரிடமோ இரவல் வாங்கி மாட்டிக் கொண்டிருந்தாள். ரொம்ப எடுப்பாய், கவர்ச்சியாக இருந்தது.



'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம். © டேனியல் ஸ்டீல்

அப்போது என் சின்னப் பையன் பிஜானைக் கவனித்துக் கொண்டிருந்ததால் அதைப் பெரிசாய் நினைக்கவில்லை. உன்னோடு வெளியே போகிறேன் என்று சொன்னதால்

**தமிழில் : ரா. கி. ரங்கராஜன்**

கவலைப்படவில்லை. இல்லாவிட்டால் அவளைத் தடுத்து நிறுத்தியிருப்பேன்..."

"என்னோடு வெளியே போகிறேன் என்றா சொன்னாள்? நீங்கள் அழைத்துப் போக வில்லையா? காரை நீங்கள் ஓட்டிக் கொண்டு போகவில்லையா?" தாரென்ஸன் சொன்னது புரியப் புரியப் புதியதொரு பயம் பேஜைப் பிடித்துக் கொண்டது. ஆலிஸனும் க்னோவும் இவருடன் போகவேயில்லை. வேறு யாருடனோ!... அப்படியானால் காரை ஓட்டியது யார்?

"நீங்கள் அவர்களை



லூகி ரெஸ்டாரண்ட்டுக்குச் சாப்பிட அழைத்துப் போவதாயும், பிறகு ஒரு சினிமாவுக்குப் போகப் போவதாயும் ஆலி சொன்னாளே! நீங்கள் போகவில்லையா?" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே பேஜுக்கு எல்லாம் புரியத் தொடங்கியது. புதிராகச் சிதறியிருந்த பல துண்டுகள் ஒழுங்காகச் சேர்ந்து முழு வடிவம் பெற்றன. இறுக்கமான காஷ்மீர் ஸ்வெட்டரை அணிந்து கொண்டு ஆலிஸன் புறப்பட்டது... அந்த வெள்ளை ஸ்கர்ட்... க்ளோவின் வீட்டுக்குப் புறப்பட்டபோது அவள் கண்ணில் தெரிந்த ஏதோ ஒரு மர்மம்... காரில் கொண்டு போய் விடுகிறேனே என்று சொன்னபோது வேண்டாம் என்று சொல்லி விட்டு நடையாகவே சென்றது...

"சே! நான் எத்தனை முட்டாள்தனமாக இருந்து விட்டேன்!" என்றாள்.

"நாம் இரண்டு பேருமே முட்டாள்தனமாக இருந்து விட்டோம்," என்றான் தாரென்ஸன். விழிகளைக் கண்ணீர் மறைக்கப் பேஜைப் பார்த்தபோது அவனும் அழுது கொண்டிருப்பது தெரிந்தது. "க்ளோவை இங்கே கொண்டு வரும்போது நீ பார்த்திருக்க வேண்டுமே! என்ன கோரம்! இரண்டு கால்களிலும் எலும்பு முறிவு... இடுப்பு உடைந்து, தொடை கூடச் சேதம் அடைந்திருக்கும் என்கிறார்கள். அவளால் இனிமேல் நடக்க முடியுமா என்பதே... பேஜ்... பாலே நடன ஸ்கூலில் சேர்ந்து ஆட வேண்டுமென்று என் குழந்தை எத்தனை ஆசைப்பட்டாள்! கடவுளே! ஏன் இப்படியெல்லாம் நடந்தது..."

க்ளோவினால் நடக்க முடியாதா! நினைக்கவே பேஜுக்கு மூளை மரத்துப் போயிற்று.

நடந்ததற்கெல்லாம் இனிமேல் தாரென்ஸனைக் குற்றம் சொல்ல முடியாது... "ஆலிஸனைப் பார்த்தீர்களா?" என்று கேட்டாள். நியூரோ சர்ஜன்கள் வந்து சொன்ன பிறகுதான் பார்க்க முடியும் என்று நர்ஸ் கூறியிருந்தபோதிலும் அவள் உள்ளம் துடித்தது. நான் பார்ப்பதற்கு முன்பே ஆலிஸனுக்கு ஏதாவது ஆகிவிட்டால்...? உயிரோடு அவளைப் பார்க்க முடியாமலே போய்விட்டால்...?

"இன்னும் ஆலிஸனைப் பார்க்கவில்லை," என்றான் தாரென்ஸன். அவன் குரலில் இப்போது நிதானம் திரும்பியிருந்தது. "பார்க்க வேண்டுமென்று கேட்டேன். முடியாது என்று சொல்லி விட்டார்கள். க்ளோவை மட்டும் சர்ஜரிக்கு அழைத்துப் போனதால் பார்க்க முடிந்தது. அவளுக்குச் சிகிச்சைகள் முடிய ஏழு எட்டு மணி நேரம் பிடிக்கும் என்கிறார்கள். மேலே கூட ஆகலாம். விடிகிறவரை இங்கே காத்திருக்க வேண்டியதுதான்..."

இவருக்கு விடியும் - எனக்கு? ஆலிஸனுக்கு? ராத்திரிக்குள் அவள் வாழ்வே முடிந்து போய் விடுமோ? பேஜ் நடுங்கினாள்.

"ஆலிஸனுக்குத் தலையில் பலத்த அடி என்று சொன்னார்கள். அதற்கு மேல் எதுவும் சொல்லவில்லை," என்றான் தாரென்ஸன் மென்மையாக.

"என்னிடமும் அதேதான் சொன்னார்கள். அதற்கு என்ன அர்த்தம் என்றே புரியவில்லை. மூளையில் சேதம் ஏற்பட்டிருக்கிறதா? அவள் உயிருக்கு ஆபத்தா? பிழைத்து எழுந்திருப்பாளா?" திரும்பத் திரும்ப ஒரே கேள்விகளைக் கேட்டவண்ணம் இருந்தாள் பேஜ். கண்ணீர் வழிவது நிற்கவேயில்லை. "நியூரோ சர்ஜன்கள் அவளைக் கவனித்துக் கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள். அதுவும் எனக்குப் புரியவில்லை..."

## அருள்வாக்கு



ஒரு வஸ்துவை நாம் பார்க்கிறோம் என்றால், பார்க்கப்படுகிறது object என்றும், பார்க்கிறவனான subject என்றும் இரண்டு ஏற்பட்டு விடுகின்றன. நம் உடம்பை நம்மால் object ஆகத் தெரிந்து கொள்ள முடிகிறது. "என் உடம்பு நன்றாயிருக்கிறது; அல்லது நன்றாக இல்லை" என்று நாம் அதைப் பற்றித் தெரிந்து கொள்கிறோம் என்றால், அப்போது அது object - ஆகி விடுகிறது. அதிலிருந்தும் வேறாக, 'நாம்' என்ற ஏதோ ஒன்று Subject- ஆக இருந்து கொண்டு, அதைப் பார்க்கிறது என்று ஏற்படுகிறது. அப்படிப் பார்ப்பது எதுவோ, அதுதான் ஆத்மா. இந்த subject-ஐ எதனாலும் தெரிந்து கொள்ள முடியாது. அப்படித் தெரிந்து கொள்ள முடிந்து விட்டால், அதுவும் Object- ஆகி, அதைப் பார்க்கிற இன்னொரு subject- தான் நிஜ நாம் என்று ஆகி விடும். நிஜமான நாமான ஆத்மா subject ஆகத்தான் இருக்க முடியுமே தவிர Object- ஆகாது. எனவே சரீரம் முதலான objectகளைத் தள்ளிவிட்டு, இந்த subject- ஆக நாம் அநுபவத்தில் தனித்து இருந்து கொண்டுதான் இருக்க முடியுமே தவிர, அதை அறிந்து கொண்டு இருக்க முடியாது. அறிவது என்றால், இதைவிட

தாரென்ஸன் குறுக்கிடாமல் அவள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தான். இறுதியில், "அவளுக்கு ஒன்றும் ஆகாது. எல்லாம் நல்லபடி நடக்கும். ஏன் கவலைப்படுகிறாய்?" என்றான்.

"அவளுக்கு ஏதாவது ஆகிவிட்டால்?" என்று மறுபடியும் பேஜ் புலம்பினாள். எனினும் பேசுவதற்கு இவர் ஒருத்தராவது இருக்கிறாரே என்ற ஆறுதல் ஏற்பட்டது. நான் எத்தனை பயங்கரமான பீதியில் இருக்கிறேனோ அதே அளவு இவருக்கும் இருக்கிறது... ஒரே ஒரு வித்தியாசம். இவர் பெண் க்ளோவுக்கு ஏகப்பட்ட அடிகள், காயங்கள் என்றாலும் உயிருக்கு அபாயமில்லை.

"இதோ பார், பேஜ். கண்ட கண்ட கற்பனைகள் செய்து கொண்டு மனசைப் போட்டுக் குழப்பிக் கொள்ளாதே. கொஞ்சம் முன்னால் நான் கூட அப்படித்தான் நினைத்தேன்.

ஏதாவது ஆகிவிட்டால் கணவன் பிராடிடம் அதை எப்படித் தெரிவிக்கப் போகிறோம் என்று ஒரு வினாடி எண்ணுவாள். மறு வினாடி, 'சீசீ, அப்படி எதுவும் நேராது' என்று அந்த எண்ணத்தைத் தள்ளுவாள்.

திடீரென்று ஞாபகம் வந்தது, காரோட்டி இறந்து விட்டதாக நர்ஸ் சொன்ன தகவல்.

"காரை யார் ஓட்டிக் கொண்டு போனார்களாம்? உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"அவன் பெயர்தான் தெரியும். பிலிப் சாப்மன் என்று சொன்னார்கள். பதினேழு வயதுப் பையன். அவ்வளவுதான் தெரியும். க்ளோவைக் கேட்கலாமென்றால் அவளும் சொல்லக்கூடிய நிலைமையில் இல்லை..."

'அடப் பாவமே!' என்றாள் பேஜ். "பிலிப்... அந்தப் பெயரைக் கேள்விப்பட்ட மாதிரி

இன்னொன்று, அதை object- ஆக்கி ஆராய்ந்தால்தான் முடியும். ஆத்மாவின் விஷயத்தில் இது அபத்தம். ஆத்மாதான் 'நிஜமான நாம்'. அதை அறிய வேண்டும் என்றால், அப்படி அறிகிற வஸ்து ஆத்மாவுக்கு வேறானதாகத்தான் இருக்க வேண்டும். நம்மில் நம்முடைய நிஜமான ஸ்வரூபத்துக்கு வேறாக என்ன இருக்க முடியும்? ஆத்மாவுக்கு அந்நியமாக அதை அறிய எது உண்டு? எதுவும் கிடையாது. அதனால், "ஆத்மஞானம்", "ஆத்மாவை அறிவது" என்ற வார்த்தைகளைச் சொன்னால்கூட, இங்கெல்லாம் ஞானம், அறிவது என்பதற்கு, ஒரு ஸப்ஜெக்ட் இன்னொரு ஆப்ஜெக்டை அறிகிறது என்று அர்த்தமில்லை. தன்னைத்தானே அநுபவித்துக் கொள்வதைத்தான், இந்த இடங்களில் 'ஞானம்' அறிவது' என்ற வார்த்தைகளால் சுட்டிக் காட்டுகிறோம். இதனால்தான் கேனோபநிஷத், "எவன் ஆத்மாவை அறிந்து விட்டேன் என்கிறானோ அவன் அறியவே இல்லை; எவன் அறியவில்லை என்ற நிலையில் இருக்கிறானோ அவன்தான் அறிகிறான். தெரியும் என்று நினைக்கிறவனுக்குத் தெரியாது; தெரியாது என்ற நிலையில் இருக்கிறவனுக்கே தெரிந்தது". என்கிறது. "கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்" என்று சொல்வதும் இதைத்தான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

க்ளோவினால் நடக்க முடியாமலே போய் விட்டால் என்ன ஆவது? ஓட முடியாமல், டான்ஸ் ஆட முடியாமல், கல்யாணம் செய்து கொண்டு குழந்தை குட்டி பெற்றுக் கொள்ள முடியாமல் போனால்...? என்னென்னவோ எண்ணித் தவித்தேன். ஏன், அவளுக்குச் சக்கர நாற்காலி வாங்கினால் அதை வீட்டில் எங்கே வைப்பது என்று கூட இரண்டு நிமிடம் முன்பு என் எண்ணம் ஓடியது. அந்த மாதிரியெல் லாம் கன்னாபின்னாவென்று நீ கற்பனை பண்ணாதே. உண்மையான நிலைமை என்ன எனறே நமக்குத் தெரியாது. அது வருகிற போது வரட்டும்," என்றான் தாரென்ஸன்.

அவனுடைய யதார்த்தமான பேச்சைப் புரிந்து கொண்டு தலையசைத்தாள் பேஜ். இருந்தாலும், அவள் மனம் அலைமோதிக் கொண்டுதான் இருந்தது. ஆலிஸனுக்கு

இருக்கிறது. அவனுடைய அப்பா அம்மாவைக் கூடப் பார்த்திருப்பதாக ஞாபகம்... இவர்களுக்கு எப்படி அவனுடன் பழக்கம்?"

"கடவுளுக்குத்தான் தெரியும். ஸ்கூல்... விளையாட்டு... டென்னிஸ் கிளப்... நீச்சல் குளம்... எப்படிச் சிநேகிதமோ, எனக்குத் தெரியாது. வளர்கிற பசங்கள். யார் என்ன பண்ணுகிறார்கள் என்று கண்டுபிடிப்பது கஷ்டம். எனக்கு இதிலெல்லாம் பழக்கமே இல்லை. என் பெரிய பையன் நிக்குடன் நான் இதெல் லாம் பேசியது கிடையாது...."

'இரண்டாவது பையன் பிஜான் மூளை வளர்ச்சியற்ற சிறுவன். ஆகவே அவனுடன் பேசிப் பழகவும் இவருக்கு வாய்ப்பு இல்லை' என்று நினைத்துக் கொண்டாள் பேஜ்.

"ஆனால் பெண்கள் விஷயம் அப்படி யில்லை. அவர்களுடைய துறுதுறுப்பை



''கமலா, நம்ம மாப்பிள்ளை வானிலை ஆராய்ச்சி நிலையத்தில் வேலை பார்க்கிறதை அடிக்கடி ஞாபகப்படுத்திடறாரு.''

''எதை வச்சு சொல்றீங்க?''

''இந்த வாரம் ஊருக்கு வாரீங்களான்னு போன் மூலம் கேட்டேன். 'குடும்பத்துடனோ, நானும் என் மனைவியுமோ அல்லது நான் மட்டுமோ வரக் கூடும்னு' சொன்னாரு!''

— பொள்ளாச்சி கே. சித்ரா

வைத்தே எதையும் கண்டுபிடித்து விடலாம். உன் பெண்ணும் என் பெண்ணும் அப்படித்தான். இல்லையா?'' என்றான் தாரென்ஸன்.

பேஜின் முகத்தில் புன்சிரிப்பை வரவழைக்க வேண்டும் என்பது அவன் எண்ணம். ஆனால் அவள் புன்னகை செய்யவில்லை. அவளால் வேறு எதிலும் கவனம் செலுத்த முடியவில்லை. ஆலிஸன் பெரிய பெண்ணாக வளருவாளா? காதலன் என்று ஒருவன் வருவானா? கல்யாணம் என்று ஒன்று நடக்குமா?

''பார்த்தாயா. பார்த்தாயா? மறுபடியும் கலவரப்பட ஆரம்பித்து விட்டாய்!'' என்று அவளை அதட்டினான் தாரென்ஸன்.

''எப்படி என்னால் கலவரப்படாமல் இருக்க முடியும்?'' என்று விம்மியபடி கைக்குட்டையால் மூக்கை அழுந்தத் துடைத்துக் கொண்டவள், சட்டென அவனை நிமிர்ந்துபார்த்து, ''அவர்கள் குடித்திருந்தார்களா?'' என்று கேட்டாள். ஒரு பதினேழு வயதுப் பையன் காரை ஓட்டி விபத்து ஏற்படுத்தினான் என்றால் முதலில் தோன்றுவது அந்தச் சந்தேகம்தான்.

''தெரியவில்லை,'' என்றான் அவன். ''எல்லாரிடமும் ரத்தம் எடுத்துப் பரிசோதனை செய்து கொண்டிருக்கிறார்கள் என்று நர்ஸ் சொன்னாள். குடித்திருந்தார்களா, குடித்திருந்தால் எந்த அளவுக்கு என்று அதில் தெரிந்து விடுமாம்...'' என்று அவன் சொல்லிக் கொண்டிருந்தபோது, ஓர் இளைஞன் அவர்கள் முன்னே வந்து நின்றான்.

முதலில் அவனை டாக்டர் என்று நினைத்தாள் பேஜ். பிறகே அவன் சட்டையில் இருந்த அடையாள அட்டையில் அவனுடைய பெயர், போட்டோ, அவன் பணியாற்றும் டீவி நிறுவனத்தின் பெயர் முதலியன இருப்பதைக் கண்டாள்.

''நீங்கள் மிஸஸ் பிராட்தானே? ஆலிஸனின் அம்மா? ஆலிஸன் எப்படி இருக்கிறாள்? அந்தப் பையன் பிலிப்பை அவளுக்கு நன்றாகத் தெரியுமா? எப்படிப்பட்ட பையன் அவன்? பெண்கள் பின்னால் சுற்றுகிறவனா?'' என்று கடகடவென்று கேள்விகள் போடத் தொடங்கியதும் தாரென்ஸன் அவனுக்கும் பேஜுக்கும் குறுக்கே வந்து நின்று, ''இதெல்லாம் கேட்க இது சமயமில்லை,'' என்றான்.

அதைப் பொருட்படுத்தாமல் அந்த இளைஞன், ''அந்த மற்றொரு காரை ஓட்டி வந்தவள் செனேட்டர் ஹட்சின்ஸின் மனைவி என்பது உங்களுக்குத் தெரியுமா?லாரா. துளி கூடக் காயம் இல்லாமல் அவள் தப்பி விட்டாள். அதை நினைத்தால் உங்களுக்குக் கோபம் வருகிறது. இல்லையா?'' என்று கேட்டான்.

பேஜுக்கு எதுவும் விளங்கவில்லை. என்ன நோக்கம் இவனுக்கு? மற்றக் காரை ஓட்டி வந்தவள் எக்கேடு கெட்டால் எனக்கென்ன? எதற்காக இதெல்லாம் கேட்கிறான்? என்னைப் பைத்தியமாக்கப் பார்க்கிறானா?

''பிலிப்பும் மற்றவர்களும் குடித்திருப்பார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா மிஸஸ் பிராட்? ரொம்ப நாளாகவே அந்தப் பையன் பிலிப்புக்கும் உங்கள் பெண் ஆலிஸனுக்கும் பழக்கம் உண்டா?''

சரேலென்று ஏற்பட்ட தைரியத்துடன் எழுந்து நின்றாள் பேஜ். ''உன் மனசில் என்ன நினைப்பு? அங்கே என் பெண் செத்துக் கொண்டிருக்கிறாள். இங்கே நீ என் பெண்ணுக்கும் அந்தப் பையனுக்கும் எத்தனை நாள் பழக்கம், மறு காரை ஓட்டி வந்தது யார் தெரியுமா என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கிறாய்!'' என்னும் போது அழுகை வெடித்துக் கொண்டு வந்தது.

தாரென்ஸனுக்குக் கோபம் வந்தது. ''மரியாதையாய்ப் போய் விடு,'' என்றான். ''இதெல்லாம் கேட்க உனக்கு எந்த உரிமையும் இல்லை!''

''ஏன் இல்லை? எனக்கும் உரிமை இருக்கிறது. ஜனங்களுக்கும் உரிமை இருக்கிறது. இந்தப் பிள்ளைகள் குடித்திருக்கிறார்களா இல்லையா என்று பொதுமக்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா? செனேட்டரின் மனைவி குடித்திருந்தாளா இல்லையா என்று தெரிய வேண்டாமா? செனேட்டர் மனைவியிடம் ரத்தப் பரிசோதனை செய்தார்களா இல்லையா என்று தெரிய வேண்டாமா? போலீசில் அதைப் பற்றி நீங்கள் கேட்டீர்களா?'' என்றான் அந்த டீவி இளைஞன்.

(தொடரும்)

சிகிச்சையை வெற்றிகரமாக முடித்த கேஸ்கள் பல உண்டு. என்றாலும் மிகச் சாதாரணமாக மக்கள் கருதக்கூடிய ஒரு விஷயம் எவ்வளவு ஆபத்தானதாக முடியக்கூடும் என்பதை வலியுறுத்துவதற்காக வேறு மாதிரி 'முடிந்த' ஒரு கேஸை இங்கு எடுத்துச் சொல்கிறேன்.

சிகிச்சைக்காக என்னிடம் வந்த ஓர் இளைஞனுக்கு சுமார் இருபத்திரண்டு வயது இருக்கும். என்ஜினியரிங் கல்லூரியில் இரண்டாம் ஆண்டு படித்துக் கொண்டிருந்தான். மிகவும் புத்திசாலி.

அவனை அழைத்து வந்தவர் அவனது அப்பா. ஓய்வுபெற்ற ரயில்வே ஊழியர். ரொம்ப சிம்பிளான ஒரு விஷயத்தைச் சொல்வது போன்ற தொனியில், "டாக்டர், ரெண்டு மூணு மாசமாகவே இவன் சரியாகவே சாப்பிடுவதில்லை. பசியில்லேன்னு சொல்றான். ஏதாவது வயிற்றுக்கோளாறான்னு பாருங்களேன்" என்றார். தன் மகனுக்கு ஏதோ காதல் விவகாரத்தில் தோல்வி ஏற்பட்டு இருக்க வேண்டும் என்றும், அதனால் ஏற்பட்ட சோகத்தில்தான் அவனுக்கு உணவு பிடிக்கவில்லை என்றும் அவருக்கு ஓர் அனுமானம். இதையும் என்னிடம் தனிமையில் கூறினார் அவர்.

அந்த இளைஞனை விசாரித்தபோது, பசியின்மையைத் தவிர வேறு எந்தக் கோளாறும் தனக்கு இல்லை என்று உறுதியாகக் கூறினான். வெளிப்புற சோதனையில் எந்தக் குறைபாடும் தெரியவில்லை. மார்பு மற்றும் வயிற்றுப் பகுதியை எக்ஸ்ரே எடுத்துப் பார்த்ததிலும்கூட எந்த க்ளூவும் கிடைக்கவில்லை. சிறுநீர்ப் பரிசோதனையில் ரிசல்ட் நார்மலாக இருந்தது.

அல்ட்ரா சவுண்ட் ஸ்கேன் செய்து பார்த்தேன். குடல், கல்லீரல் போன்ற பகுதிகளில் கட்டியோ வேறு ஏதாவது வியாதிகளோ இருந்தால் இதில் தெரிந்துவிடும். ஆனால் இந்தப் பரிசோதனையிலும் அந்த இளைஞன் முழுவதுமாகத் தேறிவிட்டான்.

ரத்தப் பரிசோதனையில்தான் கவலையளிக்கக்கூடிய முதல் தடயம் தென்பட்டது. "எரித்ரோஸைட் ஸெடிமென்டேஷன்" என்று ரத்தப் பரிசோதனையில் ஒரு வகை. மெல்லிய குழாயில் ரத்தத்தை ஊற்றிப் பரிசோதிப்பார்கள். மணிக்கு இருபது மில்லி மீட்டர் அளவுக்கு ரத்தம் கீழ்ப்பகுதியில் திடப்பொருள் போலப் படர்ந்திருந்தால், அது நார்மல். ஆனால் அந்த இளைஞனின் ரத்தமோ அறுபது மில்லி மீட்டர் அளவில் இதைக் காண்பித்தது!

"என்டோஸ்கோபி" முறையில் அவனது இரைப்பையை ஆராய்ந்தபோது சிக்கல் பிடிபட்டது. பொதுவாக வயிறு என்று குறிப்பிடப்படும் இரைப்பையை மூன்று பாகங்களாகப் பிரிக்கலாம். இவற்றில் அடிப்பாகமான

## மருத்துவ(ர்) மகிமை

## டாக்டர் பாலசுப்ரமணியம்



• என்டோஸ்கோபி மூலம் பரிசோதனை செய்கிறார் டாக்டர் பாலசுப்ரமணியம்

# பசிக்கவில்லை...? டாக்டரிடம் ஓடுங்கள்!

'ஆண்ட்ரம்' என்ற பகுதியில் பெரிய கட்டி ஒன்று இருந்தது தெரிந்தது. இதன் காரணமாகத்தான் பசி உணர்வே இல்லாமல் போயிருந்தது அந்த இளைஞனுக்கு. கட்டியில் உள்ள தசைப் பகுதியை சிறிது எடுத்து (பயாப்ஸி) சோதனை செய்ததில் அவனுக்கு வயிற்றில் புற்றுநோய் இருந்ததைக் கண்டுபிடித்தேன்!

ஆக, சிகிச்சைக்கு அழைத்து வரப்பட்ட நான்காம் நாளில், அவனது பசியின்மைக்கான சரியான காரணம் புலப்பட்டு விட்டது. உண்மை தெரிந்ததும் அந்த இளைஞனின் அப்பா ஓவென்று கதறி விட்டார்!

மற்றப் பகுதிகளில் உண்டாகும் புற்று நோயை விட இரைப்பைப் புற்றுநோயில் ஒரு தனி சிக்கல் உண்டு. மருந்துகள் மற்றும் ரேடியம் கதிர் சிகிச்சை இவற்றால் மற்ற வகை புற்று நோய்களை குணமாக்கவோ, கட்டுப்பாட்டில் வைக்கவோ முடியும். ஆனால் வயிற்றுப் புற்று நோய் இந்த வகை சிகிச்சைகளுக்கெல்லாம் அசைந்து கொடுப்பதில்லை. நிறைய எதிர்ப்புச் சக்தி கொண்டதாக விளங்குகிறது இது. எனவே அறுவைச் சிகிச்சைதான் இதற்கு ஒரே வழி என்ற மருத்துவ உண்மைகளை எடுத்துக் கூறிய போது மேலும் இடிந்து போய் விட்டார் அவர்.

அறுவைச் சிகிச்சை செய்ய சம்மதித்த அவர், தனக்கு வந்திருக்கும் வியாதி என்ன என்பது பற்றி மகன் அறியக்கூடாது என்று கூறி, இந்த விஷயத்தில் என் ஒத்துழைப்பையும் கேட்டார்.

தனக்கு வயிற்றில் அல்சர் என்றும், அதற்கான அறுவைச் சிகிச்சைதான் தனக்கு நடக்கவிருக்கிறது; அதற்குப் பிறகு வழக்கமான கல்லூரி வாழ்வில் உற்சாகமாக ஈடுபடலாம், என்ற நம்பிக்கையோடு ஆபரேஷன் தியேட்டருக்குள் நுழைந்தான் அந்த இளைஞன். கட்டி நீக்கப்பட்டது. ஆனாலும் பிரச்னை தீர்ந்துவிடவில்லை என்பது எனக்குத் தெரியும். புற்று நோய் மருத்துவமனையில் கையாண்ட கேஸ்களை வைத்துச் சொல்வதானால், சற்றே முற்றிய நிலையில் இப்படிப்பட்ட புற்றுநோயோடு வருபவர்கள், அறுவைச் சிகிச்சைக்குப் பிறகும் அதிகபட்சம் ஐந்து வருடங்கள்தான் உயிர் வாழ முடியும். அந்த அளவுக்குக் கூட ஐந்து சதவிகித நோயாளிகள்தான் பிழைத்திருப்பார்கள்.

அறுவைச் சிகிச்சை நடந்த ஒரு மாதம் கழித்து இளைஞனிடம் அவன் உடல் நிலையைப் பற்றிய உண்மையை மென்மையான விதத்தில் சொன்னேன். தினசரி கடும் நோயாளிகளை சந்திப்பதே தொழிலாகி விட்டது என்றாலும், வாழ்க்கையில் பெரிய லட்சியங்களை எல்லாம் கொண்டிருந்த அந்த கெட்டிக்கார மாணவனிடம் இதைச் சொல்லும்போது மனம் மிகவும் வேதனைப்பட்டது. நம்பமுடியாத அதிர்ச்சியோடு, வெளுத்துப் போன முகத்தோடு வெளியேறினான் அவன்.

முதியவர்கள் விஷயம் வேறு. ஆனால் இளம் வயதினரோ, குழந்தைகளோ தொடர்ந்து மூன்று வாரங்கள் பசியேயில்லை என்று சாப்பிடுவதை திடீரென்று ஒரேயடியாகக் குறைத்துக் கொண்டால் டாக்டரை அணுகுவது அவசியம். வேறு எந்தக் குறிப்பிட்ட காரணமுமே இல்லாமல் இந்த நிலை என்றால் அது உடனடியாகப் பரிசோதித்துப் பார்க்க வேண்டிய ஒரு விஷயம். ஜப்பானில் இது ரொம்ப அதிகம்! நம் நாட்டிலேயே கூட வயிற்றுப் புற்றுநோயால் பாதிக்கப்படும் ஆண்களின் எண்ணிக்கை அதிகம்தான். ஆரம்ப நிலையிலேயே கண்டுபிடித்தால் சிகிச் சைக்குப் பலனுண்டு.

அந்த இளைஞன் என்னவானான் என்கிறீர்களா? அறுவைச் சிகிச்சை முடிந்த சில மாதங்களிலேயே புற்றுநோய்க் கிருமிகள் பலம் பெற்றுப் பரவி, ஈரல் பகுதியையெல்லாம் பாதிக்கத் தொடங்கிவிட்டது. தொடர்ந்து ஒரு வருடத்தில் அவன் இறந்து போனான். மருத்துவ ஆராய்ச்சிகள் மேலும் வேகமாக நடந்து எல்லா நோய்களுக்குமே விரைவில் மருந்துகள் கண்டு பிடிக்கப்பட வேண்டும் என்று ஆண்டவனை வேண்டிக் கொள்வதைத் தவிர வேறு வழி தோன்றவில்லை.

சந்திப்பு : **அருண்சரண்யா**

படம் : **ஸ்ரீஹரி**

# அடுத்த தேர்தல் வந்தால் அ.தி.மு.க. ஆட்சியாமே?

● **வாசுதேவன், மும்பை - 86**

? பெட்ரோல் சம்பந்தப்பட்ட பொருட்கள் விலை உயர்வு தவிர்க்க முடியாதது அல்லவா?

! தவிர்க்க முடியாதபோது தள்ளிப் போடுவதில் அர்த்தமென்ன இருக்கிறது!

● **ஏ.எஸ். இராமசாமி, நீலாம்பூர் அஞ்சல்.**

? 'மக்களுக்கு வரவர அரசியல்வாதிகள் மீது நம்பிக்கை குறைந்து விட்டது...' என்று மூப்பனார் கூறியிருப்பது எதைக் காட்டுகிறது? அவர் மீதும் மக்கள் நம்பிக்கை இழந்து வருகிறார்களா?

! கலவரப்பகுதிகளில் அவரை மக்கள் வரவேற்று, அவரிடம் கண்ணீர் கலந்து தங்கள் கஷ்டங்களை எடுத்துச் சொன்ன பாங்கைப் பார்த்தால் அவர் ஒருவர் மீதுதான் அவர்கள் நம்பிக்கை வைத்திருப்பதாகத் தோன்றுகிறது!

● **ஆர். அப்துல் சலாம், திருச்சி - 20.**

? சென்னை கிரிக்கெட் பந்தயம் (சுதந்தர கோப்பை) பற்றி ஒரே ஒரு எழுத்தில் சொல்ல முடியுமா...?

! சே!

● **வே. முருகேசன், சென்னை - 4.**

? 'இப்போதைய ஆட்ட நாயகன் திருநாவுக்கரசு' என்று முதல்வர் கூறுவது பற்றி...?

! நாலாம் தேதி... தப்பு தப்பு... மூன்றாம் தேதியே தெரிந்து விடாதா!

● **எஸ்.எஸ். பூங்கதிர், திருவெண்ணெய்நல்லூர்.**

? சினிமாவில் சிறந்த நடிகரைத் தேர்வு செய்து பரிசு அளிப்பது போல் அரசியலிலும் சிறந்த நடிகரைத் தேர்வு செய்து பரிசு அளித்தால் என்ன?

! நடுவர் குழுவின் வேலை ரொம்ப கஷ்டமாகி விடும் போங்க!

● **தேவந்தி துரைராஜ், ஆதியூர் அஞ்சல்.**

? ஜாதிக் கலவரம் தொற்று வியாதியாகப் பரவாமலிருக்க என்ன செய்ய வேண்டும்?

! சமத்துவம், மனிதாபிமானம், இறையுணர்வு, சுயசார்பு, தன்னம்பிக்கை ஆகியவற்றை உள்ளடக்கிய சிறந்த கல்வி என்கிற நோய்த்தடுப்பூசி போடப்பட வேண்டும். அடுத்து வாழ்க்கைத்தர உயர்வு என்ற தடுப்பூசியும் போட்டு விட்டால் அப்புறம் நோய் அண்டாது.

● **பி.எம். வள்ளி, பாஸ்டின் நகர்.**

? 'தற்போது ஜெயலலிதாவிடம் அரசியல் முதிர்ச்சி உள்ளது. அடுத்து தேர்தல் வந்தால் அ.தி.மு.க ஆட்சிதான் வரும்' என வாழப்பாடி கூறுகிறாரே...?

! தமிழக இ. காங்கிரஸ் தலைமைப் பதவியை விரும்புகிறவர் வேறு விதமாக இங்கே சொல்ல முடியுமா என்ன?

● **கே.வி. சூர்யா, நல்லத்துக்குடி.**

? நட்பு - காதல் - இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

! தூய்மையான நட்பில் காதல் நிச்சயம் கலப்படமாகாது... ஆனால், உண்மையான காதலில் வலுவான நட்பு கட்டாயம் கலந்திருக்கும்.

● வடவள்ளி ராமசுப்ரமணியன். ❑



• ஆ... நாயகன்?

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:
ஆர். ராமசுப்ரமணியன்,
'ராஜம்மாள் இல்லம்' 20, வி.என்.ஆர். நகர்,
வடவள்ளி அஞ்சல், கோவை - 641 041.

? குஜ்ரால் மாதிரி நல்லவராக இருப்பதைவிட, தம் கட்சிக்காரர்களுக்கும் சேர்த்து அல்வா கொடுத்த தேவே கௌடா போல வல்லவராயிருப்பது மேல் அல்லவா?

! பல்வேறு ஊழல் குற்றச்சாட்டுகளில் சி.பி.ஐயின் கண்டுபிடிப்புகளை ஆராய்ந்து, வழக்குத் தொடுக்க அனுமதி வழங்கலாமா? வேண்டாமா... என்று தீர்மானிப்பதற்கு, ஏராளமான அரசுத் துறைச் செயலர்களைக் கொண்ட கமிட்டியை பிரதமர் நியமித்துள்ளார். இதைப் பார்க்க, அவரும் மக்களுக்கு அல்வா கொடுப்பதில் வல்லவர் என்றே முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது.



• அல்வா!

● **பத்ம சிவாஜி, தீடாமங்கலம்.**

? ஹெச்.வி. ஹண்டே எங்கே காணோம்?

! கண்ணைத் திறந்து பாருங்க. திருநாவுக்கரசு பக்கத்துல...!

● **கே. பெருமாள், கூனியூர்.**

? திருநாவுக்கரசு நீக்கம் குறித்துப் பேசுகையில், 'எங்கள் புரட்சித் தலைவி எது செய்தாலும் நல்லதுக்கே செய்வார்' என்று காளி

முத்து கூறியுள்ளாரே?

! இம்மாதிரி கண்மூடித்தனமான ஆதரவைத் தலைமைக்குத் தரும் தொண்டர்களும் இத் தகைய 'ஆமாம் சாமி'களையே எதிர்பார்க்கும் தலைமையும் இருக்கிறவரை எந்தக் கட்சியும் உருப்படாது. பெறக்கூடிய வெற்றிகளும் தற்காலிக மானவையாகவே இருக்கும்.

• ஆசை பேச்சு!

காணாலும் கிழியாது; அழுக்காகாது. (சோப்பு போட்டு அலம்பி விடலாம்) நீடித்த உழைப்பு, போலி நோட்டுகள் அச்சிட முடியாது... இப்படிப் பல ஆதாயங்கள் இருக்கும்போது, நமது அரசு இந்த விஞ்ஞான முன்னேற்றத்தை உடனடியாகப் பயன்படுத்த முற்பட வேண்டும்.

● எம். ராஜேந்திரன், லால்குடி.

? தமிழ் நாட்டில்

• யார்....

• ....தேவலாம்?

• ஒரே நம்பிக்கை!

● ஜெ.எஸ்.ஜெ. ராயன்ஸ், நல்லத்துக்குடி.

? தனி விமானத்தைப் பயன்படுத்தியதற்காக கருணாநிதி, என்.வி.என் சோமுவைக் கண்டித்திருக்கிறாரே?

! தி.மு.க.வினர் இது போன்றதொரு சூழலையே உருவாக்காமல் கவனமாக இருப்பார்கள் என்று நம்பினோம். அந்த நம்பிக்கை இப்படி ஆனதில் வருத்தம்தான்.

● எம். ரேவதி, மன்னார்குடி.

? உங்களை வியப்படைய வைத்த சமீபத்திய விஷயம்?

! ஆஸ்திரேலிய அரசு பிளாஸ்டிக் கரன்ஸி நோட்டுக்களை அறிமுகப்படுத்தியிருக்கிறது என்கிற செய்தி. தயாரிப்புச் செலவு இருமடங்

கொலை, கொள்ளை, சாலை விபத்து... அதிகரித்து வருகிறதே!

! கவலைக்குரிய நிலைதான். அதுவும் சமீபத்தில், இரவு பத்து மணிக்குப் புறநகர் மின் ரயிலில் நடந்த கொள்ளையைப் பற்றி அறிந்த போது சராசரி மக்களின் பாதுகாப்புக் குறித்து பெரிய கேள்விக்குறியே எழுந்தது. ஒரு ஸ்டேஷனில் ஏறிய லுங்கி வியாபாரியை ஒரு திருட்டுக் கும்பல் அடித்து நொறுக்கி பணத்தைப் பிடுங்கிக் கொண்டு மறு ஸ்டேஷனில் இறங்கி மாயமாய் மறைந்து விட்டது! சக பயணிகள் கத்தி காண்பித்து மிரட்டப்பட்டிருக்கிறார்கள். கும்பலில் அத்தனை பேரும் 20 - 25 வயது இளைஞர்கள்!

இரண்டு பார்ட்னர்களுக்கு இடையே எவ்வளவுதான் ஆழமான நட்பு இருந்தாலும், ஏதாவதொரு பிரச்னை, விரிசலை உருவாக்கி விடக்கூடும். க்வான்டா என்ஜினீயரிங் அண்ட் புரோமோட்டர்ஸ் நிறுவனத்தை நடத்திவரும் திருவேங்கடமும் முத்துக்கிருஷ்ணனும் விதி விலக்கு. தொழிலுக்கு நடுவே தம் நட்பைப் பேணுவதை ஒரு கலையாகக் கொண்டிருக்கிறார்கள்.

தொழிலில் மட்டுமல்லாமல், தனிப்பட்ட முறையிலும் இவர்களின் சிந்தனை ஒரே அலை வரிசையில் அமைந்திருப்பது ஆச்சரியமான விஷயம். இருவரிடமும் பேசிக் கொண்டிருந்தபோது, ஒருவருக்குத் தொலைபேசி அழைப்போ அல்லது பார்வையாளரோ வந்த சமயத்திலெல்லாம், இன்னொருவர், நூல் பிசகாமல் அவர் விட்ட இடத்திலிருந்து அதே திசையில் பேச்சைத் தொடர்கிறார். பேட்டியின்போது, ஒருவர் தக்க தருணத்தில் குறுக்கிட்டுப் பேசினால் மற்றவர் மவுனம் காத்து உரையாடலை உன்னிப்பாய்க் கவனிக்கிறார்.

ஒருவருக்கு ஒருவர் மதிப்புக் கொடுக்கும் இந்த அடிப்படைப் பண்புதான் இவர்கள் உறவின் வலுவான அடித்தளம்.

புகுமுக (பியுசி) வகுப்பிலிருந்து பொறியியல் கல்லூரி முடிக்கும் வரை வகுப்புத் தோழர்களாக இருந்த இவர்கள், வெவ்வேறு இடங்களில் எம்.ஈ. முடித்து, வாழ்க்கையில் முன்னேற்றம் நாடி சென்னை வந்தவர்கள்.

கட்டுமான ஆலோசகராகவும், கட்டடக் கான்ட்ராக்டராகவும், பில்டராகவும் இருவரும் தனித்தனியாக ஆரம்பத்தில் பிசினஸ் செய்து, பிறகு கூட்டுச் சேர்ந்திருக்கிறார்கள்.

"உரசல் இல்லாமல் இவ்வளவு அன்னியோன்னியமாக எப்படி இருக்க முடிகிறது?"

## சவால் பள்ளத்தாக்கு

"ஈகோ வராமல் பார்த்துக் கொள்வதால் நட்புறவில் எந்தப் பிரச்னையும் ஏற்படுவதில்லை. நாங்கள் இருவரும் சமமான அளவு திறமையானவர்கள் என்பது எங்கள் இருவருக்கும் தெரியும். ஒரு இடம் வாங்குவது பற்றி யாராவது ஒருவர் முடிவு செய்து, அதனால் நஷ்டம் வந்தாலும் கூட, இன்னொருவர் அது பற்றிக் குறைபட்டுக் கொள்வதில்லை" என்கிறார் முத்துக்கிருஷ்ணன்.

பிசினஸ் பற்றிப் பேசிக்கொள்வதை விட அதிக நேரம் பொதுவான விஷயங்கள் பற்றி கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வதாகச் சொல்கிறார்கள்.

இந்தப் பேச்சு வார்த்தை இவர்களை பக்குவப்படுத்தியிருப்பதுடன், பிசினஸ் ரீதியாகவும் தனிப்பட்ட முறையிலும் தெளிவாக யோசிப்பதற்கும், வளர்ச்சித் திசையில் பயணிப்பதற்கும் கைகொடுக்கிறது.

'சொல்வது ஒன்று; செய்வது வேறு' என்ற ஃபார்முலாதான் இந்த இரட்டையருக்கு அதிக வாடிக்கையாளர்களைப் பெற்றுத் தருகிறதாம்.

"ஒப்பந்தத்தில் என்ன செய்வதாக ஒப்புக் கொண்டோமோ அதைவிடக் கூடுதலான வசதிகளுடன் வீடு கட்டித் தருவது எங்கள் வழக்கமாகி விட்டது! 15



வருடங்களுக்குப் பிறகு கூட சில பராமரிப்பு வேலைகளை இலவசமாகச் செய்து தருகிறோம். வாடிக்கையாளர்களுடன் ஒரு 'பர்சனல் டச்' இருக்க வேண்டும் என்பதில் முக்கிய கவனம் செலுத்துகிறோம்" என்றார்கள்.

பொதுவாக, பணம்தான் பிளவை உருவாக்கும். ஆனால், இவர்கள் இருவருமே

பணம் தங்கள் மீது ஆதிக்கம் செலுத்தி விடாதபடி பார்த்துக் கொள்கிறார்கள்.

''ஏராளமான லாபம் சம்பாதிக்க வேண்டும் என்று ஆசைப்படுவதில்லை. அதிகமாகப் பணம் சம்பாதிப்பதே பாவம் என்று கூடத் தோன்றுகிறது'' என்கிறார் திருவேங்கடம்.

வசதி பெருகி மேலே போகப் போக மற்றவர்களிடமிருந்து விலகி தனிமைப்படுத்தப்படுவது பற்றி இருவருமே கவலையோடு பேசுகிறார்கள்.

வசதி பெருகியதால் தங்களைச் சந்திப்பதைத் தவிர்த்த நண்பர்களை வரவழைத்து தோழமையைத் தொடர்வதிலும் இந்த இரட்டையர் ஆர்வம் காட்டுகிறார்கள்.

''முன்னேற்றம் என்பது, தான் மட்டுமே அடைவது அல்ல; சுற்றியிருப்பவர்களையும் முன்னேறச் செய்வதுதான்!'' என்று கூறும் இவர்கள்,வெவ்வேறு இடங்களில் வேலை பார்த்துக் கொண்டிருந்த சுமார் பத்து நண்பர்களுக்கு, தொழில் ஆலோசனை கூறி, ஊக்கப்படுத்தி அவர்களையும் பில்டர்களாக உயர்த்தியிருப்பது பற்றிப் பெருமிதத்துடன் குறிப்பிடுகிறார்கள்.

# வெற்றியின் ரகசியம்:
# ''சொல்வது ஒன்று; செய்வது வேறு!''



''அம்பானி போன்று பெரிய தொழிலதிபராக உயர வேண்டும் என்றெல்லாம் நினைப்பதில்லை. நேற்றுச் செய்ததைவிட இன்றைக்கு இன்னமும் எவ்வளவு அதிகமான வசதிகளை வாடிக்கையாளர்களுக்குச் செய்து தர முடியும் என்பது பற்றித்தான் சிந்திக்கிறோம்.''

இந்த அணுகுமுறைதான் வாடிக்கையாளர்களுடன் இவர்களது உறவை வலுப்படுத்தி வருகிறது. இதுவரை எந்த வழக்கும் வராதபடி பார்த்துக் கொண்டிருக்கிறது!

சென்னை அருகே, பழைய மகாபலிபுரம் சாலையில், கேளம்பாக்கத்தில் முற்றிலும் புதுமையான முறையில் முதியோர் இல்லம் ஒன்றை அமைக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். தனிமைத் துயரில் மூழ்கிவிடாமல், முதிய தலைமுறை சந்தோஷமாக இருப்பதற்கான பல்வேறு வழிவகைகள் பற்றிப் பரிசீலித்து வருகிறார்கள்.

ஆரம்பக் கட்டத்திலும் சரி, இப்போதும் சரி, இப்படியெல்லாம் செயல்பட்டால்தான் பிளவு ஏற்படாமல் ஒன்றுபட்டு பிசினஸைப் பெருக்க முடியும் என்றெல்லாம் திட்டமிட்டுக் கொள்வதில்லையாம். ''எல்லாமே இயல்பாக நடக்கிறது'' என்று சர்வசாதாரணமாகச் சொல்கிறார்கள்.

**— மு. சிவலிங்கம்**

(ஆதித் கம்யூனிகேஷன்ஸ் உதவியுடன்)

# வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.

''வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். உயிருக்கு மேலாக தேசித்து பொருளை சம்பாதிக்கும் நாம், அதன் ஒரு பகுதியையாவது வேதாத்யயனம் செய்யும் குழந்தைகளை ரக்ஷிக்க அர்ப்பணிக்க வேண்டும்'' என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 455 ஆண்டுகளாக நடந்து வரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 130 மாணவர்களுக்கு 15 வேத சாஸ்திர அத்யாபகர்கள் வேத சாஸ்திர வித்தைகளை புராதனமான குருகுல முறைப்படி போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்கு கொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அநுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம்.

| வ எண். | திட்ட விவரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை துகை (Adhoc donation) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|---|
| 1. | ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி துகை) | Rs. 500 | Rs. 5,000 |
| 2. | ஸுமங்கலி ப்றார்தன : ஸுமங்கலி ப்றார்தனைக்கு ரூ. 1000/- வித்யார்த்தி ஸமாராதனைக்கு ரூ. 500/- | Rs. 1,500 | Rs. 15,000 |
| 3. | அமாவாஸ்யை (அ) பௌர்ணமி (அ) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs. 15,000 |
| 4. | பௌர்ணமி ஆயுஷ்ய, நவக்ரஹ நக்ஷத்ர ஹோமம் | Rs. 1,000 | Rs. 10,000 |
| 5. | ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு மாத செலவு ரூ. 1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakhs |

Cross செய்யப்பட்ட D.D ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்புக் கோருகிறோம்.
MAY VEDA MATHA BLESS US ALL

# குழந்தையின் மடியில் பேராசிரியர்!

**டீச்சராகப் பணிபுரியும் ஒருவர் மாணவியாக மாற வேண்டிய சூழல் ஏற்பட்டால் எப்படியிருக்கும்?**

“சுவாரஸ்யமாகவும் இருக்கும். சங்கடமாகவும் இருக்கும்” என்று தொடங்கினார் மகளிர் வைணவக் கல்லூரியில் பொருளாதாரப் பேராசிரியையாகப் பணிபுரியும் ருக்மணி பார்த்தசாரதி.

“திருச்சியில் ஹோலி கிராஸ் கல்லூரியில் படித்தபோது நிறையக் குறும்புகள் செய்ததுண்டு. ஹாஸ்டல் வாசி வேறு. கிண்டலுக்கா பஞ்சம்?

“கல்லூரியில் ஆசிரியையாகச் சேர்ந்த பிறகு அதற்கு ஏற்றபடி மாற்றிக் கொண்டாகி விட்டது. பிறகு ஒரு வருடத்திற்கு விடுப்பு எடுத்துக் கொண்டு எம்.பில் படித்தேன். டீச்சராக இருந்துவிட்டு மாணவியாக மீண்டும் அவதாரம் எடுப்பதே விநோதம். அதிலும் என் கூடப் படித்தவர்களில் பெரும்பாலானவர்கள் ரெகுலர் ஸ்டூடண்ட்ஸ் - அதாவது 'நிஜ மாணவிகள்'

“சில வகுப்புகளின்போது களைப்பாக இருக்கும். 'சீக்கிரம் இந்த வகுப்பு முடிந்து தொலைக்காதா?' என்று தோன்றும். அவ்வப்போது நடத்தப்படும் தேர்வுகளின்போது பதில்களைப் பற்றிய தெளிவான ஐடியா (அனுபவம் காரணமாக) இருந்தாலும், (இளமையைத் தாண்டி விட்ட காரணத்தால்) நினைக்கும் அளவுக்கு வேகமாக எழுத முடியாமல் போனதுண்டு.

“ஆசிரியையாகப் பணியாற்றியதால் பாடங்களை எளிதாகப் புரிந்து கொள்ள முடிந்தது. அதே சமயம் சக மாணவர்கள் விதவிதமாக வகுப்பறையில் கமெண்ட் அடித்தபடி ஜாலியாக இருந்தபோது, நம்மால் அப்படி இருக்க முடியவில்லையே என்று ஏக்கமாக இருந்தது. பாடத்தில் ஏதாவது சந்தேகமென்றால்கூட அதை வகுப்பில் டக்கென்று கேட்டு நிவர்த்தி செய்து கொள்வதில் ஒரு வித சங்கோஜம்.

“எங்கள் ஆசிரியர்களுக்கும் சில சங்கடங்கள் ஏற்பட்டிருக்க வேண்டும். என்னைவிட வயது குறைந்தவர்களெல்லாம் எனக்கு வகுப்புகள் நடத்தியதுண்டு. குறிப்பிட்ட காலகட்டத்தில் அஸைன்மெண்டை முடிக்கவில்லையென்றால் மற்ற மாணவர்களைக் கொஞ்சம் அதிகாரத்தோடு இது பற்றி வற்புறுத்துவார்கள். நானும் ஆசிரிய ஜாதியைச் சேர்ந்தவள் என்பதாலோ என்னவோ,

“எக்ஸ்க்யூஸ் மீ மேடம். குறிப்பிட்ட டைமுக்குள்ளே கொடுத்திட்டா நல்லது” என்பார்கள்.



“கோர்ஸை முடித்துவிட்டு மீண்டும் கல்லூரியில் ஆசிரியை பொறுப்பை ஏற்றுக் கொண்டபோது என்னிடம் சில மாற்றங்கள். தெரிந்ததையெல்லாம் மாணவிகளின் மூளையில் திணித்தே தீருவது என்ற போக்கைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டேன். வேறு யாராவது வரவில்லையென்றால், அவர் வகுப்பையும் சேர்த்து நானே லெக்சர் எடுப்பதுண்டு. இப்போதெல்லாம் தொடர்ந்து இரண்டு வகுப்புகளை ஒரே செட் மாணவிகளுக்கு எடுக்கும்போது நடுவில் போதிய பிரேக் கொடுக்கிறேன்.

“மொத்தத்தில் இளம் வயதில் மாணவி அனுபவம் என்பது பெரியவர்கள் மடியில் குழந்தை உட்கார்ந்து கொண்டு டீவி பார்ப்பது போல. ஆசிரியையாக ஆன பிறகு மாணவியாவதென்பது குழந்தை மடியில் பெரியவர்கள் உட்கார்ந்து கொண்டு டீவி பார்ப்பது போன்றது!”

— ஜி.எஸ்.எஸ்



# பாலம்

●● கச்சியப்ப முனிவர் எழுதிய விநாயக புராணம் கவிதை நூல் தேடுகிறேன். விலைக்குப் பெற்றுக் கொள்கிறேன்.

– வே. தியாகராஜன்,
17, 27-வது தெரு,
தில்லைகங்கா நகர்,
சென்னை – 61.

●● கம்ப்யூட்டர் மூலம் 'மேனேஜ்மெண்ட் ஸாஃப்ட்வேர்' பற்றி புதிய ஆய்வு செய்து பல்கலைக் கழகப் பட்டம் பெற விருப்பம். வழிகாட்டக்கூடிய கம்ப்யூட்டர் துறை பேராசிரியர்களை அணுக வாய்ப்புக் கோருகிறேன்.

– ஏ. ஆர். பாரதி,
3/50, இலுப்பக்குடியார் தெரு,
கோணாபேட்டை – 622 503.

●● அகத்தியர் வர்மக்கலை, அகத்தியர் பன்னீராயிரம், போகர் பன்னீராயிரம் புத்தகங்கள், அல்லது ஏட்டுப் பிரதிகள் தேவை. சன்மானம் உண்டு.

– கே.எம். பாஷா,
தந்தி அலுவலகம்,
பொள்ளாச்சி – 642 001.

– வீ. தனசேகரன்,
மணல்மேட்டுப்பட்டி,
சொக்கலிங்கபுரம் (அ)
மேலூர் (வ) – 625 103.

●● செஸ் போட்டிகளில் கலந்து கொள்ள மிகுந்த விருப்பம். செஸ் அமைப்புகளும் அன்பர்களும் தொடர்பு கொள்க.

– எஸ். ஜோதிவெங்கடேஷ்,
52, அக்ரஹாரம்,
செவ்வாய்பேட்டை, சேலம் – 2.

●● Ploughand the Stars என்ற நூலின் பிரதியை என்னிடமிருந்து இரவல் வாங்கிச் சென்ற அன்பர் திருப்பித் தரவும். வேறு யாராவது அளிக்க முன்வந்தாலும் விலைகொடுத்துப் பெறுகிறேன்.

– ரா. பாலகிருஷ்ணன்,
2/A-3, சரவணன் தெரு,
சென்னை – 600 017.

●● வீட்டிலிருந்தபடியே குறைந்த முதலீட்டில் அனைத்து வகை ஆயத்த ஆடை தயாரித்து ஷோரூம்களுக்கு விநியோகிக்க ஆலோசனை வழங்கப்படும்.

– எம். தர்மராஜ்,
4/223-பி, ஆர்.சி. தெரு,
புதியம்புத்தூர் (அ),
தூத்துக்குடி (வழி) – 628 402.

●● ஸ்ரீநாராயண குரு பற்றிய புத்தகங்கள் தேவை. வெளியிட்டுள்ள பதிப்பகங்கள் பற்றி தகவல் தெரிவித்தால் நன்றி.

– பா. க. மணிவண்ணன்,
202, தென்னம்பாளையம்,
திருப்பூர் – 641 604.

●● புதிய எழுத்தாளர்களின் சிறுகதைகளைத் தொகுத்து புத்தகமாக வெளியிட எண்ணம். தொடர்பு கொள்ளவும்.

– ஆழ்வை. அ.
பட்சிராஜன்,
4, சர்க்குலர் சாலை,
சென்னை – 600 024.

●● Acupunture, Acupressure துறை நூல்கள் விற்பனைக்கு வைத்திருப்போர் அல்லது தகவல் அறிந்தோர் தெரிவிக்கவும்.

– எஸ். வீரகுமார்,
80, வடக்கு பிரதான வீதி,
திருவாரூர் – 610 002.

●● எங்கள் பகுதியில் மகளிர் நல மேம்பாட்டு மையம் தொடங்க ஆவல். ஈடுபாடு உள்ளோர் ஆலோசனைகள் வழங்கவும்.

– ரெ. பழனி,
466, TWAD காலனி, புதுநத்தம் சாலை,
திருமால்புரம், மதுரை – 625 014.

●● அநுராதாரமணன் எழுதிய 'சொல் ஒன்று வேண்டும்', இந்துமதி எழுதிய 'நெருப்பு மலர்', லக்ஷ்மி எழுதிய 'சாதாரண மனிதர்கள்' ஆகிய புத்தகங்கள் தேவை. விலைக்கு அல்லது இரவல் தர விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

– எஸ். ரவி,
14, கனகவல்லிபுரம் தெரு,
திருவள்ளூர் – 602 001.

●● என்னுடன் கும்பகோணம் டவுன் உயர்நிலைப் பள்ளியில் 1957 – 58ல் படித்த தாராசுரம் எம். நடராஜன், குடந்தை ஏ. மகாலிங்கம் ஆகியோருடன் தொடர்பு கொள்ள விருப்பம்.

– ச. வைத்தியநாதன்,
62, எல்லையம்மன் கோயில் தெரு,
சென்னை – 600 033.

●● IIT - JEE 96 நுழைவுத் தேர்வுக்காக நான் பயன்படுத்திய இரு வருஷ Elite Course பாடங்கள் உள்ளன. தேவைப்படுவோர் தொடர்பு கொள்ளவும்.

– பாலகிருஷ்ணன்,
4/105, என்.ஜி.ஜி.ஓ. காலனி,
கோவை – 641 022.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்காது. – ஆர்.)

**கல்கி கன்ஸல்டன்ஸி**

# குட்டி நாடு; பெரிய சாதனை!

சின்னஞ்சிறு நாடாக இருந்தாலும் பொருளாதார வளத்தில் சக்கைப்போடு போட்டிருக்கிறது ஹாங் காங். தனிநபர் வருமானத் தில் முந்தி நிற்கும் நாடு களுள் ஒன்று!

இந்தக் குட்டித் தீவின் அன்னியச் செலாவணி கையிருப்பு எவ்வளவு தெரியுமா? எழுபது பில்லி யன் டாலர்!

ஒரு பில்லியன் என்பது நூறு கோடி!

'யப்பாடியோவ்!' என்கிறீர்களா...? பொறுங் கள்; டபுள் யப்பாடியோவ் சொல்லலாம். எழுபது பில்லியன் இன்னும் 110 பில்லியன் டாலருடன் சேரப் போகிறது! ஜூலை முதல் தேதியன்று நடக்கப்போகிறது இந்த இணைப்பு!

இதுவரை பிரிட்டிஷ் கட்டுப்பாட்டிலிருந்த ஹாங்காங், தாய்த் திருநாடான சைனாவுடன் மீண்டும் இணையப் போகிறது. சைனாவின் அன்னியச் செலாவணி கையிருப்பு 110 பில்லி யன் டாலர்! அந்நாட்டின் GDP - அதாவது, வருடாந்திர மொத்த உற்பத்தி, தவறாமல் பத்து சதவிகிதம் வளர்ந்துகொண்டே வருகிறது.

இவ்வளவு பலமான சைனா கூட தனது நிதி நிலையை சர்வ ஜாக்கிரதையாக கவனித்து வருகிறது. சீன நாணயம் 'fully convertible' ஆக்கப் படவில்லை. ஆனால் நம் நாட்டில் ரூபாய்க்கு அந்த அந்தஸ்து தர முயற்சி நடக்கிறது.

Fully convertible என்றால் என்ன...?

ஏதேனும் அயல்நாட்டுப் பொருள் வாங்க வேண்டுமானால் சுலபமாக ரூபாயை டால ராகவோ வேறு நாணயமாகவோ மாற்றி வாங்க அனுமதிக்காத சில கட்டுப்பாடுகள் உண்டு. ரூபாய் fully convertible ஆனால் அவை முற்றிலும் நீக்கப்பட்டு விடும். நாம் நேராக வங்கிக்குப் போய் மார்க்கெட் மதிப்புப்படி உரிய ரூபாய் கொடுத்து அயல்நாட்டு நாண யத்துக்கான காசோலை அல்லது டிராஃப்ட் பெறலாம். அதைத் தபாலில் அமெரிக் காவுக்கோ, ஜப்பானுக்கோ அனுப்பி புத் தகமோ, மருந்தோ வாங்கலாம்.

இதுதான் fully convertible வசதி. சீனா பொருளாதார பயில்வானாக இருப்பினும் இந்த வசதியைத் தனது குடிமக்களுக்கு இன்ன மும் தரவில்லை.

இந்தியாவில் இந்த வசதியை வர்த்தகத்துக்கு மட்டுமின்றி, அயல்நாட்டில் தொழில் துவங்குவதற்கும் விஸ்தரிக்கலாம் (Capital Account Convertibility) என்று பேச்சு அடிபடுகிறது.

இது மிகவும் அபாயகரமான முடிவாகவே அமையும்!

உலக வங்கியின் நிர்ப்பந்தத்தின் பேரில் தான் வர்த்தக கணக்கில் fully convertibleஐ டாக்டர் மன்மோகன் சிங் அறிவித்தார். இதன் மூலம் அயல்நாடுகளுடனான வர்த்தகம் சுலபமாக்கப்பட்டது. இப்போது Capital Account Convertibleஐயும் அதே நிர்ப்பந்தத்துக்காக அறிவித்தால் 'தாராளமயமாக்கல்' என்பது நமக்கு எதிராகவே செயல்படும்.

நமது நாட்டின் அன்னியச் செலாவணிக் கையிருப்பு 22 பில்லியன் டாலர்கள்தான். இதிலும் பெரும்பகுதி அயல்நாடு வாழ் இந்தி யர்களும் அயல்நாட்டு நிறுவனங்களும் இங்கே முதலீடு செய்துள்ள தொகையாகும். இவற்றை அவர்கள் எந்நேரத்தில் வேண்டுமானாலும் திரும்பப் பெற்றுக் கொண்டு விடலாமே!

நிரந்தரமான அந்நியச் செலாவணி வரு மானம் என்பது ஏற்றுமதி மூலமே கிடைக்கும். ஏற்றுமதி கணிசமாகப் பெருகிவிட்டால் நமது அன்னியக் கடன்கள் குறைந்து, ரூபாயின் மதிப்பும் உயரும். அந்த நிலையில் நாம் வெளி நாடுகளில் முதலீடு செய்வது லாபகரமாக இருக்கும்.

ஆனால் ஏற்றுமதி திருப்திகரமாக இல்லாத நிலையில், ரூபாய் பலவீனமாயிருக்கிற சமயத்தில் Capital account convertibility குறித்து பேச்சு அடிபடுகிறது!

பல பொருளாதார நிபுணர்கள் இதிலுள்ள அபாயம் குறித்து எச்சரித்திருக்கிறார்கள். இந்த விஷயத்தில் அவசரப்பட்டால், வெளிநாட்டு முதலீட்டாளர்கள் நம் நாட்டிலிருந்து முதலீடு களை வாபஸ் பெற்றுவிடுவார்கள் என்று சுட்டிக்காட்டியிருக்கிறார்கள்.

இருபத்தோராம் நூற்றாண்டின் நம்பிக்கை நாடுகள் பட்டியலில் சைனா உண்டு, ஜப்பான் உண்டு, கொரியா இருக்கிறது; இந்தோனேஷி யாவுக்கும் இடமுண்டு. இந்தியா இன்னும் அந்த திக்கு நோக்கித் திரும்பக் கூட இல்லை!

— வி. கோபாலன்

# 22

**கண்மணி போல ரேணுகாதேவி வீற்றிருக்கிறாள். நடக்கப் போகும் விபரீதங்கள் அவளுக்குத் தெரியுமோ, தெரியாதோ?**

தெரு, சுந்தரலோகமாகக் காட்சி அளித்துக் கொண்டிருந்தது. சீரியல் செட், ட்யூப் லைட் வெளிச்சத்தில் பூசின மாதிரி ஒரு பணக்காரக் களை. சாதாரண நாட்களில் நாயும் பன்றியும் மோண்டு திரியும் தெருவா இது என்று கேட்கத் தோன்றும் புதிய அழகு!

எல்லோர் வீட்டு வாசலிலும் பெரிய பெரிய பூக்கோலம். குறுக்கிலும் நெடுக்கிலும் மாவிலைத் தோரணம். அதில் வருடம் முழுக்க சுத்தபத்தமாக இருக்க முடியாது. ஒரு மூன்று நாளைக்கு மட்டும் இப்படி இருந்து விட்டுப் போகும் தீர்மானம் புரிகிறது.

அனைத்துத் தறிமேடையும் அடங்கிக் கிடக்கிறது.

பாலிதீன் தாள், பழைய வேட்டிக்குள் பட்டுத் தறியை கட்டிப் போட்டு விட்டு எல்லோருமே வீதிக்கு வந்து விட்டார்கள்.

பழையதைப் பொறுக்கி விற்கும் பிசுக்குத் தாத்தாகூட இருப்பதில் தெளிவான ஒரு வேட்டியுடன் சட்டை போட்டுக் கொண்டிருக்கிறார்.

பந்தலுக்குள் ரேணுகா தேவி இடுப்பில் எவர்சில்வர் குடத்துடன் எழுந்தருளியிருக்கிறாள். நிஜமாலுமே ஒரு தேவதை வானம் விட்டு நீங்கி வந்து பந்தலுக்குள் புகுந்த மாதிரிதான் இருக்கிறது.

ஏழை சமூகத்து வீதிக் கோலாகலம்தான் என்றாலும் படிப்பறிவில்லாத விரல்களில் இப்படி ஒரு சிருஷ்டியை உருவாக்க முடிந்த கலைநயம் ஆச்சரியம் தருகிறது.

உற்றுப் பார்த்தபடியே நின்று கொண்டிருக்கிறார் பகவந்தராவ்.

பொதுவில் சாமி பெயரில் நடைபெறும் ஒரு சம்பிரதாயக் கூத்து இது என்று தனக்குள் நினைத்துக் கொண்டிருப்பவருக்கு, இந்தக் கூத்திலும் ஒரு அற்புதமான கலை ஜீவித்துக் கொண்டிருப்பது தெரிகிறது.

அருகிலேயே நின்று கொண்டிருக்கிறான் மோகன்ராம். பகவந்தராவின் வியப்பை, மௌனத்தை, பக்தியாக உணர்ந்து ஆச்சரியப்படுகிறான்.

“வரவே மாட்டேன்னீங்க... இழுத்துக்கிட்டு வந்தா வந்த இடத்துல உருகி நிக்கறீங்களே...?”

“ஆமாம் மோகன்! வெறும் மஞ்சன்னையும், தண்ணீர்லையும் இப்படிக் கூட ஒரு உருவத்தை உருவாக்க முடிஞ்சதை நினைச்சு சிலிர்த்துப் போய் நிக்கறேன்! ஆமாம் யார் இத செஞ்சது...?”

“நம்ப குப்புசாமி. அதான் சாயப்பட்ற குப்பன்... ஓய் குப்பா வா இங்க...”

மோகன்ராம் அழைப்பின் முன் குப்புசாமி என்னும் குள்ள மனிதன் ஒருவன் மஞ்சன் வேட்டி, துண்டுடன் ஓடிவந்து



நிற்கிறான்.

"நீதான் செஞ்சியா?"

"ஆமாம்."

"எப்படித் தெரியும்... யார்கிட்ட கத்து கிட்டே?"

"கத்துக்கறதா? இதுக்கென்ன பள்ளிக்கூடமா இருக்கு, சொல்லித் தர? சும்மா கைப் போக்குல பண்றதுதானே? அவனையே நினைச்சுக்கிட்டு விரதம் இருந்து செஞ்சா, இருக்கற விரதத்துக்கு ஏற்ப அழகா கைல வந்து உக்காந்துடுவானே ரேணுகாதேவி."

பகவந்தராவ் வியப்புக் கலையாமல் மோகனோடு பந்தலை விட்டு வெளியே வருகிறார்.

"கேட்டியா மோகன்... அவன் எவ்வளவு பெரிய விஷயத்தை சாதாரணமா சொல்லிட்டான்! இவனை எல்லாம் முறைப்படி படிக்க வெச்சிருந்தா எவ்வளவு பெரிய கலைஞனா வந்துருப்பான் தெரியுமா? நம்ம பாரதி மன்றத்துல இதுக்கெல்லாமும் ஏற்பாடுகள் செய்யணும். ஞாபகத்துல வெச்சுக்கோ...."

வீதி மையத்தில் ஒரு சதுர மைதானம் நான்கு முனைக் கயிற்றால் உருவாகியிருந்தது. நடுவில் நிறைய வண்டல் மண் அடித்து அதில் சின்னஞ்சிறிசுகள் குதித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

எல்லோரையும் ஒரு வளர்ந்தவன் விரட்டி போட்டி ஆரம்பமாகப் போகிறது என்கிற ஜுரநரை உருவாக்கிக் கொண்டிருந்தான்.

சற்றுத் தள்ளி ஒரு கூட்டம் கழிகளைச் சுழற்றியபடி ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கிறது. பாலன் என்று ஒருவன் அதில் புதிய முகமாய்த் தெரிந்தான். மோகன்ராமையே இமைக்க மறந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

'குறைந்தது மூன்று மாதத்திற்காவது மோகன்ராமைப் படுத்த படுக்கையாகக் கிடத்த வேண்டும்' என்று பாம்பே மணியன் சொன்னதோடல்லாமல் ஒரு பத்தாயிரத்தை அநாயாசமாகத் தந்திருப்பதெல்லாம் மற்றவர்களுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை!

அடித்தார் வரிசையில் ஒரு குறிப்பிட்ட ரக வீச்சு இடுப்பு சுற்றி கடக்கும் போது பின் முதுகுத் தண்டு வடத்தில் ஸ்பைனல் கார்டுக்கு நேராகவே போய் அடி விழும். அந்த ராஜஎலும்புதான் மனிதன் நிமிர்ந்து நிற்கவே அடித்தளம். சமயத்தில் அதை நொறுக்கும்போது உயிர் நாடியே மரத்து செயலிழந்து போய் விடும் அபாயம் உண்டு.

அந்த வகையில் கன்யாகுமரி வரை போய் அதில் தேர்ந்த நாட்டார்குருக்களிடம் பயிற்சி பெற்று வந்திருக்கும் அவனை, கூலிக்கு விலை பேசிக் கூட்டி வந்தாயிற்று... இனி எப்படியாவது மோகன்ராமை உள் இழுத்து விட்டால் போதும்... அதற்கும் ஏற்பாடு செய்திருந்தான் மணியம். அதுவும் வெங்கட்ராமய்யர் மூலமாகவே...

இதோ...

'என்ன



வக்கீலய்யா... எப்படி இருக்கு ஏற்பாடெல்லாம்?"

"அமர்க்களம். அம்மன் உருவம் அற்புதமா வந்திருக்கு. சின்ன கிறல் கீறல் இல்லை."

"எல்லாம் அவ அனுக்ரஹம். இந்தத் தடவை சிலம்பப் போட்டிக்கு நீங்கதான் தலைமைதாங்கணும்."

"ஐய்யய்யோ... எனக்கு சிலம்பத்துல அஞ்சடி, பத்தடி கூட தெரியாது. என்னைப் போய்..."

"அப்படி எல்லாம் சொல்லப்படாது... இந்தத் தடவை முதல் தடவையா ஆயிரத்து ஒரு ரூபா பரிசா வேற அறிவிச்சிருக்கோம். மதுரைல இருந்தெல்லாம் முண்டா தட்டி ஆட்கள் வந்திருக்காங்க. அமோகமா நடக்கணும்னு வேண்டிக்கிட்டு ஆரம்பிச்சு வையுங்க."

"அப்பா மோகன், நீயும் இன்னிக்கு களம் எறங்கறே..." - வெங்கட்ராமய்யர் சூது தெரியாமல் பேசுகிறார்.

"நானா... வேண்டாம் வேண்டாம். எனக்கு டச் விட்டு ரொம்ப நாளாச்சு..."

"அட என்னப்பா நீ... தேசிகாச்சாரிகிட்ட நேத்து கூட மோதிக்கிட்டிருந்தேன்னாங்க. டச் விட்டுப் போச்சுன்னுகிட்டு. இறங்கறே நீ..."

சொல்லிவிட்டு கைக் கடிகாரத்தைப் பார்க்கிறார் வெங்கட்ராமய்யர். மணி ஒன்பது!

இருட்டில் மலை அடிவாரத்து ஆசிரமம் நோக்கிச் செல்வது என்பது இத்தனை கஷ்டமாக இருக்கும் என்று நபீஸா நினைக்கவேயில்லை.

முக்காடிட்டுக் கொண்டு சால்வைக்குள்

---

**"லீவு லெட்டர்ல உண்மையான காரணத்தைத்தான் எழுதணும்னு சொன்னது வாஸ்தவம்தான்; அதுக்காக, 'வடகம் பிழியணும்'னு எழுதி அனுப்பணுமா என்ன?"**

***— சீர்காழி வி. ரேவதி***



அவள் நடப்பதைப் பார்த்தால் அரை இருட்டில் பீதியாகக் கூட இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட இடத்தில் அவள் கடந்து செல்வதை ஊர்ஜிதம் செய்யும் ஒருவன் அங்கிருந்து போட்ட பிளான்படி போலீஸ் ஸ்டேஷனுக்கு நடக்க ஆரம்பிக்கிறான்.

ஸ்டேஷன் தூங்கி வழிந்தபடி கிடக்கிறது! ஏட் மட்டும் எதையோ கிறுக்கியபடி... உள்ளே நுழையும் அவனை இளக்காரமாய்ப் பார்க்கிறார்.

"என்னா ஏழுமலை... அதிசயமா இந்தப் பக்கம் வந்திருக்கே. என்ன விஷயம்?"

"சப்-இன்ஸ்பெக்டர் எதுவும் சொல்லலியா?"

"சொல்லலியே..."

"இப்ப அவர் எங்கே?"

"இந்நேரம் வீட்ல கவுந்தடிச்சுப் படுத்துக் கிடப்பாரே..."

"போன் இருக்குல்ல...?"

"இருக்கு... போடணுமா?"

"போடு... மலை ஆசிரமத்துல அந்த தேசிகாச்சாரி கிழவன் நபீஸாங்கற பொம்பளைய கத்தியால குத்திப்பிட்டான்னு சொல்லு. விடிஞ்சா சாதிக் கலவரமா வெடிக்கப் போவுதுன்னு சொல்லு."

"எலேய்... என்னாடா சொல்றே?"

"எல்லாம் ஒரு கணக்குதான்! நீ கண்டுக்காதே. எங்களுக்குத் தெரியும் எல்லாம்."

"ஏண்டா, சாராயம் கஞ்சாவோட உங்களொள்ள நிறுத்திக்கப்படாதா... ஏண்டா இப்படி ஜாதிமதம்னுல்லாம் தாவறீங்க?"

"என்ன பெரிசா ஞாயம் பேசறே... பிரச்னைக்குத் தகுந்த ஆயுதத்த நாங்க எடுப்போம். உனக்குப் புரியாது ஏட்டு. அந்தக் கிழவியோட ஆளுங்க கம்ப்ளைன்ட் கொடுக்க வருவாங்க. எஃப்.ஐ.ஆர். போடும் போது அவங்க சொன்னாலும் சொல்லாட்டியும் அந்தக் கிழவன் பேர் எஃப்ஐஆர்ல வரணும். அப்படியே அவனைப் பிடிச்சுக்கிட்டு வந்து உள்ற போட்டுடு. இப்ப இல்ல... காலைல. ஞாபகத்துல வெச்சுக்கோ.... ஆமா மணி என்ன?"

"ம்... ஒம்பதே முக்கால்!"

"தெருவுல போட்டி நடந்துகிட்டு இருக்கும். நம்ம புதுகாந்திய மதுரைக்கார பாலன் போட்டுத் தள்ளியிருப்பான்..."

"என்னடா சொல்றே நீ...?"

"நான் ஒருத்தன் உன்கிட்ட ஒளறிகிட்டு. போன் போட்டு ஏழுமலை வந்துட்டு போனாங்கறத எஸ்.ஐ.கிட்ட சொல்லிடு, மறந்துடாதே. வர்ட்டா... விசயம் பிசிறடிச்சுடப்படாது ஏட்டு. பாத்து நடந்துக்க."

"விர்ர்ர்... விர்ர்ர்..." கழிகள் சுழல காற்று

ஜிழிபட்டு அலற, விசித்திர சப்தமெல்லாம் எழும்பியது. மோகன்ராமும் பாலன் என்னும் அந்த மதுரைக்காரனும் பிளந்து கட்டிக் கொண்டிருந்தனர். சுற்றி வளைத்து நிற்கும் கூட்டத்தில் கனகாவும் இருந்தாள். பீதியோடு அந்த வீர விளையாட்டைப் பார்த்துக் கொண் டிருந்தாள்.

சாலையில் போடப்பட்ட வண்டல், பல சமயம் சொல்லி எரியப்பட்டு பல பேர் கண் களைக் கரிக்க விட்டது. சமயங்களில் கழி முனை கூட்டத்தவர் முகம் முன் கூட சென்று திரும்பியது.

ஆனால் அடித்தார் வரிசை விளையாட்டு அதன் நியதியிலிருந்து விலகி எங்கெங்கோ போய்க் கொண்டிருக்கிறது. விவரமறிந்த சிலம் பாடிகள் அதைப் பார்த்து தங்களுக்குள் குசு குசுத்துக் கொள்ள, மோகன்ராம் விழாமல் சமாளித்துக் கொண்டிருந்தான்.

அந்த வேகத்திற்கு நடுவிலும் தேசிகாச் சாரியை நினைத்து, வியக்காமல் இருக்க அவனால் முடியவில்லை. அவர் எதற்காக அத் தனை அவசரத்தோடு பூட்டை உடைக்கும் வித்தைக்கு அடிக்கல் போட்டார் என்று இப்பொழுது அவனுக்குப் புரிகிறது.

பாலனின் வீச்சில் அவனது இடுப்பு முன் கழி விழுந்து விழுந்து தடுக்கிறது. ஒருமுறைக்கு நூறு முறை தடுத்தாகி விட்டது. ஆனாலும் பாலன் விடுவதாக இல்லை.

பதிலுக்கு அவனுக்கே இந்த வீச்சை திருப் பினால்?

மோகன்ராம் தடுத்துக் கொள்வதோடு பால னது தப்பான வீச்சை இப்பொழுது அவனும் போடத் தொடங்குகிறான்.

சரியான பதிலடி. தெரியவே தெரியாது என்று எல்லோரும் நினைக்கும் பதிலடிதான். ஆனால் பாலன் போடுவதைப் பார்த்தே உட னடியாகக் கற்றுக் கொண்டு விட்டான் மோகன்.

'உய்ய்ங்ங்.. உய்ய்ங்ங்..'' என்று இப்பொழுது மோகனின் கழி பாலனின் இடுப்புப் பிர தேசத்தை சுற்றிச் சுழல்கிறது.

மோகனைப் போல பாலனால் தடுத்துக் கொள்ள முடியவில்லை. மூன்று நான்கு முறை தவறிய வீச்சு ஐந்தாவது முறையில் தண்டு வடம் மேல் 'பம்'மென்று அழுத்தமாகவே தாக்குகிறது.

'அம்மாாா...' என்கிற அலறலோடு பாலனின் கைக்கழி வானம் எகிறி கூட்டம் நோக்கி கீழே விழ, அப்படியே சுருளுகிறான் பாலன்.

''ஏய் மோகன் என்ன இது...? முறை யில்லாம ஆடிக்கிட்டு. இப்படியா முரட் டுத்தனமா அடிப்பே?''



''அந்த ஏலக்கடைக்காரருக்கு, 'மூணு' சம் சாரமா?''

''உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''ஏலம் விடறபோது, 'முதல் தாரம், ரெண் டாம் தாரம், மூணாம் தாரம்'னு சொல்லி ஏலம் விடறாரே!''

— ஆரூர் அரசு

---

மிகப் பொறுமையாக அதுவரையில் இருப் பது தெரியாமல் இருந்த ஜவஹர், ஏறிவந்து மோகன்ராமின் தோளைப் பிடித்துக் கீழே தள்ளுகிறான். பாலனிடம் தப்பிவிட்ட உன்னை இந்த இடத்திலேயே வேறுவிதத்தில் அடித்தால்தான் ஆத்திரம் அடங்கும் என்கிற அவன் வேகம் அவனது கூட்டத்துக்கும் புரிந் ததோ என்னவோ, ஆளுக்கொரு கழியால் தாக்க ஆரம்பித்தனர்.

குறுக்கே புகுந்து தடுக்கப் பார்த்த பகவந்த ராவுக்கும் அடிவிழுந்தது. கூட்டமும் சிதற ஆரம்பித்தது. குழாய் விளக்குகள் புகை கக் கியபடி சப்தம் போட்டு வெடித்துச் சிதறு கின்றன.

வெங்கட்ராமய்யர் ஓடிப் போய் ரேணுகா அம்மன் விக்கிரகம் முன்நின்று கொண்டார். அந்த வார்ப்பட உருவுக்கு எந்த சேதமும் வந்து விடக் கூடாதே என்று நடுங்க ஆரம்பித்தார்.

மூணுக்கென்று மின்சாரம் வேறு போய் குத்துவிளக்கு வெளிச்சம் மட்டும் கொஞ்சம் போல் ஒளிவிட, வீதியில் அங்கும் இங்குமாய் பலர் குறுக்கும் நெடுக்கும் ஓடும் சப்தமும் கூக்குரலும் மட்டும் தெளிவாகக் கேட்கிறது.

'ஐய்யய்யோ.... என்ன இது மங்கலமான திருவிழா இப்படி ரசாபாசத்தில் முடிந்து விட் டதே..' என்று அவர் அங்கலாய்க்க மகாலட் சுமி கனகாவுடன் இருட்டில் மோகன் ராமைத் தேடிக் கொண்டிருந்தாள்.

''மோகன்... மோகன்...'' என்று அவள் கதறு வது தெளிவாகவே காதில் விழுகிறது. சடசட வென மெழுகுவர்த்திகளும் லாந்தர் விளக்கு களும் ஏற்றப்பட்டு வாசலுக்கு வாசல் வந்து நிற்க வீதியில் மோகன்ராம் ஒரு மூலையிலும்,



''எங்க மாமனார் ரொம்பவும் குசும்புப் பேர்வழி''

''எப்படிச் சொல்றே?''

''கல்யாணம் முடிஞ்சதும் மாருதி வாங்கித் தரேன்னு சொல்லிட்டு, ஒரு குரங்கைப் பிடிச்சுக் கொடுத்துட்டாரு!''

— பொள்ளாச்சி கே. சித்ரா



''நம்ம படத்தோட கிளைமாக்ஸை எப்படி வெச்சுக்கலாம்?''

''வழக்கமா எல்லா படத்திலேயும் வைக்கற மாதிரி கடைசியிலேயே வெச்சுக்கலாம் சார்!''

— வி. ரெங்கநாதன்

பாலன் இன்னொரு மூலையிலும் சுருண்டு கிடந்தனர்.

மகாலட்சுமி மகனை நோக்கி ஓட ஆரம்பித்தாள்!

தரையில் குப்புறக் கிடந்தவனை திருப்பி மடி மேல் போட்டுக் கொள்ள ஆயத்தப்பட்ட போதுதான் அந்த இன்னொரு அநியாயமும் தெரியவந்தது. அடிவயிற்றில் ஆழமாய் ஏறிய நிலையில் கைகளை ரத்தச் சகதியோடு நிரடியது கத்தி ஒன்று!

ஒருக்களித்து சாத்தியிருக்கும் கதவைத் திறந்து கொண்டு உள் நுழைகிறான் இஸ்மாயில். மணி பத்தைக் கடந்து விட்டிருக்கிறது. நபீஸா சாதாரணமாக இந்நேரம் தூக்கத்தில் குறட்டை கட்டியிருப்பாள்.

இப்படிக் கதவெல்லாமும் திறந்து கிடக்காது. விளக்குகளும் எரிந்து கொண்டிருக்காது. இது என்ன வழக்கத்திற்கு நேர் மாறாக....

"பாட்டி... பாட்டி..." – குரலை அனுப்பியபடி சட்டையைக் கழற்றுகிறான். சாதாரணமாக ஒடுங்கும் படுக்கை மூலையையும் எட்டிப் பார்க்கிறான். காலியாகக் கிடக்கிறது.

எங்கே போயிருப்பாள்? என்னும் கேள்வி எம்பிக் குதிக்கிறது. உள்முழுக்கப் பார்த்து விட்டு வெளியே வந்தபோது மீரான்சாயபு தன் பெட்டிக் கடையை ஏறக் கட்டிவிட்டு சாவிக் கொத்து சப்திக்க நடந்து கொண்டிருக்கிறார் வீதியில்...

"என்னப்பா... உன் பாட்டி இந்த ராத்திரியில எங்க போகுது, சால்வைய சுத்திகிட்டு...?" என்று கேள்வியையே அவன் வரையில் பதிலாகத் தருகிறார்.

இஸ்மாயில் திகைத்துப் போய் யோசிக்க ஆரம்பிக்கிறான்.

'பாட்டி நிச்சயமாய் மலைஅடிவாரத்துக்கு பானுவைப் பார்த்து வரத்தான் போயிருக்க வேண்டும்' என்கிற சரியான தீர்மானத்துக்கு வருகிறான். கோபத்தோடு கொஞ்சம் பயமும் கலந்து வருகிறது.

அடுத்த நொடி சட்டையை மாட்டிக் கொண்டு ஒரு டார்ச் லைட்டையும் எடுத்துக் கொண்டு கிளம்புகிறான்.

ஆசிரமம் அமைதியாக இருக்கிறது. சின்ன லாந்தரின் வெளிச்சத்தில் சுவர்க் கோழி சப்தத்துக்கு நடுவில் மெலிதான தென்றல் வீச்சோடு கிடக்கிறது.

பகலிலேலேயே பார்த்துத்தான் வர வேண்டும். இரவில் கேட்கவே வேண்டாம். டார்ச் லைட் வெளிச்சத்தை உருட்டிக் கொண்டு இஸ்மாயில் வரும்போது அவன் நடந்து வரும் சப்தம் தவிர வேறு சப்தமே இல்லை.

நேராக ஆசிரம வாசலுக்கு வந்து நிற்கிறான். உள்ளே ஆழ்ந்த அமைதி. சில விநாடி வரை மௌனமாக நின்றவன், "பானு" என்கிறான் உரக்க... "யாரது?" என்று பதில் கேள்வி உள்ளிருந்து... தொடர்ந்து ஆசிரமக் கூரையின் தட்டிக் கதவு வழியாக லாந்தலும் கையுமாக எட்டிப் பார்க்கிறார் தேசிகாச்சாரி.

இஸ்மாயிலைப் பார்த்து ஆச்சரியம் கொள்கிறார்.

"என்ன தம்பி... இந்த நேரத்துல...?"

"பாட்டிய தேடி வந்தேன். இங்க வரலையா?"

"உன் பாட்டியா... இங்க எதுக்கு வரணும்...?"

"ஒண்ணுமில்லை. நான் வரேன்" – இஸ்மாயில் திரும்பிப் போகிறான். அப்பொழுது ஒரு ஈனக்குரல் அருகில் ஆசிரம ஆலமரத்தடியில் இருந்து வந்தது.

"இஸ்மாயில்ல்ல்...!"

(தொடரும்)

## தில்லி நியூஸ் :

**கா**ங்கிரஸ் கட்சி அலுவலகத்தில், கட்சித் தலைவர் மைக்கில் பேசும்போது, கருணாகரன், பலராம் ஜாக்கர், விஜயபாஸ்கர ரெட்டி ஆகிய 'பழம்பெரும்' தலைவர்கள் காதில் எதுவுமே விழுவதில்லை! கூட்டம் நடக்கும் அறையில் இன்னும் சில ஸ்பீக்கர்களைப் பொருத்திவிடலாம் என்று பிரணாப் முகர்ஜி யோசனை தெரிவித்திருக்கிறார். "காரிய கமிட்டியில்தான் பிரயோசனமாக எதுவுமே நாம் பேசுவதில்லையே? அப்புறம் எதற்கு ஆளாளுக்கு மைக், ஹால் முழுக்க ஸ்பீக்கர்? அப்படியே பேசுவதானாலும் பைலட்தான் ஏதாவது சொல்லுகிறார். அவருக்கு மைக்கே தேவை இல்லை!" என்று ஒரு உத்தரபிரதேச உறுப்பினர் சொன்னபோது ஒரே சிரிப்பு!



• சங்மா

• வருகிற நாடாளுமன்றக் குளிர்காலக் கூட்டத் தொடர் ஆரம்பத்தில் எல்லா உறுப்பினர்களுக்கும் மொபைல் ஃபோன் கொடுப்பது என்று சங்மா முடிவெடுத்திருக்கிறார். ஆனால் பல நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு உள்ளூர உதறல். மொபைல் ஃபோன் இருந்தால் தங்களுடைய அந்தரங்க சமாசாரங்கள் எல்லாம் அநாவசியமாக வெளி வந்து விடுமே என்று



• கே. ஆர். நாராயணன்

பயப்படுகிறார்கள். 'அதற்கென்ன? கொடுக்கிற வசதியைத் தங்கள் செயலாளர்களிடம் விட்டுவிட்டால் போச்சு! அவர்களாவது அநுபவிக்கட்டுமே?' என்று முடிவு எடுத்து விட்டார்கள். ஓசியில் மொபைல் ஃபோன் கிடைத்தால் எம்.பியா விடுவார்?

## எழுதப் படிக்கத் தெரியாத சி.பி.ஐக்காரர்கள்!



- ராஜேஷ் பைலட்

● ஐ.ஏ.எஃப். விமானத்தைத் தமது சொந்த உபயோகத்துக்குப் பயன்படுத்திய, பாதுகாப்புத் துறை இணை அமைச்சர் சோமு, அரசுக்குச் செலுத்திய பணம் சுமார் 28000 ரூபாய்தான். அதாவது சென்னை - தில்லி எக்ஸிக்யூடிவ் வகுப்பு இந்தியன் ஏர்லைன்ஸ் டிக்கெட் 9400 ரூபாயை மூன்றால் பெருக்கி, ரூபாயைக் கட்டி விட்டார் சோமு. ஒரு சார்ட்டர்ட் ஃப்ளைட் என்று வைத்துக் கொண்டால் கூட ஏழு லட்ச ரூபாய் கொடுத்தாக வேண்டும் என்கிறார்கள், பாதுகாப்பு அமைச்சக அதிகாரிகள். அதாவது, ஒரு ட்ரிப்புக்கு!

● கிழக்கு தில்லி நாடாளுமன்றத் தொகுதிக்குப் போட்டியிடும் முன்னாள் காங்கிரஸ் தலைவர் எச்.கே.எல். பகத்தின் சின்னம் என்ன தெரியுமோ? சைக்கிள். ஆமாம், தமிழ் மாநில காங்கிரசின் சின்னமேதான்!

● சி.பி.ஐ.யின் மூத்த கான்ஸ்டபிள்களில் எழுபது சதவிகிதம் பேர், எட்டாவது வகுப்புக் கூட பாஸ் செய்யாதவர்கள். மீதிப் பேர் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் என்ற விவரம் வெளியாகி இருக்கிறது. இதில் விசேஷம் என்ன என்றால், இவர்கள் பலரையும் பிரமோஷன் கொடுத்து சீனியர் சப்-இன்ஸ்பெக்டர்களாகவும், தலைமை கான்ஸ்டபிள்களாகவும் ஆக்கிவிட்டார்கள்! இவர்கள்தாம் பல முக்கியமான, ரகசியமான கேஸ்களில் விசாரணை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். 'கான்ஸ்டபிள்கள்தாம் மக்களிடம் பேசி, விஷயத்தைக் கிரகித்து, ரிப்போர்ட்டுகள் தயார் செய்து, உயர் அதிகாரிகளிடம் கொடுக்க வேண்டும். இவர்களே எழுதப் படிக்கத் தெரியாதவர்களாகவும், நாலாம் வகுப்பும், எட்டாம் வகுப்பும் படித்தவர்களாகவும் இருந்தால், அந்த ரிப்போர்ட்டுகளின் லட்சணம் எப்படி இருக்கும்?' என்று அங்கலாய்க்கிறார் ஒரு மூத்த அதிகாரி!

● குடியரசுத் தலைவர் தேர்தலில், 'மாநிலங்களுக்கு போய் உங்களுக்கு ஆதரவு தேடிக் கொள்ளுங்கள்!' என்று சில நண்பர்கள் சொன்ன யோசனையை, துணை ஜனாதிபதி கே.ஆர். நாராயணன் நிராகரித்து விட்டார். 'அப்படி எல்லாம் வோட்டுக் கேட்டு நான் வெற்றி பெற நினைக்கவில்லை!' என்று மறுத்து விட்டார்.

- நியூஸ்வாலா

**''நம்ம தலைவர் இந்த அளவுக்கு பயப் படறது சரியில்லை.''**

**''ஏன் என்ன ஆச்சு?''**

**''என்னுடைய குழந்தைக்குப் பெயர் வைக்கச் சொன்னா, கூட்டணி தலைவர்களை கலந்து பேசிட்டு வைக்கிறதா, சொல்லிட்டாரு!''**

**- அனந்த பத்மாவதி**





"பொண்ணு ரொம்ப அடக்கமா, பதவிசா இருக்கும்னு சொன்னீங்களே, பேர் என்ன?"

"சௌமியாவ்!"

- *சீர்காழி வி. ரேவதி*



# நூறு கோடியில் விளையாடுகிறார்கள்!

• கடைசி நிமிட மேற்பார்வை - இந்திய ஒலிம்பிக் கூட்டமைப்பின் தலைவர் சுரேஷ் கல்மாடியும், கர்நாடக விளையாட்டுத் துறை அமைச்சரும்.

ஜனவரி 1996ல் என்று அறிவித்தார்கள். பிறகு டிசம்பர் மாதத்தில்தான் என்று தள்ளிப் போட்டார்கள். "இது இறுதி அறிவிப்பு - 1997 மே பதினெட்டாம் தேதி கட்டாயம் தொடங்கி விடும்" என்றார்கள். இதுவும் காற்றில் கரைந்து போய் மே 31-ஆம் தேதியன்றுதான் நான்காவது தேசிய விளையாட்டுப் போட்டிகள் நடைபெறப் போவதாக முடிவெடுத்தார்கள்.

குறைகளுக்கு நடுவேயும் கம்பீரமாக பெங்களூரில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் இந்தப் போட்டிகள் ஜூன் ப...னாராம் தேதி வரை தொடரவிருக்கின்றன.

"தேதியைத் தள்ளிப் போட்டதற்குக் காரணமுண்டு. அவற்றில் முக்கியமானது பொருளாதார நெருக்கடி. கட்டுமானப் பணிகளுக்கு மட்டுமே நூறு கோடி ரூபாய் செலவு செய்கிறோம் எனும்போது தாமதம் தவிர்க்க முடியாத ஒன்று" என்றிருக்கிறார் கர்நாடக மாநிலத்தின் விளையாட்டுத் துறை அமைச்சர் அஜய்குமார் சர்நாயக்.

தொடக்கத்தில் தள்ளிப் போனதற்கு வேண்டுமானால் இவர் கூறிய காரணம் சரியாக இருந்திருக்கலாம். ஆனால் மே பதினெட்டிலிருந்து 31 ஆக தேதி தள்ளிப் போனதற்குக் காரணம் - கிரிக்கெட். நான்கு கோடி ரூபாய் கொடுத்து தேசிய விளையாட்டுப் போட்டிகளை ஸ்பான்சர் செய்ய முன் வந்த வீடியோகான் நிறுவனம், மே பத்திலிருந்து, இருபத்தி எட்டு வரை சுதந்தர தினக் கோப்பை கிரிக்கெட் பந்தயங்கள் நடைபெற இருக்கின்றன என்பது முடிவானதும் பின் வாங்கியதாம். கிரிக்கெட் மோகம் தலைக்கேறிய மெஜாரிட்டி இந்தியர்கள் சர்வதேச கிரிக்கெட் போட்டிகள் இந்தியாவில் நடைபெறும்போது அதை விட்டு விட்டு மற்ற விளையாட்டுக்களின் பக்கம் திரும்ப மாட்டார்கள் என்ற எண்ணம்தான் காரணம். இதனால்தான் மே 31 என்று தேதி குறிக்கப்பட்டது.

இது ஒரு புறமிருக்க, நூறு கோடி ரூபாய்க்கு கட்டுமானப் பணிகள் என்ன? தடகள மைதானத்திற்கு செயற்கைத் தளம், செயற்கைப் புல்வெளி பதித்த ஹாக்கி ஸ்டேடியம், இரவைப் பகலாக்கும் ஒளிவிளக்குகள் என்று தெற்காசிய விளையாட்டுகளின்போது சென்னையில் உருவான ஏற்பாடுகளின் அடிச்சுவட்டில் பெங்களூரும் செல்லத் தொடங்கி இருக்கிறது.

இந்த ஏற்பாடுகளின் காரணமாக சில சங்கடங்களும் ஏற்பட்டன. விளையாட்டுத் தேதிகளுக்கு முன்பே பிரபல காண்டீரவா ஸ்டேடியத்தில் விளையாட்டு வீரர்கள் பயிற்சி எடுத்துக் கொள்வது வழக்கம். ஆனால் அங்கு கடைசி நிமிஷம் வரை கட்டுமானப் பணிகள் என்பதால் பி.ஆர்.வி. மைதானத்தில் அவர்கள் பயிற்சி எடுத்துக் கொள்ள வேண்டிய சூழல். அங்கோ, ஏகப்பட்ட சௌகரியக் குறைச்சல்கள்.

மைசூரில் "ஸ்ரீ சாமுண்டி விஹார் இன்டோர் காம்ப்ளெக்ஸ் முதலில் திறக்கப்பட, அதைத் தொடர்ந்து காண்டீரவா ஸ்டேடியத்தை மாநில முதல்வரும், கோரமங்களா இன்டோர் ஸ்டேடியத்தை ஆளுனரும் (ஒருவழியாகத்) திறந்து வைத்திருக்கிறார்கள். கபடி விளையாட்டுகள் மட்டும் பனசங்கரி பகுதியில் உள்ள மாநகராட்சித் திடலில்.

வெவ்வேறு இடங்களில் ஒரே நாளில் பல்வேறு போட்டிகள் நடக்கும்போது நிருபர்களுக்குத் திணறல் ஏற்படுவது சகஜம். இந்தமுறை இதற்கு ஒரு தீர்வு கிடைத்திருக்கிறது. கம்ப்யூட்டர் பட்டன்களைத் தட்டினால், 23 விளையாட்டுப் போட்டிகளிலும் லேட்டஸ்ட் நிலவரம் என்ன என்பதைத் தெரிந்து கொள்ளலாம். பல்வேறு விவரங்களை உடனுக்குடன் அளிக்க, கம்ப்யூட்டர் பயிற்சி பெற்ற உள்ளூர் மாணவர்களையே நியமித்து இருக்கிறது, இந்த விஷயத்திற்குப் பொறுப்பேற்றிருக்கும் சி.எம்.ஸி. நிறுவனம்.

— ஜி.எஸ்.எஸ்

# கல்கி-பாலு ஜுவல்லர்ஸ்

இணைந்து வழங்கும்

# ரிசப்ஷன் - கச்சேரி ஜோக்

போட்டி - 6

# முடிவு

''என்னதான் மாப்பிள்ளை செக்யூரிட்டி ஆபீசராக இருந்தாலும் அதுக்காக ரிசப்ஷனுக்கு வந்தவங்களை 'வாங்க'ன்னு கூப்பிடாம 'இன்விடேஷன் எங்கே காட்டு'ன்னு சொல்றது சரியில்ல!''

– ஏ. இராசேந்திரன்

❖❖❖❖❖

"என்ன மாப்பிள்ளை மட்டும் தனியா நிற்கிறார். பொண்ணு எங்கே?"

" 'ரிசப்ஷனிஸ்ட்' வேலைல இருக்கற பொண்ணாம். வாசலுக்கே போய் நின்னு வர்றவங்களுக்கு வரவேற்பு கொடுக்குதாம்!"

- எஸ். மாலதி

❖❖❖❖❖

"ரிசப்ஷன்ல வழக்கமா மெல்லிசைக் கச்சேரிதானே வைப்பாங்க. இங்கே மட்டும் என்ன புதுசா பட்டிமன்றம்?''

''மாப்பிள்ளை த.மா.கா. அனுதாபியாம். அதான், 'மூப்பனார் பிரதமர் ஆக முடியாமல் போனதற்குக் காரணம் நயவஞ்சகமா, நம்பிக்கைத் துரோகமா?'ன்னு பட்டிமன்றம் நடத்தறாங்க!''

– கு. கணேசன்

❖❖❖❖❖

''ஆமாம்... ரிசப்ஷனில் மணப்பெண்ணின் தம்பி, வருவோர்க்கெல்லாம் சந்தனம், சர்க்கரை நீட்டும்போது, ஏதோ ஒன்றை அவர்கள் கையில் திணிக்கிறானே என்ன?''

"மொய் எழுத கவர்...''

– எஸ். விமலா

''பெண் வீட்டாரிடம் வலுக்கட்டாயமாக கச்சேரி வைக்கச் சொன்னது தப்பாப் போச்சு!''

'என்னாச்சு?''

''கச்சேரியின் நடுநடுவே, 'கச்சேரியின் இப்பகுதியை உங்களுக்கென வழங்குபவர்கள் பெண் வீட்டார் மட்டுமே'ன்னு அடிக்கடி சொல்றாங்க.''

– ம. தக்ஷிணாமூர்த்தி

❖❖❖❖❖

''ரிசப்ஷன்ல நின்னுக்கிட்டிருக்கிற மாப்பிள்ளைக்குக் குழந்தை மனசு!''

– வே. செந்தில்குமார்



''என்னதான் மாப்பிள்ளையோட அப்பா அரசியல்வாதியானாலும், துண்டு ஏந்தியா மொய் வசூல் பண்றது?''

– தே. ராஜாசிங் ஜெயக்குமார்

❖❖❖❖❖

''கல்யாண ரிசப்ஷன் கச்சேரில காதல் பாட்டு பாடும்போது, கல்யாணப் பொண்ணும், மாப்பிள்ளையும் ஏன் அழுதாங்க?''

''அவங்களுக்கு அவங்களோட பழைய காதலர்கள் ஞாபகம் வந்திடுச்சாம்.''

– திமிரி. சொ. சரவணபவன்

❖❖❖❖❖

''பாட்டுக் கச்சேரிக்குப் பதிலா ரிசப்ஷன்ல பஜனை வச்சபோதே எனக்குச் சந்தேகம்தான்!''

''என்ன ஆச்சு?''

''டின்னர் கிடையாதாம். சுண்டலும் பழமும்தான்!''

– பர்வதவர்த்தினி

❖❖❖❖❖



# பதவியை எதிர்பார்த்தா கட்சியில் சேர்ந்தேன்?



தமது ஐம்பத்தேழாவது வயதில் தி.மு.க.வில் தன்னை இணைத்துக் கொண்டிருக்கிறார் டாக்டர் சி.என்.ஏ. பரிமளம். பேரறிஞர் அண்ணாவின் வளர்ப்பு மகன்.

''அது என்ன, இத்தனை ஆண்டுகள் வெளியே தங்களைக் காட்டிக் கொள்ளாமல் திடீரென இப்போது அரசியல் பிரவேசம்?''

## — அண்ணாவின் வளர்ப்பு மகன் பேட்டி

"வெளியே காட்டிக் கொள்ளவில்லைதான். ஏனென்றால் நான் ஆரம்பம் முதலே அரசுப் பணியில் என்னை ஈடுபடுத்திக் கொண்டேன். அரசுப் பணியாளர்கள் எந்த ஒரு கட்சியிலும் உறுப்பினராக இருக்கக்கூடாது என்பது விதி. அதை மீறிய குற்றத்துக்கு நான் - அதுவும் அண்ணாவின் மகன் என்ற பின்னணியைக் கொண்டவன் - ஆளாகக் கூடாது என்பதற்காகவே ஒதுங்கி இருந்தேன்."

"இப்போது மட்டும் எப்படி மீறினீர்கள்?"

"மீறவில்லை. அரசுப் பணியிலிருந்து நானே விரும்பி ஓய்வு பெற்று விட்டேன். மெடிகல் சர்வீஸஸில் தொழுநோய்ப் பிரிவில் உதவி இயக்குநராகப் பணியாற்றி வந்தேன். அப்பா தொடங்கிய கட்சி, அதன் கொள்கைகளை விட்டு விலகி எப்படி என்னால் சிந்திக்க முடியும்? எனவே நீறுபூத்த நெருப்பாக என்னுள் அந்தச் சிந்தனை கனன்று கொண்டே இருந்தது. கடந்த ஐந்தரை ஆண்டுகளாகவே பொது வாழ்வில் தீவிரமாக ஈடுபடுவது குறித்து நினைத்துக் கொண்டிருந்தேன்."

"தி.மு.க.வில் சேருவது என்ற எண்ணம் எப்போது வந்தது?"

"சொன்னால் நம்புவீர்களோ மாட்டீர்களோ? சில நாட்கள் முன்பு அண்ணாவின் வாழ்க்கை வரலாற்றை சுயசரிதையாகத் தொகுத்து வெளியிட்டபோது அந்த விழாவில் நான் தொடக்க உரை ஆற்றியபோது கூட தி.மு.க.வில் சேருவது பற்றிய அறிவிப்பை வெளியிடும் எண்ணம் என்னுள் இல்லை. நான் பேசிவிட்டு வந்து அமர்ந்தவுடன் ரொம்பவும் நெகிழ்ச்சியாக இருந்தது. 'இப்போதே அறிவித்து விட்டால் என்ன?' என்று அந்த வினாடிதான் முடிவெடுத்தேன். உடனே மேடையில் கலைஞரின் காதில், 'நீங்கள் அனுமதித்தால் நான் தி.மு.க.வில் சேருவதை இப்

### நூல் வெளியீட்டு விழாவில் அண்ணா பற்றி கலைஞர் நினைவுகூர்ந்த சில சம்பவங்கள் :

● ஆட்சி இன்னும் அதிக நாள் இருக்காது என்ற பொருளில் சட்டப் பேரவையில் ஒருதரம் காங்கிரஸ் உறுப்பினர் விநாயகம் முதல்வர் அண்ணாவைப் பார்த்துச் சொன்னார் : "Your days are numbered." பட்டென்று அண்ணா சொன்னார்: "My steps are measured."

● அண்ணாவுக்கு அப்போது ஏழு எட்டு வயதிருக்கும். பாட்டியுடன் ஒருமுறை ரயில் பயணம் போய்க் கொண்டிருந்தார். ரயில் கிளம்பிய சிறிது நேரத்துக்கெல்லாம் சிணுங்க ஆரம்பித்த அண்ணா, அந்த மெல்லிய அழுகையை நிறுத்தவே இல்லை. ஒரு கையைப் பின்னால் மறைத்துக்

போதே அறிவிக்க விரும்புகிறேன்' என்றேன். 'செய்யேன். இதற்கு எதற்கு என் அனுமதியைக் கேட்கிறாய்?' என்றார் கலைஞர். ஆற்காடு வீராசாமி அவர்கள் பேசுவதற்கு முன்பாக மைக்கைப் பிடித்து சில வினாடிகளில் நான் இந்த அறிவிப்பைச் செய்தேன். என் குடும்பத்தார் – மனைவி, மகன்கள், மகள், உட்பட யாருக்கும் தெரியாது. 'ஆச்சரியமான அறிவிப்பு' என்று வீட்டில் வந்து சொன்னார்கள்."

"தன்னைப் பற்றித் தானே எழுதுவதுதான் சுயசரிதை. ஆனால் நீங்களோ, அப்பாவின் சுயசரிதையை உங்கள் பெயரில் எழுதியிருப்பது எப்படிச் சரியாகும்?"

"1948லிருந்து இன்று வரை அப்பாவைப் பற்றி 182 நூல்கள் வெளிவந்திருக்கின்றன. இதில் அவர் வாழ்க்கை வரலாறு மட்டும் பல பேரால் எழுதப்பட்ட 72 புத்தகங்கள். அவரவர்கள் தங்களுக்குக் கிடைத்த குறிப்புகளை வைத்து அண்ணா அவர்களின் வாழ்க்கையை எழுதியிருக்கிறார்கள். எனவே அவை ஒரே மாதிரி இல்லை. ஆராய்ச்சி மாணவர்கள் இப்படி மாறுபட்ட செய்திகளால் குழப்பமடைய வாய்ப்பு இருக்கிறது. நான் கொஞ்சம் வித்தியாசமாக நினைத்துப் பார்த்தேன். தன்னைப் பற்றி அண்ணா அவர்கள் தாமே எங்கெல்லாம் சொல்லியிருக்கிறார்களோ, எழுதி இருக்கிறார்களோ அவற்றைத் தோண்டித் துருவி எடுத்து அவரது வார்த்தைகளையே பயன்படுத்தினேன். அது சுயசரிதையாகி விட்டது. நான் வெறும் தொகுப்பு ஆசிரியன் மட்டுமே."

"தி.மு.க. உறுப்பினர் என்ற முறையில் இனி எப்படிச் செயல்படுவீர்கள்?"

"அறிவாலயம் போவேன். தி.மு.க. நிகழ்ச்சிகளில் பங்கேற்பேன். கூட்டங்களில் பேசுவேன். தலைமை இடும் பணியைச் செவ்வனே செய்ய முயல்வேன்."

"தி.மு.க.வில் உறுப்பினர் என்று ஆகிவிட்டால் அண்ணாவின் மகன் என்ற முன்னுரிமையில் ஏதேனும் பதவி கிடைக்கலாம் என்பது கூட நீங்கள் இப்போது தி.மு.க.வில் சேர்ந்ததற்குக் காரணமாக இருக்கலாம் இல்லையா? இப்படிக் கேட்பதற்காகக் கோபித்துக் கொள்ளாதீர்கள்."

"நிச்சயம் கோபிக்க மாட்டேன். 1973ல் எம்.ஜி.ஆர். அ.தி.மு.க. தொடங்கிய கட்டத்தில் முதல் ஆண்டே திண்டுக்கல் இடைத்தேர்தல் வந்தது. 'நீதான் நிற்க வேண்டும்' என்று அவரே என்னை வற்புறுத்தினார். நான் பணிவாக மறுத்து விட்டேன். 1980ல் மத்திய சென்னையில் என்னை எம்.பி. வேட்பாளராக நிறுத்த கலைஞர் எண்ணினார். பணிவாக மறுத்தேன். உங்கள் கேள்விக்கு பதில் கிடைத்து விட்டது என்று நினைக்கிறேன்."

சந்திப்பு : **ராணிமைந்தன்**
படம் : **ஸ்ரீஹரி**

# "தோள்பட்டை வலிக்கிறது!"

...ாண்டு முனகிக் கொண்டே இருந்தார். பாட்டியும், மற்றவர்களும் பலமுறை கேட்டும் பதில் இல்லை. கடைசியில் சொன்னார் : "நீங்க அப்போ ஷட்டரைக் கீழே விட்டபோது கை நசுங்கி விட்டது."

அதுதான் அண்ணாவின் பொறுமை. கடைசி வரை அண்ணாவின் பொறுமையில் மாற்றமே இல்லை!

● சந்திரோதயம் நாடகம். அதில் துரைராஜ் என்ற பாத்திரத்தில் அண்ணா நடிப்பார். சாம்பசிவம் என்ற இன்னொரு பாத்திரம் ஹீரோ. இரண்டு பேரும் சேர்ந்தே வருவார்கள். ஒருநாள் சாம்பசிவமாக நடிப்பவர் வராமல் போக, 'நீ நடி' என்று என்னை இழுத்து விட்டு விட்டார் அண்ணா. ஒரு காட்சியில் துரைராஜ் விஷம் குடித்து இறந்து போக, சாம்பசிவம் அவர் மீது விழுந்து அழ வேண்டும். அன்று நான் நடித்தபோது அந்தக் காட்சியில் உணர்ச்சிவசப்பட்டேன். அண்ணா ஏற்கெனவே அக்காட்சியில் சாம்பசிவத்துக்கு நிறைய வசனம் எழுதியிருந்தார். எனக்கும் ,வசனத்தில் ஆர்வம் உண்டு. எனவே அண்ணா 'இறந்து' கிடக்க நான் என் சொந்த வசனத்தையும் சேர்த்து ரொம்ப நேரம் அண்ணா மேல் விழுந்து தோள் பட்டையைக் குலுக்கி ஏக ரகளை பண்ணிவிட்டேன். நாடகம் முடிந்தபின், 'எப்படி இருந்தது என் நடிப்பு?' என்று அண்ணாவிடம் கேட்டேன். 'ரொம்ப நன்றாகப் பேசினாய்' என்றவர், 'ரொம்ப நேரம் பேசினாய்' என்று நேரிடையாய்ச் சொல்லாமல் 'என் தோள் பட்டைதான் ரொம்ப வலிக்கிறது' என்றார்!



# உல்லாசம்

இரண்டு வளர்ப்பு மகன்களின் கதை. அதனால்தானோ என்னவோ, ரொம்ப ஆரவாரமாகத் தொடங்கி, கடைசியில் ஆணி ஏறின சைக்கிள் ட்யூப் மாதிரி புஸ்ஸாகிறது.

பல்லவன் டிரைவர் எஸ்.பி. பாலசுப்ரமணியத்தின் பையனுக்கு லோக்கல் தாதா ரகுவரன்மேல் ஒரு வித ஈர்ப்பு. அடிக்கடி அங்கே போய்ப் பழகி, தானும் ஒரு அப்ரண்டிஸ் தாதாவாகி விடுகிறான்.

காண்ட்ராஸ்ட் வேண்டாமா? ரகுவரனின் பையன் எஸ்.பி.பி.யின் வீட்டிலேயே வளர்ந்து பாட்டு, கவிதை, இசை என்று ரொம்ப ஸாஃப்டாக, சமர்த்தாக ஆமை வளர்த்துக் கொண்டிருக்கிறான். (ஆமைக்குப் பெயர் இமயவரம்பனாம்)

ஆனால் இரண்டு பேருக்கும் ஒரே ஒற்றுமை (லட்சத்து எட்டாவது ஃபோரின் ரிட்டன் மகேஸ்வரியைக் காதல் செய்வதில்.

இதுவரைக்கும் சரி. பிறகு, எஸ்.பி.பி. தம் வளர்ப்பு மகனுக்காக சொந்த மகனிடம் காதல் துறக்கக் கேட்பது. அதையே ரகுவரனும் பண்ணுவது. அஜித்குமார் தம் காதலைத் தியாகம் பண்ணத் துணிவது. விக்ரம் ஏற்க மறுப்பது. மறுபடி இவரே ஏற்பது... காதல் அல்லது மகேஸ்வரியை ரிங் பாலாக இரண்டு கோஷ்டி தூக்கிப் போட்டு விளையாடித் தீர்ப்பதுதான் உல்லாசம் என்கிறார்கள் புதிய இயக்குநர் இரட்டையர் ஜேடி-ஜெர்ரி.

கடத்தல், அடிதடி, கார் சேஸிங், கவிதை, கவர்ச்சி என்று 'காவா'வாகக் கலந்திருக்கிறார்கள்.

இருந்தாலும் பல காட்சிகள் ரசிக்கவோ, குறைந்த பட்சம் நெளியாமல் உட்கார்ந்து பார்க்கவோ கூட முடியாமல் போகிறது. காரணம், இவர்கள் எடுத்துக் கொண்ட கதையும் கொண்டு போன ஸ்பீடும் இணைய மறுப்பதுதான்.

பல்லவன் பஸ் போலவே ஊர்ந்தும் திடீரென்று வேக மெடுத்தும், அடிக்கடி பிரேக்டவுனாகியும் ஓவர் லோடால் சாய்ந்தும் வலம் வருகிறது திரைக்கதை. ரசிப்புக்கு விருந்தாக எஸ்பிபியும் ரகுவரனும் இருப்பதால் மூச்சுவிட முடிகிறது. விக்ரம் கூடத் தேவலாம். அஜீத் ஏன் இப்படி ஏழுநாள் தாடியும் பரட்டைத் தலை, சிவந்தகண்ணுமாகவே படம் முச்சூடும் அழுது வடிய வேண்டும்?

'பொண்ணுக்குக் கற்புன்னா, ஆம்பளைக்கு சத்தியம்' என்று வசனம் (ஜாலகுமாரன்!) பேசி, அஜீத்தைக் காதலித்துக் கஷ்டப்படும் மகேஸ்வரி, நடிக்கக் கொஞ்சம் மெனக்கெட்டிருக்கிறார். ஆனால் அவரைப் பார்க்கும்படி படம் பிடிப்பதில் ஜீவாவுக்கு என்ன பிரச்னையோ? அவர் முயற்சித்திருக்கிற எந்த ஒரு கோணமும் உதவாமல் சொதப்பியிருக்கிறது.

கமலஹாசன் பாடியிருக்கிற ஒரு பாட்டு, அந்த 'ஆமைத் தோழன்' ஐடியா, ஆபாசமில்லாத காட்சிகள் எனப் பாராட்ட சில விஷயங்கள் ஆங்காங்கே உள்ளை-சோளப்பொறி மாதிரி.

ஆகவே, இது பூனைப்பசி உள்ளவர்களுக்கு மட்டுமான படம்.

— ஆர்.பி.ஆர்.

பாதன் அச்சகத்தில் அச்சிட்டு, பாதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; ஃபேக்ஸ் : 2345621.
ஆண்டுச் சந்தா : ரூ. 208/-; ஆறு மாதச் சந்தா : ரூ. 104/- (உள்நாடு).

தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்

5 கலர் டிவி

இரண்டு நபருக்கு மோட்டார் சைக்கிள்

10 தங்க வளையல்கள் (1 பவுன்)

250 மி. லி. கிங் சைஸ் ரூ. 3.16 ஆதாயம் !

10 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 1000/-

25 தங்க லாக்கட்கள் 1/2 பவுன்

200 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 500/-

400 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 250/-

UJALA
FOR SUPER WHITENESS OF CLOTHES

**உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்**

இப்போது உஜாலாவின் டாம்ப்பர் - ப்ரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - ப்ரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்றநாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமீன்ஸ் இல்லாத ஒயிட்னர் உஜாலா-வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மைபற்றது அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்



Write to : **Jyothy Laboratories (UJALA)**, 2- A. Singarayar Mansion, Abhirami Avenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka